# பாண்டவர் பூமி!

பாகம் 1



## கவிஞர் வாலி



விகடன் பிரசுரம்

# என்னுரை

'ஊக்குவிக்க - ஒருவன்
உண்டாயின் - இன்று
ஊக்கு விற்போன் - நாளை
தேக்கு விற்பான்!' -

என்று நான் கவியரங்கங்களில் பாடுவதுண்டு. எத்தொழிலை எவர் புரினும், அத்தொழிலை அவர் செவ்வனே புரிய அடுத்தவரின் அங்கீகாரமும் அரவணைப்பும் வேண்டும்.

இதுபோன்ற இதிகாசங்களை, எளிய நடையில் நான் எழுத - என் 'சினிமா பிரபலம்' தந்துவிட்ட செல்வாக்கு மட்டுமே, போதுமானதாகிவிடாது.

அடியேன் எழுதுவதை, ஆதரிக்கவும்; முறையானதுதான் என மூதரிக்கவும் - அருந்தமிழில் ஆழங்காற்பட்ட அறிவார்ந்த பெரியோர்கள் வேண்டும்.

அத்தகு பெரியோர்களின் ஆதரிப்பும், மூதரிப்பும் அடியேனுக்கு வாய்த்தது, யான் பெற்ற பேறாகும்.

'அவதார புருஷன்' ஆனந்த விகடனில் வெளியான அன்றே, அதிகாலையில் என்னுடன் தொலைபேசியில் தொடர்புகொண்டு, எனைப் பாராட்டி வாழ்த்தியருளிய பெரியவர் - முத்தமிழ் வித்தகர்; முதல்வர் பெருந்தகை - டாக்டர் கலைஞர் அவர்கள் ஆவார்.

'பாண்டவர் பூமி' வெளியான அன்றே எனைத்
தொலைபேசியில் தொடர்புகொண்டு, வெகுவாகப்
பாராட்டிய பெருந்தகை, பெரியவர் நீதியரசர்
திரு. இஸ்மாயில் அவர்கள். அஃதேபோல் என் எழுத்திற்கு
ஓர் அக்மார்க்காக, சான்றிதழ் தந்து எனை ஊக்குவித்துக்
கொண்டிருப்பவர் - எந்தைக்கு இணையான, எண்பது
அகவைகளைக் கடந்த தமிழ்ப் பேரறிஞர்
டாக்டர் ந. சுப்பு ரெட்டியார் அவர்கள்.

இந்தப் பெரியோர்களின் ஆசிகளையே பிள்ளையார்
சுழியாய்க் கொண்டு - 'பாண்டவர் பூமி'யை எழுதிக்
கொண்டு வருகிறேன்.

இந்த வாய்ப்பினை எனக்கு நல்கி, நாடு தழுவிய
பாராட்டைப் பெற்றுத் தரும் - ஆனந்த விகடன் அதிபரும்
ஆசிரியருமான திரு. பாலசுப்ரமணியன் அவர்கட்கு, என்
நெஞ்சார்ந்த நன்றியை, நாளெல்லாம் தெரிவித்துக்
கொண்டிருப்பேன்.

என் தந்தையும், தாயுமாக - இப்போது மும்பையில் வாழ்ந்து
கொண்டிருக்கும் - என் தமையனார்
திரு. டி.எஸ். சேஷாத்திரி அவர்களுக்கும்; என் மன்னி
திருமதி. வேதவல்லி சேஷாத்திரி அவர்களுக்கும் -

இந்த நூலை என் காணிக்கையாக, அவர்கள் பாதக்
கமலங்களில் பணிவன்போடு சமர்ப்பிக்கிறேன்.

*33, முதல் தெரு*
*கற்பகம் அவின்யூ*
*சென்னை - 600 028.*
*15.3.1999*

**வாலி**

# பாண்டவர்

## ஆனைபலம்

அவன்
அரசுக்கெல்லாம் –
அரசு! ஆயினும்
அரசு நிழலமர்ந்து –
அரசு நடத்தும் அரசு!

என்
அரசமரும் – அந்த
அரசமரம்...
எனக்கு –
ஆனா, ஆவன்னா சொல்லி –
அறிவு கொளுத்திய –
ஆரம்பப் பள்ளி!

மூவரசு காத்துவந்த
முத்தமிழை – அந்தப்
பூவரசு சுற்றிவந்து
பெற்றவன் நான்;
யாப்புக் கரணம் போட்டு
யாக்கும் வித்தையை – அங்கு
தோப்புக் கரணம் போட்டுக்
கற்றவன் நான்!

சூறைத்
தேங்காய் உடைத்தேன்; எனக்குத்
தேமாங்காய் என்னவென்று –
தெரியவந்தது! சுண்டலொடு...
புளி
மாங்காய் படைத்தேன்; எனக்குப்
புளிமாங்காய் என்னவென்று –
புரியவந்தது!

அருகம்
புல் வைத்தேன்; என் நாக்கில் –
சொல் வைத்தான்! எருக்கம்
பூ வைத்தேன்; என் வாக்கில் –
பா வைத்தான்!

எதுகை பலம்;
மோனை பலம்;
இவையெலாம் எனக்கு –
பூனை பலம்! செழும்
பயிருக்கு எங்ஙனம்
சோனை பலம்? அங்ஙனம் என் –
பாட்டுக்கு அவன்தான்
ஆனைபலம்!

## பிள்ளையார் போட்ட – பிள்ளையார் சுழி!

பாரதம் –
பாடஞ்செய்து வைத்திருக்கும் –
பாரதம்...
ஒரு
வலைஞர் குலத்து
வஞ்சியின் மகன் –
வீரம் சொட்டச் சொட்ட
வனைந்த கதை; நெடுங்காலம் –
ஈரம் சொட்டச் சொட்ட
நனைந்த கதை!

காரணம் – அந்தக்
கதையின் கர்த்தா...
தனது
எச்சில் நாக்கிலேயே – அதை

# நம்!

ஏந்தியிருந்தான் அன்று;
ஏட்டில் வாங்கியெழுத - ஓர்
ஏற்ற நபர் இல்லையென்று!

பிறகுதான் - அவன்
பிரமனின் யோசனைப்படி...
துதிக்கையனைத் துதித்தான்;
துதிக்கையனும் - தன்னைத்
துதிக்கும் கையனை மதித்தான்!
எதிர்வந்து உதித்தான்;
எழுதச்சம் மதித்தான்!
எனினும் - தனது
எழுதுகோல் - இடையில்
இளைப்பாறா தென்று -
விதியொன்று விதித்தான்!

பிள்ளையார் சுழியைப்
பிள்ளையாரே போட்டு -
எழுதிய ஒரே கதை -
இந்தக் கதைதான்!

'ஒரு -
பழம்பெறும் கதையில் -
பிரசித்தமானவனே - ஒரு
பழம்பெரும் கதையை -
பனைஓலையில் - தனது
பல்லால் எழுதினான்!' - எனப்
பேசப் படுவதுதான்...
இந்தப்
புனிதக் கதையின்
புகழ்க் கிரீடத்தில் -
ஒரு
செய்ய மயிற்பீலியைச்
செருகியது போலாகும்!

## ஆசை -
## ஆரை விட்டது..?

விநாயகன் எழுதினான் -
வலைச்சி பெற்றெடுத்த -
வியாசன் சொல்லி; அதை
நற்றமிழ் நறவத்தில் -
நனைத்து எடுத்தான் -
நம்ம ஊர் வில்லி!

இன்னும் -
இறவா திருக்கும் -
ஒரு கதை; கிராமத்து -
மண்ணும் -
மறவா திருக்கும் -
ஒரு கதை; இதன் -
மகத்துவத்தைப் பேச - என்
கவித்துவத்திற்கு - ஏது
அருகதை..?

உப்புக் கடலின்
உள்ளீடெல்லாம் - ஒரு
செப்புக் குடமா
செப்பக் கூடும்? - நாகம்
காக்கும் மணியின்
கீர்த்தியை முழக்கி - சிறு
நாக்குப் பூச்சியின்
நாக்கா பாடும்..?

திருப்பதிக் குடையின்
தெய்வீகத்தை - ஒரு
நாய்க்குடை கூறியா
நானிலம் அறியும்? - நிலத்தைப்
பேர்க்கும் ஈட்டியின்



பெருமை ஈதென - ஓலை
ஈர்க்கு பேசியா
ஊர்க்குப் புரியும்..?

ஆயினும்...
ஆசை என்பது
ஆரை விட்டது? அது என் -
உள் மனத்திலும்
வேரை விட்டது!
எனவேதான் - கூச்சத்தை
ஏறக் கட்டிவிட்டு...
வில்லியின் பாரதத்தை

வசன கவிதையில் - இந்தப்
புல்லியன் சொலப் போந்தேன்;
புலவோர் பொறுத்தருள்க!

## கங்கைக் கரையில் - கங்கை!

விலங்குகள் -
விலங்குகள் இல்லாமல் -
வலம் வரும் - ஒரு
வனாந்தரம்!
இது -

வானம் பார்த்த
பூமியல்ல;
வானம் பார்க்காத
பூமி!
ஆம்! - இந்த
வனம் எப்படியிருக்கும் - என
வானம் பார்த்ததில்லை;
ஊசி மழையைத் தவிர -
வெயிலைக்கூட - விருட்சங்கள்
உள்ளே சேர்த்ததில்லை!
சில நேரங்களில் - காற்று
சிபாரிசு செய்தால்...

காலைச் சூரியன்
காட்டுக்குள் வர -
விருட்சக் கிளைகள் - சற்றே
விலகி வழி விடும்!
அடர்த்தியான அத்தகு -
அடவியில்...
சக்கரவாகப் பட்சிகள்
சல்லாபிக்கும் - ஒரு
சரத்ருதுவில்...
சாதகப் புள்ளெலாம்
சாதகம் புரியும் - ஒரு
சாயரட்சையில்...



வனமகளின் வார்குழலை -
வாரி வகிர்ந்தெடுத்த -
நேர் வகிடுபோல் - ஒரு
நீர் வகிடுபோல்...
அந்த
முல்லை நிலத்தை
முத்த மிட்டு...
ஓடிவந்த
கங்கை யானது - ஆடை
சூடிவந்த
மங்கை யானது!

ஆம்!
வானதிப் பெண் - ஒரு
மானிடப் பெண் - என
வடிவம் தாங்கினாள்; இந்திர
வில்லின் சாலத்தை -
விசும்பின் நீலத்தை - இரு
விழிகளில் வாங்கினாள்!

பாதாதிகேசம் -
பளிச்சிட்டது - அவளது
பிரகாசம்; அதனைப்
பார்த்துப் பார்த்துப்
பிரமித்தது - அந்தப்
பிரதேசம்!

அந்த
கங்கைப் படுகையில் - சீதளக்
காற்று படுகையில் -
முகை விரித்த பூக்கள் -
நகை விரிக்கையில்...
வெண்
புரவிமேல் - ஓர்
இரவி போல் -
வந்து இறங்கினான் -
வணக்கத்திற்குரிய...
அம்புலி குலத்து
அரசன்! ஆயிரம்
வெம்புலி நிகர்த்த
வீர புருஷன்! - அவன்தான்
அத்தினபுரத்தில் அரசோச்சும்...
சந்தனு என்னும்
சக்கரவர்த்தி! புகழ்வாசம் -
சந்ததம் வீசும்
சந்தனவத்தி!

வேட்டை முடித்து - அவன்
கோட்டை திரும்புகையில்தான்...
கங்கைக் கரையில் -
காற்று வாங்கிடும் -
கங்கையைக் கண்டான்; தண்ணீர்
மங்கையைக் கண்டான்!

கலைமானிடம் -
கைவரிசை காட்டுபவன் - இந்த
அலைமானிடம் -
வலைப்பட்டான்; தப்பிக்கத்
தலைப்பட்டான்!
அது -
முடியவில்லை; அவள்தன் -
மோகனப் புனலில் - அவனை
முழுக் காட்டினாள்; அதில்தன் -
முனை முறியா முனைப்பை -
முழுக்கக் காட்டினாள்!

அயர்ச்சி மேலிட்டு -
அரசன் முனகினான்;
'ஆர் நீ?' என வினவினான்!
அவன் -
வினாவிற்கு - அவள்
விடையளிக்க விரும்பாது...
வார்த்தைகளை - தன்
வாய்க்குள் சிறைவைத்து -
உதடுகள் என்னும்
கதவுகளை - மௌனச்
சாவியால் பூட்டினாள்; முறுவல்
சின்னதாய்க் காட்டினாள்!

தோளில் -

செந்தனு தாங்கும் –
சந்தனு...
'பேசா –
மடந்தையே! – எனை
வருத்தும் விரகத்திற்கு –
உடந்தையே! நெஞ்சைச் சுடும் –
நெருப்பு வல்லியே! சேலை கட்டும் –
கருப்பு வில்லியே! – ஆசை
வேள்வியில் – இன்னும்
வார்ப்பதேன் நெய்? நான் –
வெந்தது போதும்! எனைநீ –
விவாகம் செய்! நானொரு
வெற்றுப்புள்ளி அல்ல;
வேந்தன்! என் வேட்கைக்கு –
முற்றுப்புள்ளி வை!'
என்று –
உரைத்தான்! மூச்சு
இரைத்தான்!

வாய்ப்பூட்டை நீக்கி – வானதி
வார்த்தைகளை விடுவித்தாள்:

'உனைமணக்க – மன்னா! நான்
ஒப்புகிறேன்! ஆனால்...
சில நிபந்தனைகள் உண்டு;
செப்புகிறேன்! – என்
பூர்வோத்திரம் பற்றி – நீ
பேசக் கூடாது; நான்
ஏது செய்யினும் – நீ
ஏசக் கூடாது!
விதிகளை மீறினால் – தட்சணம்
உனைவிட்டு நான் –
விலகுவேன்! விதிப்படி
இயங்கினால் – எனைப்போல் ஓர்
இல்லாள் இல்லாள் எனும்படி –
இலகுவேன்!'

சந்தனு மன்னன் – அவள்
விதிகளை – ஏற்று நடக்க
சம்மதப் பட்டான்; பிறகு –
நெய்யப்பமொத்த – அவள்
கன்னங்களில் – இதழ்களால்
கையொப்ப மிட்டான்!

---

# எட்டாம் குழந்தை

**இ**து –
எந்த மேகத்து
நீரென்று –
எந்த பூமியாவது
கேட்குமா? – அது
நிலம்வந்து சேரும்
நீர்த்துளியின் –
குலம் கோத்திரம்
பார்க்குமா?

வந்த மாருதம் – எந்த ஊர்
மந்த மாருதம் – என்று
விசாரித்தறிந்த பின்பா – முகை
வாசல் திறக்கிறது வாசப்பூ?

வரும் ஆறு – தனது
வரலாறு முழுவதும்
கூறிய பிறகா – அதை
வாரியணைக்கிறது வாரி?

எய்துவது – பெரும்
இன்பமாயின்...
அது –
எங்கிருந்து வந்தாலென்ன?
எவர்வந்து தந்தாலென்ன?

ஆதலால்தான் – ஓர்
அவசத்தில் அவசரத்தில்...
வேந்தன் சந்தனு – வேதியர்
வேள்வி ஓம்ப – வானதியின்

காந்தன் ஆனான்; அவளது -
கூந்தல் சந்தையில் -
குளிர்கால இரவுகளில் -
காணாமல் போனான்!

திங்கள் குலத்தானை
திருமணம் முடித்து - ஒருசில
திங்கள்கள் கழிந்தபின்...

தாரமாய் வந்தவள் -
தாயானாள்;
தாயான கையோடு -
பேயானாள்!

ஆம்!
பன்னீரில் மிதந்து
பிள்ளை வந்ததும் - அதைத்
தண்ணீரில் எறிந்து
திரும்பினாள் வீடு;
திகைத்தது நாடு!

இந்த
அவலச் செய்தியைக் கேட்டு -





அரசனுக்கும் அளப்பரிய -
ஆற்றாமை! ஆயினும் -
ஆவதென்ன? அவனே ஓர்
ஆற்றாமை என்றிருந்தான்;
ஆசை ஓட்டிற்குள் - தனது
ஆற்றாமையை உள்வாங்கி -
ஆறாட்டத்தில் நின்றிருந்தான்!

வினவினால் - அவள்
விட்டுப்பிரிவாள் - என
விட்டுக் கொடுத்தான்; சற்றே
மன முறிவிற்கும் -
மண முறிவிற்கும் -
முட்டுக் கொடுத்தான்!

ஒன்றன் பின்
ஒன்றாய் -
சந்தனுவின்
சந்ததிகள்...
கங்கையில் பிறந்தன;
கங்கையில் இறந்தன!

அவள் -
ஈன்றவை ஏழு;
ஏழையும் தின்றது ஆறு!

மண்ணில் ஓடிய ஆறு - மன்னன்
கண்ணில் ஓடியது; ஆனால்
மனதில் ஓடிய காமம் - மன்னன்
வாயை மூடியது!

அவளிடம் -
பேசவே பயந்தான்; பேசாமலே -
போகங்களைப் பயந்தான்!

ஏழுக்குப்பின் ஈன்றெடுத்த
எட்டாம் குழந்தையை -
வாரிஎடுத்து வெள்ளத்தில்
வீசப்போனாள் வானகங்கை;
வேந்தன் சந்தனு கணக்கில் -
ஈரமில்லா ஈரமங்கை!

வாழையடி வாழையென -
வந்துதித்த வாரிசுகள் -
ஏழை இழந்த ஏழை -
ஏந்திழையை வெறுத்தான்; அவள்
துட்டை எனத்தெளிந்து - இந்த
எட்டை இழக்குமுன் - தன்னை
இதுகாறும் பிணைத்திருந்த
கட்டை இறுத்தான்!

'நில்! நீ யார்?
சொல்!

இத்தேசம் உனக்கு -
விதேசமா சுதேசமா? இங்குவந்த -
உத்தேசம் உனக்கு -
விவாகமா? விவகாரமா?

கையில் வாங்கி நீ -
கிழித்துப் போடவா - கருப்
பையுள் மரபுவழிச்
செய்யுள் வரைந்தேன்?

அஸ்தியைக் கரைப்பதுபோல்
ஆற்று நீரில் - ஏன் என்
ஆஸ்தியைக் கரைத்தாய்?

என்னைப்
புல்ல வந்தவள் -
பிள்ளை பெற்றுக்
கொல்ல வந்தவளா?
குழந்தைக்குத் தாயே -
கூற்று எனும் கூற்றைச்
சொல்ல வந்தவளா?

எங்கள் குலம் -
திங்கள் குலம்;
இதைப் பீடிக்கும்
இராகுபோல் கேதுபோல் -
பாவி! உனையொத்த
பெண்கள் குலம்!'

மன்னன் சந்தனு -
முற்றுப்புள்ளி இல்லாமல் -
பேசினான்; மாலையிட்ட வனை -
மாபாவி என்று ஏசினான்!

வானதி சிரித்தாள்! தன்
வழக்கை விரித்தாள்!

"ஒப்பரிய வேந்தே!
ஒப்பம் வைத்து நீ -
ஒப்புதல் ஈந்ததோர்
ஒப்பந்தம் - இப்பொழுது
ஒப்புக்கென்றானது;
இப்பந்தம் இக்கணமே
இல்லையென்று போனது;
நிர்ப்பந்தம் செய்யினும் -
நில்லேன்; செல்வேன்! கேள்!
நேர்ந்ததைச் சொல்வேன்!
அரசே! - நான்
ஆறுகளின் அகராதியில் -
அகரம்! புனிதங்களின்
சிகரம்!
என் ஊர் -
புரந்தரன் ஆளுகின்ற -
பொன்னகரம்!

பகலவன் குலத்து
பகீரதன் - என்னை
சகர புத்திரர்
சாம்பல் கரைக்க...
விண்ணில் இருந்து
விடாப் பிடியாய் -
மண்ணில் இறக்கினான்;
நான் -
வையம் வந்தால் - என்
வேகம் தாங்காது என
ஐயம் வந்ததால்...
தவத்தைப் புரிந்து
திருக்கயிலாய
சிவத்தை இளக்கினான்!

அஞ்செழுத்தண்ணல் - எனை
செஞ்சடையில் வாங்கி - என்
வெஞ்சினத்தை அடக்கினான்;
அதன் பின் அம்புவியில் -
சஞ்சரிக்க அனுப்பினான்!
நான் -
அவ்வாறு நிலம் வந்த
ஆகாய கங்கை;
ஆகார வயல்களுக்கு -
ஆதார மங்கை;
தொல்வினைத் தூளிகள்
துடைக்கும் என்கை;
தூய்மையிலே திருத்
துழாயின் தங்கை!
உனக்கு -
மாலையிட்டாள் - இந்த
மகாநதி! - அது
விரிஞ்சன் எனக்கு
விதித்த விதி!

ஒருநாள்...
பிரமனை தரிசிக்க - நான்
பிரமலோகம் சென்றேன்;
உந்திக்கமலம் உதித்தானை -
வந்தித்து நின்றேன்!

புன்கண் போக்கும் -
எண்கண் நோக்க -
என்கண் கசிந்தேன்; வேத
நூன்முகம் காட்டும் -
நான்முகம் மலர -
நான்முகம் மலர்ந்தேன்!

அன்று -
அரவிந்தன் அவையில்
அமரர் கூட்டம் -
அரவிந்தம் மொய்க்கும்
அறுகால்க ளாட்டம்!
அப்போது...

வாயுதேவன் - அந்த
வானவரின் -
சஞ்சல புத்தியை
சோதிக்க எண்ணினான்;
'சட்'டென்று - ஒரு
சூழ்ச்சியைப் பண்ணினான்!

அவன் -
அனுப்பிய காற்று...
என்
இடையைத் தடவி -
இலேசாகக் கொஞ்சம் -
உடையை உரித்தது;
உடையை உரித்ததும் -
உள்ளழகு உடனே -
கடையை விரித்தது!

அச்சமயம்...
அச்சபையோர் நெஞ்சமெல்லாம் -
அச்சமயம்!
கைகளால் - தம்
கண்களைப் பொத்தினர்; எனைக்
காண்பதும் - பெரும்
குற்றமென ஒத்தினர்!

ஆனால்...
அச்சமே அச்சப்படும்படி...
வருணன் என்னும் -
வானவன் மட்டும் - தன்
விழிகளை விரல்களாக்கி - என்
விலாவை வருடினான்; பிடி
விடாமல் நெருடினான்!
இந்த
நல்ல வாய்ப்பை - தனக்கு
நல்கியதற் காக...
வாயுதேவனை வருணன் -
மௌனமாய் மெச்சினான்; தன்
முறுவலில் நன்றியென்னும் -
மூன்றெழுத்தை ஒட்டினான்!

வருணனைப் பார்த்து – அந்த
வேளையில்...
நானும் நகைத்தேன்; என் –
நாணத்தைப் பகைத்தேன்!
எங்கள் –
இருவரையும் பார்த்து...
நான்முகனின் –
நான்கு மூக்குகளின் –
நுனிகளிலும் –
நாற்காலி போட்டு –
உட்கார்ந்து கொண்டது
கோபம்; அது –
உடனே இட்டது சாபம்!

'வானம் கெட்டது; உங்களால் –
வானத்தின் மானம் கெட்டது! இங்கு –
கண்ணில் பிறந்த காதல் கதைகளை –
மண்ணில் பிறந்து மீண்டும் பேசுக;
பேசிமுடித்துப் பித்தம் தெளிந்து –
பின்னர் இந்த விண்ணில் ஏறுக!'
சபித்து விட்டுச்
சபையை நீங்கினான் –
சதுர்முகன்; அனந்த –
சயனன் மகன்!
விதியை நொந்து – நான்
வானிறங்கி வருகையில்...
எதிர்ப் பட்டனர் –
அஷ்ட வசுக்கள் –
எனும் தேவகணங்கள்;
வசிஷ்ட முனிவன் –
இட்ட சாபத்தை –
வாங்கிய பாவகணங்கள்!

வனத்தில் ஒருநாள் –
விச்சிராந்தியாய் –
வலம் வந்தது –
வசிஷ்ட முனிவனின் பசு;
பிடித்தமான பாரியை –
பிடித்த பிடிவாதத்தால் –
பிடித்து வந்தான் அதை –
பிரபாசன் என்னும் வசு!

இதர வசுக்கள் –
இது குறித்து...
முதலில் பதறினர்;
முடிவில் உதவினர்!
திருட்டு நடந்ததை – ஞான
திருட்டியால் முனிவன்
கணப் பொழுதில் –
கணித்தான்; உடனே
அஷ்ட வசுக்களை
அஷ்ட சிசுக்களாய் –
பூமியில் பிறக்கப்
பணித்தான்! – பிறகு
முனிவனின்
முனிவானது – வசுக்கள்
கருணை மனு போட்டதால்
கனிவானது!
வசிஷ்டன் –
விதிகளைத் தளர்த்த
ஒப்பினான்; கீழ்க்கண்டவாறு
செப்பினான்:
உதவிய பிழைக்காக –
வசுக்கள் எழுவர் – மண்ணில்
பிறந்ததும் உடனே –
இறக்கட்டும்; பசுவைப்
பற்றிய பிழைக்காக –
பிரபாசன் மட்டும் – மண்ணில்
பல காலம் வாழ்ந்து –
சிறக்கட்டும்!

வசுக்கள் – இந்த
விவரங்கள் சொல்லி – என்
வயிற்றில் பிறக்க விரும்பினர்;
விரும்பியது போல் அரும்பினர்!
வேந்தன் சந்தனுவாய் –
வந்துதித்த வருணனே!
உனை மணந்து – அவர்களை

உதரத்தில் வாங்கினேன்;
பிறந்ததும் இறக்க -
பிள்ளைகள் ஏழை -
வசிஷ்டன் விதிப்படி -
உதகத்தில் வீசினேன்!
இதோ!
எஞ்சியிருக்கும் - இவன் நம்
எட்டாம் பிள்ளை; இவன் புகழை
மிஞ்சியிருக்கும் - மனிதன்
மண்மிசை இல்லை! - இன்று
என்னுடன் இவனை
இட்டுச் செல்வேன்; நாளை
வளர்ந்தபின் - உன்னிடம்
விட்டுச் செல்வேன்!''

வானதி மறைந்தாள் -
மதலையோடு;
காவலன் நின்றான் -
கவலையோடு!

# தேவயானி

கைக்குழந்தையோடு -
கங்கை போனதும் - காவலனே
கைக்குழந்தை ஆனான்; கண்களே
கங்கையாகிப் போனான்!

செய்தவம் யாவும் -
செலவழிந்து - ஒரு
கைதவம் வந்து -
எய்தினாற் போல்...
சந்தனு மன்னனை -
சபலமும் சஞ்சலமும்
பந்தாடின; மனத்திரையில் -
பரம்பரை நினைவுகள்
படமாய் பம்பரமாய்
வந்தாடின!

சபலப் படுவதும்.
சஞ்சலப் படுவதும் -
சந்திர குலத்துச்
சக்கரவர்த்திகளுக்கு -
சகஜமாய் வருகின்ற
வியாதி! - அதற்கு
சான்றாய் நிற்பவன்
யயாதி.

அமரர்களின் குரு -
வியாழன்;
அசுரர்களின் குரு -
வெள்ளி!

வியாழனுக்கு
ஒரு மகன் -
ஞாயிறு போல்;
வெள்ளிக்கு
ஒரு மகள் -
திங்கள் போல்!

பன்னூல் நாவிலும் - முப்
புரிநூல் நெஞ்சிலும் -
விளங்கும் கசன் -
வியாழனின் மகன்!

'இவள் அசல்;
இந்து நகல்!' - என
வெளிச்ச மேனி -
விளங்கும் தேவயானி -
வெள்ளியின் மகள்!

கசனும் -
தேவயானியும் -
கிட்டவரக் காலம் -

கட்டியது பாலம்!

இமையோர்க்கும் -
இராக்கதர்க்கும்...
கிழக்கு வெளுத்தாலே -
வழக்கு; எண்டிசையும்
கேட்கும் - போர் முழவின்
முழக்கு!

சன்மப் பகையால்
சனித்தது - இந்த
துவந்த யுத்தம்; தினப்படி
செருவின் முடிவில் -
தெருவின் மடியில் -
சிவந்த ரத்தம்!

ஆனால்...
அமர்க்களத்தில் நடந்தது -
அன்றாடம் ஓர் அதிசயம்; அது
அமரரும் அறியாத ரகசியம்!
இமையோர் தரப்பில் -
இறந்தவர் -
இறந்தவாறே விழுந்து கிடந்தார்;
இராக்கதர் தரப்பில் -
இறந்தவர் -
இறந்தபின் எழுந்து நடந்தார்!
அழியா திருந்தது -
அசுரப் படை; அதற்கு
ஆசாரியர்தான் -
அடிப்படை!

செத்தாரை எழுப்பவல்ல -
சுக்கிராச் சாரியர் -
அசுரகுரு;
அந்த மந்திரம் -
அவருக்கு மட்டுமே -
நெட்டுரு!

அந்த வித்தை -
அமர குருவிற்கு அந்நியம்;
அவரால் பிழைக்குமா -
அமரர் சைனியம்?

இமையோர்க்கு -
இது குறித்து...
நேர்ந்தது விசாரம்; உடனே -
நிகழ்ந்தது விசாரம்!
பிறகு -
பிரகஸ்பதியின்
புத்திர ரத்தினம் -
கசனின் உதவியைக்
கருதிச் சென்றனர்;
'சாதல் விலக்கிடும்
சூழ்ச்சியை - சுக்கிரன் மகளிடம்
காதல் வளர்த்து நீ
கற்று வா!' என்றனர்!

சௌரியம் விளங்க - தூய
பிரமசரியத்தின்
சௌமியம் துலங்க...
வெள்ளியின் வேதப்
பள்ளியில் சேர்ந்தான்
வியாழனின் பிள்ளை! அவனைப்
பள்ளியில் சேர்க்கப்
பரிந்துரை செய்தாள் -
வெள்ளியின் கிள்ளை!

திங்கள் ஈரைந்தில்
தாயொருத்தியின் -
கர்ப்பம் செதுக்கிய
சிற்பம் போல்...
பிறங்கிய - கசனின்
பாதாதிகேசம் -
வெள்ளமாய்
ஒளி உமிழ்ந்தது; அந்த
வெள்ளத்தில்தான் - சுக்கிரன்
கிளி அமிழ்ந்தது!
ஆதலால்தான்...
கசனைக் கண்டதும்
தேவயானி - தனது

ரசனைக் குரிய – ஒரு
ராஜகுமாரன் –
'இவனே!' என
இறுதி செய்தாள்; தனக்குள்
உறுதி செய்தாள்; அவனது
ஒப்பம் ஒன்றியே – தன் காதலைச்
செப்பம் செய்தாள்!

தேவயானியின்
தேஜசும்...
எவரையும் –
ஈர்க்கவல்லது; எத்தகு
பிரமசரியத்தையும் –
பேர்க்க வல்லது!
விவரிக்க ஒண்ணுமோ – அவள்
விலாசம்? அவள்தான்
விலாசங்களுக் கெல்லாம் –
விலாசம்! அவளது
சுவாசம் வீசும் –
பாரிஜாதப் பூவின்
சுவாசம்! அவள்
கற்பும் பொற்பும்
குடியிருக்கும் –
நிவாசம்!

குருவின் மகளை –
கசன்...
ஆடல் பாடலால் –
ஆனந்தப் படுத்தினான்;
அவளுக்குக் கவிதைகளால் –
ஆடைநெய்து உடுத்தினான்!
அவள் –
அவனை சிலாகித்தாள்; இன்னும் –
அதிகமாக சினேகித்தாள்!

ஒரு
கவிதையை
குதுகலப்படுத்த – பல
கவிதைகளை –
கவனம் செய்வதில் – கசனின்
கவனம் சென்றாலும்...
செத்தாரை எழுப்பவல்ல
வித்தையைக் கற்பதுதான் –
அவனுக்கு –
முதலும் முடிவுமான
முக்கியம்; அதற்குத்
தேவை தேவயானியின் –
சக்கியம்!

ஏனெனில்...
மகள் மீது – சுக்கிரருக்கு
மாளாத பிரியம்; அவர்
மாண்டாலும் கூட –
மாளாது பிரியம்!
புத்திரி சொன்னால் – இந்த
புவனத்தை – தன்
உத்தரியத்தால் கட்டுவார்;
தனயை சொன்னால் – ஒரு
தருப்பையை எடுத்து – வெற்பின்
முனையை வெட்டுவார்!

கசன் வந்த சேதி –
கசிந்தது வெளியே;
அசுரர்க்கு –
அது...
காஞ்சிரங்காயாய் –
கசந்தது உள்ளே!

'மாற்று முகாமிலிருந்து – ஒரு
மாணவன் வடிவில் –
கூற்று வருவதா – நம்
குலத்தை அழிக்க? – நீள
அலகு இருப்பினும்...
ஆகுமோ நாரையால் –
ஆகாயத்தின் – நீல
ஆடையைக் கிழிக்க?
சாவைச் சாவடிக்கும்
சஞ்சீவினி சாத்திரத்தை –
அமரர் குலத்தவன்
அபகரிப்பதா? – அதற்கு நம்

ஆசாரியரும் -
உபகரிப்பதா?
அரிதினும் அரிதான
அரிய வித்தையை - கசன்
அறிய விடுவதா? - அவன்
அறிவது ஆபத்து! - அதை
அறிவது நேருமுன் - அவனை
அரிவது நல்லது!'

தானவர் கூட்டம் - இவ்வாறு
தர்க்கித்தது; பிறகு
கசனுக்குப் பாடம் -
கைவாளால்
கற்பித்தது!

ஒரு நாள் -

குருவின் ஆணைப்படி...
கசன் -
மேய்ச்சலுக்கு இட்டுச் சென்ற
மாடுகள் - தொழுவத்திற்கு
மாலையில் திரும்பின; ஆனால் -
திரும்பவில்லை கசன்!
தேவயானியின் விழிவிளிம்பில் -
திவலைகள் அரும்பின!



பொழுது -
போகப் போக...

'என்னுடைய கசனுக்கு -
ஏதோ ஆபத்து!' என்று -
இடையறாது கேவினாள்;
இங்கும் அங்கும் -
இருப்புக் கொள்ளாது தாவினாள்!

மகளின் -
மரணாவஸ்தையைக் கண்டு...
சுக்கிரர்
உக்கிரம் மேவ -
'எங்கிருக்கிறாய் கசனே?
எழுந்து வா!' என்று -
சஞ்சீவினி மந்திரத்தை
செபித்துக் கூவ...



ஒரு
நொடிப் பொழுதில் கசன் வந்து –
நீக்கினான் குறை; பின்பு
நிகழ்ந்தது யாதென்று –
நிகழ்த்தினான் உரை!

'மகானே! – என்னை
மன்னியுங்கள்!
மாடு திரும்பிய பின்னும் – நான்
வீடு திரும்பிடவில்லை!

தாமசம் ஆனது; என் செய்ய?
தானவர் கைவாளால் – நான்
மாமிசம் ஆனேன்!
பிறகு...
ஓநாயின் வயிற்றுக்கு –
உணவாகிப் போனேன்!

துண்டு துண்டான – என்
பிண்டத்திற்குள் – தாங்கள்
ஓதிய மந்திரம் –
உயிரை நுழைத்தது; மீண்டும் –
உடலம் தழைத்தது!

உடனே –
ஓநாயின் வயிறு –
கிழிபட்டது; நான்
வெளிவர எனக்கு –
வழிவிட்டது!'

கசனின் கதை கேட்டு –
கலங்கினாள் தேவயானி;
தேற்றினான் அவளை – அவள்
தந்தை தவஞானி!

ஆயினும்...
அசுரர்கள் ஆயுதம் – கசனை
அன்றாடம் சாப்பிட்டது;
ஆசாரியரின் மந்திரம் – கசனை
அன்றாடம் கூப்பிட்டது!
ஒரு
நோயில்லாமலே – அவன்
திரும்பத் திரும்ப இறந்தான்;
ஒரு
தாயில்லாமலே – அவன்
திரும்பத் திரும்பப் பிறந்தான்!

இராக்கதர் –
இதற்கொரு முடிவு கட்ட...
கசனைக் கொன்று
கறியாக்கி – சுட்டுக்
கரியாக்கி – அதைக்
கள்ளில் கலந்து
சரியாக்கி...
குடிக்க –
குருவிற்குக் கொடுக்க –
சாம்பல் வடிவில்
சீடன் – குருவின்
குடலுக்குள் படுக்க...

கசனைக் காணாமல் –
தேவயானி
கதறினாள்; பதறினாள்;
சிந்தை சிதிலமடைந்து –
சில்லுசில்லாய்ச் சிதறினாள்!

'எங்கிருக்கிறாய் கசனே!
எழுந்து வா!' என்று –
சுக்கிரர் மந்திரத்தை –
செபித்தார்; சீடன் –
'குருவே! தங்கள்
குடலுக்குள் இருக்கிறேன்!'
என்று சொன்னதும் – ஒரு
நொடி
என் செய்வதெனத் தவித்தார்!

பிறகு –
தவிப்பைத் தவிர்த்து...
'பிரியமான கசனே! –
செத்தாரைப்
பிழைப்பிக்கும் வித்தையை – நான்

போதிக்கிறேன் உனக்கு; நீ
உயிர்த்து வந்து - அதையே
உச்சாடனம் செய்து -
உயிரூட்டுக எனக்கு!'
என்று -
சஞ்சீவினி மந்திரத்தை
சுக்கிரர் - கசனுக்குச்
செப்பினார்; அவரது
வயிற்றைக் கிழித்து -
வெளிவந்த அவனால் - அவரும்
தப்பினார்!
கற்க வந்த வித்தையைக்
கற்றபின் - கசன்
ஊர்திரும்ப ஆசைப்பட்டான்;
உபாத்தியாயர் ஆசிபெற்றான்!

தேவயானி - அவனைத்
தடுத்தாள்; தன்னை
விவாகம் புரிய -
வேண்டுகோள் விடுத்தாள்!

கசன் பேசினான்; பேச்சில் -
கனிவை வீசினான்!

'உத்தமியே! - நான்
உன்னால் உயிர் பிழைத்தேன் -
மும்முறை; ஆனால்...
உன் தகப்பனாரின் -
உதரத்தில் உதித்தேன் -
இம்முறை! நமக்குள் -
உதவாது உடற்கலப்பு; நான் -
உன்னுடைய உடன்பிறப்பு!
விசனம் விடு;
சகோதரனுக்கு சந்தோஷமாய் -
விடை கொடு!'

## யயாதி...

அசுரர் குலத்து -
அரசன்...
விருஷபர்வன் - ஒரு
புருஷபர்வதம்; மகள் -
சர்மிஷ்டை - அதில்
சனித்த -
சந்தன மாருதம்!

அழகு -
அங்கமெல்லாம் -
அப்பிக் கிடக்கும்;
அளகபாரத்தில் -
ஐப்பசி மேகம் -
கப்பிக் கிடக்கும்;
விழிவிளக்குகள் -
வெளிச்சத்தை -
துப்பிக் கிடக்கும்;
உதட்டுப் பூக்கள் -
உள்ளிருக்கும் கள்ளால் -
உப்பிக் கிடக்கும்!

அவள் -
அரசிளங்குமரி; தேவயானியின் -
ஆருயிர்த் தோழி;
ஒருவரை யொருவர்
பிரியவொண்ணாது -
ஓரிரு நாழி!

வேனில்கள்;
கூதிர்கள்;
வந்து வந்து போயின;
வருடங்கள் ஆயின!

கசனை -
நேசித்ததும் - காதல் மடல்
வாசித்ததும் - அதை அவன்
நிராகரித்ததும் - அதனால்



நெஞ்சு கரித்ததும்...

அவள் -
யோசனைகளில் இருந்து - பல
யோசனைகள் சென்றுவிட்டன;
உடன் வராமல் - பழைய
வாசனைகள் நின்றுவிட்டன!

இப்பொழுது...
தேவயானி - தன்
தோழி சர்மிஷ்டையோடு -
என்றுமுள்ள தென்றலாய்
எங்கும் திரிந்தாள்;

இதழ்களில் -
இதுகாறும் -
பூட்டிவைத்திருந்த
புன்னகைக் கடையை -
மீட்டும் திறந்தாள்!

ஒரு நாள் -
வெயில்தாழும் நேரம்...
சோம்பல் பூத்த - ஒரு
சோலைக் கருகில் -
ஆம்பல் பூத்த - ஓர்
அழகிய வாவியில்...

சர்மிஷ்டையும் -
தேவயானியும் -
சேடிய ரோடு - தீர்த்தம்
ஆடிக் களித்தனர்;
கூச்சல் போட்டு -
கூச்சம் நீங்கி
நீச்சல் போட்டு -
நீரைக் கிழித்தனர்!

நிலாக்கள் -
நிர்வாணமாய்
நீரில் கிடக்க . அவை [illegible]
உடுத்தி யிருந்த
உடுக்கைகள் [illegible]

ஓரத்தில் இருக்க...

எங்கிருந்தோ – பெரும்
காற்று வந்தது; ஆடைகள்
எல்லாவற்றையும் – ஒருசேரக்
குவித்துச் சென்றது!

குமரிப் பூக்கள் –
குளித்து முடித்து –
கரையில் ஏறின;
எடுத்து அவரவர் –
உடுத்தும் பொழுது –
உடைகள் மாறின!

தவறுதலாக –
தேவயானியின் சேலையை –
சர்மிஷ்டை கட்டினாள்; அதில் –
சீற்ற மடைந்து –
தேவயானி –
சர்மிஷ்டையைத் திட்டினாள்!

'அசுர குலப் பெண்ணே! – என்
ஆடைகளை எப்படி நீ –
அணியலாம்? – எனது
துணியெலாம் – கையால்
தொடும் அளவு – எப்படி நீ
துணியலாம்?

நீ –
மன்னன் மகள்; நான் –
மன்னன் வணங்கும் –
மகானின் மகள்! – உன்
தந்தையின் தலையில் – என்
தந்தையின் –
திருவடித் துகள்!
அடிமை நீ;
ஆணவத்தை விடு;
குரு மகளுக்கு –
மரியாதை கொடு!'

பொங்கினாள் இப்படி –



புரோகிதன் மகள்;
பதிலடி கொடுத்தாள் -
புரவலன் மகள்!

'ஏனடி!
உனக்கு இந்த மமதை?
எனக்கு நீயா சமதை!
என் தந்தை புரவலன்;
உன் தந்தை இரவலன்!

நான் -
ராட்சச வம்சமாயினும் -
ராஜவம்சம்; நீ -
பிராமண வம்சமாயினும் -
பிச்சை வம்சம்!
அடக்கு நாவை; நீதான் -
அடிமைப் பாவை!'

சர்மிஷ்டை - ஒரு
சர்ப்ப மானாள்;
தேவயானியின் -
தாடையில் அறைந்து -
தண்ணீரில்லாக் கிணற்றில் -
தள்ளிவிட்டுப் போனாள்!

சேடியர் யாவரும் -
'செத்திருப்பாள் தேவயானி!'
என்றனர்; சர்மிஷ்டையோடு -
சென்றனர்!

ஒரு
பால் நிலவு -
கால் தடுக்கி -
கிணற்றில் விழுந்தாற்போல் -
கிடந்தாள் தேவயானி!

அப்போது -
அங்கு வந்தான்...
அம்பும் வில்லுமாய் -
அம்புலிகுலத்து அரசன் -
கியாதிமிக்க -
யயாதி!

குடிக்க -
நீர்கிடைக்காமல் - வனம்
நெடுக நடந்தவன்...
கிணற்றைக் கண்டதும் -
குனிந்து நோக்கினான்;

கிணற்றில் -
புனல் இல்லை; புடவை கட்டிய
புஷ்பம் இருந்தது; அதன்
வலக்கரம் பற்றி - மெல்ல
வெளியே தூக்கினான்!

'யுவதியே! யார் நீ? ஏனிந்த -
அவதியே? ஆழ்கிணற்றில் -
ஏன் விழுந்தாய்? என்ன சேதி?'
என வினவினான் யயாதி!

கொழு கொம்பிடம் -
கொடி பேசியது; அதில் -
கொஞ்சம் கர்வத்தின் -
நெடி வீசியது!

'கல்விமான்
சுக்கிராச் சாரியின் -
செல்வி நான்!
தானவர் குலத்து
மன்னவன் - என்
தந்தைக்கு முன்னால்
சின்னவன்! இதைச்
சொன்னதற் காக -
மன்னன் மகள் -
என்னை எள்ளினாள்;
இங்கே தள்ளினாள்!
ஓ! உத்தமனே! நீயென் -
வலக்கரம் பற்றியதால்...

நமக்குள் -
நடந்துவிட்டது -
பாணிக்கிரகணம்; இனியுன்

பாதமே சரணம்!'

யயாதி -
தேவயானியின் சொல்கேட்டு -
திகைத்தான்; பிறகு -
நகைத்தான்!

'அழகிய பெண்ணே! - நீ
அந்தணர் குலம்; நான்
அரசர் குலம்! நமது
சம்பந்தத்திற்கு
சிறிதும் இல்லை -
சாத்திர பலம்!'

புத்திமதி கூறி -
புரவலன் புறப்பட்டான் -
புரவியில் ஏறி!

'இனி -
நகரத்திற்குள் - நான்
நுழைய மாட்டேன்!' - என்று
நகராமல் - அங்கேயே
நின்றாள்; தன்மானம்
தகராமல் காக்கும் -
நல்லாள்!

சுக்கிரருக்கு -
செய்தி எட்டியது; அவரது
உக்கிரம் - விருஷபர்வனின்
உச்சந்தலையில் குட்டியது!

'ஹே! ராஜன்!
மழையில் -
என் மகள் நனைந்தால் -
எனக்குத் தும்மல் வரும்;
வெயிலில் -
என் மகள் அலைந்தால் -
எனக்கு வேர்த்துவிடும்!

எனவே...
தேவயானியோடு - நானும்
தேசம்விட்டுப் போகிறேன்;
நெடுங்காலம் நிலவிய -
நேசம் விட்டுப் போகிறேன்!'

அரசகுரு - இங்ஙனம்
அறிவித்ததும் -
அரசன் ஆடிப்போனான்:
மன்னிப்புக் கேட்க -
மகளோடு -
வனத்திற்கு ஓடிப்போனான்!

'மன்னா!
உன்மகள் சர்மிஷ்டை -
உள்ள நாள் மட்டும் - என்
தாதியாக வேண்டும்;
இது உலகறிந்த -
சேதியாக வேண்டும்!
என் -
தீர்ப்பை ஏற்றால் - நகரம்
திரும்புவேன் மீண்டும்;
இல்லையேல்...
இங்கேயே இருப்பேன் யாண்டும்!'
என்று -
தேவயானி விதித்தாள்; தன்
தந்தை நலன்கருதி - அதை
சர்மிஷ்டை மதித்தாள்!

பின்னாளில்...
தேவயானியும் யயாதியும் -
தம்பதியாக - உடன்
சர்மிஷ்டையும் போனாள் -
தாதியாக!

அரண்மனையில் -
அன்னத் தூவியில்...
யாமம் தோறும் -
யயாதிக்கு -
தன்னையே தேவயானி -
ஈந்தாள்; முழுமையாய்
ஈந்தபின்னும் மீந்தாள்;

இவ்வாறு –
ஈந்தும் மீந்தும் –
இரு பிள்ளைகளை ஈன்றாள்!

நாட்பட நாட்பட....
சர்மிஷ்டையின்
சபலத்தில் – யயாதி
ஆட்பட ஆட்பட...
இருவரும் –
காற்றும் அறியாமல் –
காந்தருவம் முடித்தனர்;
மூன்று குமாரர்களை –
ஈன்று எடுத்தனர்!

தேவயானிக்கு – நெடுநாள்
தெரியாமலே இருந்தது – தன்
தலைவனுக்குத் தாதி –
தாரமான சேதி!

ஒரு நாள் அவளது –
உளவு மனம்...
கண்டு பிடித்தது – அந்தக்
களவு மணம்!
தனயை வந்து –
தனக்கு நேர்ந்த –
வினையைச் சொல்லி –
விம்மி யழுததும்...

யயாதியின் மேல்
ஏவ – சுக்கிரர்
மனத்துள் – ஒரு
மந்திரத்தைச் செபித்தார்;

'மூடனே! – உடனே
மூப்பில் விழுவாய்; நீ –
ஆற்றிய பாவத்திற்கு –
அதுதான் கழுவாய்!' என்று –
ஆக்குரோசமாய்ச் சபித்தார்!

அடுத்த விநாடி...
யயாதி – தொண்டு
கிழமானான்; கொளகொளத்த
பழமானான்!

முதுமையை –
முதுகில் சுமந்தவாறு...
சுக்கிரர் காலில் விழுந்து –
அழுதான்; சாப
விமோசனம் வேண்டித்
தொழுதான்!
சுக்கிரர் – சாபத்தைச்
சற்று மாற்றினார்;

'உன் –
முதுமையை –
வாங்கிக்கொண்டு – தன்
இளமையை –
உனக்குத் தர –
எவரேனும் விரும்பினால் –
எனக்குத் தடையில்லை;
இதைத்தவிர உன்கேவலுக்கு –
என்னிடம் விடையில்லை!'
என்று சொல்லி –
யயாதியைத் தேற்றினார்.

தன் பிள்ளைகள்
ஐவரையும் –
தனித்தனியே அழைத்து...

'மகனே! என்னுடைய –
மோகம் அடங்கவில்லை;
வேள் எனை நோக்கி –
வளைக்கிறான் கரும்புவில்லை!
உன் –
இளமையை – தந்தைக்கு
இரவல் கொடு;
இறவாப் புகழ் எடு!'
என்று –
யயாதி யாசித்தான்;
பதில் சொல்லாமலே ஒவ்வொரு
பிள்ளையும் யோசித்தான்!

புரு! - சர்மிஷ்டை
பெற்றெடுத்த - புண்ணிய
உரு!
அவன் மட்டும் -
'அத்தனே!
என் இளமை - தாங்கள்
இட்ட பிச்சை; இதைத்
தருகிறேன்! ஏற்று -
தணியுங்கள் இச்சை!'
என்று மொழிந்தான்;
மகனைத் தழுவி - யயாதி
முதுமை ஒழிந்தான்!

மாலைச் சூரியன் -
காலைச் சூரியன் ஆனான்;
காலைச் சூரியன் -
மாலைச் சூரியன் ஆனான்!

'ஆசை - ஓர்
ஆறாத வியாதி!' - என
ஆண்டு அனுபவித்து -
அறிந்தான் யயாதி!

ஒரு நாள் -
புருவிடம் - இளமையைத்
திருப்பித் தந்தான்; ஒரு
குருவிடம் ஞானம் பெற -
கானகம் சென்றான்!

---

# கங்கை மைந்தன்

இரவல் வாங்கிய -
இளமைச் சட்டையை...
புதல்வன்
புருவிடம் - யயாதி
திருப்பித் தரும்போது -
தேசத்தையும் தந்தான்;

புருஷோத்தமனாகிய - இந்தப்
புருவின்...
பேரனுக்குப் பேரனுக்குப்
பேரனுக்குப் பேரனாகத்தான் -
பேரரசன் சந்தனு -
பிறந்து வந்தான்!
தன் -
கடைசிக் குழந்தையோடு -
கங்கை போனபின்...

காமத்தை - அறவே
கைகழுவி விட்டு - நாட்டின்
சேமத்தை - அதிகம்
சிந்திக்க லானான்; ஒரு நாள் -
வழக்கம் போல் -
வேந்தனுக் குரிய -
விதிகளில் ஒன்றான -
வேட்டைக்குப் போனான்!

வரையில் -
வெய்யவன் மறைகின்ற -
வரையில்...
வேட்டை நடத்திய
வேந்தன் சந்தனு -
களைப்பாற வந்தான்
கங்கைக் கரையில்!

அதே -
கங்கைக் கரை;
காகங்கள் -
கரையும் கரை;
கிரௌஞ்சங்கள் -
இரையும் கரை;
பட்சி வர்க்கங்கள் -
உறையும் கரை;

பட்சி எச்சங்கள் -
இறையும் கரை!

ஒருவாய் -
நீர் வேண்டி...
ஒன்றுக்கும் உதவாக்கரை -
வந்தாலும் உதவும் கரை!

தினப்படி -
தாகத்திற்கு -
தண்ணீர் குடிக்க வரும் -
தென்றலுக்கும்...
இக்கரை நீர்மீதுதான் -
அக்கறை; ஏனெனில் -
இக்கரை நீர்தான் -
சர்க்கரை!
எனினும் -
இருகரை நெடுக...
வண்டி வண்டியாய் -
மண்டிக் கிடந்தது -
வண்டல் கறை; அதைத்
துடைக்க முயன்று -
தோற்றுப் போனது -
தண்ணீர் நுரை!

தீர்த்தக் கரை
நேர்த்தியை - சந்தனு
பார்த்துக்கொண் டிருக்க...
திடுமெனக் குறைந்தது -
தண்ணீர் வரத்து;
திகைப்பில் நின்றான் - சில
நொடி
தேகம் மரத்து!

பின் -
தொலைவில் பார்த்தான்; ஒரு
சின்னப் பையன்...
கலைவில் கையேந்தி -
கணைகளைக் கொண்டு - ஓர்
அணையெடுத்தான்; கங்கை
ஆற்றைத் தடுத்தான்!
ஆர்வம் உந்த -
அரசன்...
அவனிடம் சென்றான்;
'ஆர் நீ?' என்றான்!

பதில் சொல்ல -
பையன் தன்வாயைப்
பையத் திறக்குமுன்...
பையனை - கருப்
பையினில் வைத்திருந்து -
பிரசவித்த கங்கையே -
பிரசன்ன மாகி...

'மன்னா!
உன்னால் என்னில் -
உதித்த எண்மரில் -
ஒருவன் - இந்தச்
சிறுவன்!
வசிஷ்டரிடம் கற்றான் -
பல் வித்தை;
பரசுராமரிடம் பெற்றான் -
வில் வித்தை!
இவன்தான் - உன்
மண்ணுக்கு இனி -
மிராசு; இவனது
நுவலற் கரிய
நுழைபுலத்தை
நிறுக்க - இந்தத்
தராதலத்தில் இல்லை -
தராசு!

இவன் பெயர் -
தேவ விரதன்; நற்குணம்
யாவும் ஒன்றாய் -
மேவும் வரதன்!
இந்தா! - உனது
மகனைப் பிடி! - திருப்பித்
தந்து விட்டேன் வாக்குத்
தந்தபடி!' என்று

தனயனை – அவன்
தந்தையிடம் தந்துவிட்டு –
மறைந்தாள் கங்கை; ஈசன் –
முடிமேலிருக்கும் தண்ணீர்
மங்கை!

அம்புலிகுலம் –
அடுத்த வாரிசு இன்றி –
அமாவாசை ஆகிவிடாமல்...
ஒரு
நிலாக் கொழுந்தை
நகருக்குள் –
அரசன் சந்தனு
அழைத்து வந்திருப்பதை...
தென்றல் –
தேசமெங்கும்
தெரிவித்தது; ஓர்
அரசு ஆணையும் – அதை
அதிகார பூர்வமாக
அறிவித்தது!

தேசத்தார் –
வாசத்தார் சூட்டி – தேவ
விரதனுக்கு –
வரவேற்பு நல்கினர்; அவன் –
சோதி முகத்தின் –
சோபிதம் காண –
வீதியெங்கும் –
வெள்ளமாய்ப் பல்கினர்!

ஓரை பார்த்து –
ஊரைக் கூட்டி...
மகனுக்கு –
மன்னன் சந்தனு –
இளவரசுப் பட்டத்தைச்
சூட்டினான்; அந்த
இளங்கன்றை அரசு வண்டியில் –
பூட்டினான்!

தேவ விரதன் –
தேசத்தார் மனங்களில் –
தேங்கினான்; அவர்தம்
துயரங்களை –
தனது தோள்களில்
வாங்கினான்!

ஆண்டுகள் –
நான்காயின;
இன்றெல்லாம் –
நேற்றாயின!

சந்தனு மன்னனின் –
சரித்திரத்தில்...
தீர்த்தக் கரைகளே –
திருப்பு முனைகளைத்
தீர்மானிக்கின்றன!

நீளக் கிடக்கும் – ஏதோ ஒரு
நீல நதிக் கரையில்தான் –
நிகழ்கிறது – அவனது
நிச்சய தாம்பூலம்; இது பற்றி –
நாணல்; நாவாய்;
நாரை; தேரை – இவற்றின்
வாயைக் கிளறினாலே போதும் –
வழங்கிடும் வாக்குமூலம்!

ஒரு நாள் –
யமுனைக் கரையில் – சந்தனு
உலா வருகையில்...
வழிநெடுக – சிறு
வாடை வீசியது;
வாடையில் – நறு
வாடை வீசியது!
அவன் –
மூக்கு நுனியை
முதலில் அது –
முத்த மிட்டது; பின்பு
மூக்குக் குள்ளேயே –
முகாம் இட்டது!

'எந்தப் பூவில் –
வாசம் செய்யும் –
வாசம் இது?'
என்று அறிய...
வாசத்தையே – தனக்கு
வழிகாட்டியாக –
அழைத்துக் கொண்டு –
அரசன் சென்றான்!
சிறிது தூரம் –
சென்ற பின் தான்...
வாடையில் வந்த – நறு
வாடையை வீசியது – நூல்
ஆடையில் நின்ற – பால்
ஆடையென்று கண்டான்!

அவள் –
பரதவர் குலத்துப்
பாவை! – இந்தப்
பூவில் – எந்தப்
பூவிலும் இல்லாத
வாசத்தை – தன்
கேசத்தில் –
வைத்திருக்கும் பூவை!
வலைச் சேரியில் –
உலவும் –
வாசனைச் சேரி;
நெய்தல் நிலத்தில் –
பெய்த –
நறுமண மாரி!

அவள் பெயர் சத்தியவதி;
அவளொரு சந்தன நதி!
சந்தன நதியை சந்தித்ததாலே –
சஞ்சல மானது சந்தனு மதி!

நறுமணத்தை –
நுகர்ந்த மனம் –
மறுமணத்தை
விரும்பியது; அதற்கு –
மறுபடியும் வாலிபம்
திரும்பியது!

பெண்ணின் தந்தையை –
பார்த்துப் பேசினான் –
மண்ணின் தந்தை;
மண்ணின் தந்தையை –
மலைக்க வைத்தான் –



பெண்ணின் தந்தை!

'மன்னா! – என்
மகளின் வயிற்று –
மகனுக்குத் தான் –
மணிமுடி! இது –
முடியுமானால் –
மணம் முடி! என் –
மகள் கழுத்தில் போடு –
மூன்று முடி!'
என்று...
சத்தியவதி தகப்பன் –
சட்டம் பேசினான்;
அரும்பிய காதலை – சந்தனு



அங்கேயே வீசினான்!

'வானவ மங்கை –
வழங்கிய பிள்ளை –
தலைக்கு உரியது –
திருமுடி! அதை –
மீனவ மங்கை –
மகனுக்கென்றாக்கி –
வழங்குவதென்பது –
வழிப்பறி!'
என்று –
எண்ணினான்; உடனே
தேரில் ஏறி –
திருநகரம் நண்ணினான்!

புத்திர வாஞ்சை –
ஒருபுறம்;
சத்தியவதியின்
சித்திர வதனம் –
ஒருபுறம்; இங்ஙனம் –
இழுபறி நிலையில் – சந்தனு
இளைத்துப் போனான்;
இருபுறம் அடிவாங்கும் –
மிருதங்கம் ஆனான்!

'என்ன கவலை –
எந்தையின் சிந்தையை –
தின்ன கவலை?'
என்று...
தேவ விரதன் – தந்தையின்
தேரோட்டியைக் கேட்டான்;

'கவலைக்குக் காரணம் –
கைவலை வீசும் – ஒருத்தியின்
கண்வலை!' என்னும்
தகவலை...
தேவ விரதன் செவிகளில் –
தேரோட்டி போட்டான்!

உடனே –
வலைச்சேரி சென்றான் –
வேந்தனின் புதல்வன்;
மலைப்பேறி நின்றான் –
மீனவர் முதல்வன்!

'நெய்தல் நிலத்து
நாயகனே! – அருள்
செய்தல் வேண்டும்; என் –
இளவரசுப் பட்டத்தை –
இக்கணம் முதல் – யான்
இழந்தேன் யாண்டும்!
என் –
வார்த்தைக்கு –
வானம் சாட்சி;
வீசு தென்றலின் –
கானம் சாட்சி!
உன் –
தனயைக்கும் – என்
தந்தைக்கும் – உடனே
மணம் முடி; உனது
தனயை வயிற்றுத்
தனயனுக்குத் தான் –
மணிமுடி!'
இங்ஙனம் –
தேவ விரதன் – தனது
தீர்மானத்தை முழக்கினான்;
இருப்பினும் –
சத்தியவதி தந்தை – ஒரு
சந்தேகத்தை எழுப்பினான்!

'உத்தமபுத்திரனே!
உலகறியும் –
உன் யோக்கியம்;
ஒரு பொழுதும் –
உயிரிழக்காது –
உன் பாக்கியம்!
ஆனால்...
உன் வாக்கை நாளை
உன் மகன் காப்பானா?

இல்லை... என்
பேரனை - போருக்கு
இழுத்துப் பார்ப்பானா?'

செம்படவர் தலைவன் -
சம்சயப் பட்டான்;
சந்தனு தனயன் - ஒரு
சபதத்தை இட்டான்!

'அய்யனே! - நீ
அச்சம் விடு! - அன்பு மகளை
அச்சனுக்குக் கொடு! - நான்
பூமி நீங்கிப்
போகும் வரையும் -
பூத உடலம்
வேகும் வரையும் -
பூண்டு நிற்பேன்
பிரமசரியம்;
பேண மாட்டேன் -
பெண்ணின் பிரியம்!'

பொன்னுலகத்தோர் -
தேவ விரதன் மேல் -
பூமாரி பெய்து போற்றினர்;
'புரிதற்கரிய செயலைப்
புரிந்தவன்!' எனும்
பொருளில் - அவனுக்கு
'பீஷ்மன்!' - என்று
புது நாமம் சூட்டினர்!

# அம்பை! அம்பிகை! அம்பாலிகை!

'உந்தை மணம்கருதி - மகனே!
உன்மணம் கைவிடுத்தாய்; இவ்
விந்தை நிகழ்த்தி - உனையீன்ற
விந்தை கௌரவித்தாய்!
என் பொருட்டு...
மாதர் மயல்தனை -
மறுதலித்தாய்! எனக்கு நீ -
மகனல்ல மகனே!
மற்றொரு தாய்!
நீ -
அழைக்காமல் - உனை
அணுகாது மரணம்;
அதற்குமுன் அணுகினால் -
அதற்கு நேரும் மரணம்!'
என்று...

சத்தியவதியை மணந்த -
சந்தனு மன்னன் - தனது
புத்திர ரத்தினம் -
பீஷ்மனை...
நாவாரப் போற்றினான்;
வரம் தந்து -
நன்றிக்கடன் ஆற்றினான்!
மன்னனுக்கு -
மறுபடியும் ஒரு
'முதல் இரவு!' - இந்த
முதல் இரவு -
முடியாமலே நீண்டது - பல
பகல் இரவு!

வானவப் பெண் - முன்னம்
வாரிச்சுருட்டிய மெத்தையை -
மீனவப் பெண் - தூசு தட்டி
மீட்டும் விரித்தாள்;
பிறகு - தன் மேல்
பிச்சாய் இருக்கும்
புருஷனையே - மார்புக்
கச்சாய் தரித்தாள்!

காவலன் -

குடங்குடமாய்க் குடித்தான் -
காய்ச்சிய பாலை; பின் -
கும்மிருட்டில் படித்தான் -
காமத்துப் பாலை!
அரசன் நினைவில் -
அந்நிய மானது -
அத்தினபுரம்; அதிக
அந்நியோந்நிய மானது -
அந்தப்புரம்!

கிழக்கு வெளுப்பதில்
கவலைப் படாது - ஆசை .
மனத்து
அழுக்கு வெளுப்பதில்
ஆலாப் பறந்தான்;
அல்லெது? பகலெது?
அறவே மறந்தான்!
அவனை -
ஆட்டிவைத்தன - அகத்திணை
ஆவல்களின் ஏவல்கள்; செவி
சேரா தொழிந்தன - சிறுகாலைச்
சேவல்களின் கூவல்கள்!

வேந்து விடாது வாசித்தான் -
வாத்சாயன வாக்கியம்;
சத்தியவதிக்கு வாய்த்தது -
சந்தான பாக்கியம்!

இரண்டு மகன்களை -
இடைவெளி விட்டு -
ஈன்றெடுத்தாள்;
சீமந்த புத்திரனுக்கு -
'சித்திராங்கதன்' என்றும் - பின்
விளைந்த புத்திரனுக்கு -
'விசித்திர வீரியன்' என்றும்
பேர்கொடுத்தாள்!

இளைய புதல்வன்
இளமை எய்துமுன் -
இறையவன் சந்தனு
இயற்கை எய்தினான்!

ஆடின கொடிகள் -
அரைக் கம்பத்தில்;
வாடின குடிகள் -
முழுத் துன்பத்தில்!

நாள்தோறும்...
நாக்கை வழித்தாலும் -
நாக்கில் நேற்றுவைத்த
வாக்கை வழிக்காத -
விரதன் பீஷ்மன்...

சத்தியவதியின் -
சீமந்த புத்திரன்
சித்திராங்கதனை -
சிம்மாசனத்தில் இருத்தினான்;
'இம்பர் உளநாள் மட்டும் -
எம்பி! நீ வாழ்க!' என்று -
செம்பொற் கிரீடத்தை - தம்பி
சென்னியில் பொருத்தினான்!

இந்த
பீஷ்மனின் இளவல் - தன்
பிதாவைப் போல் - ராஜ்ய
பரிபாலனம் பண்ணினான்; நல்ல
பெயர் வாங்க எண்ணினான்!

பாவம்! - இவன்
பெயர் வாங்குமுன்பே -
இவனுக்குப்
பெற்றோர் இட்ட பெயர் -
இவன்
உயிர் வாங்கியது!

இவனைப் போல் -
இன்னொரு சித்திராங்கதன்
இருந்தான்; கந்தருவ நாட்டு -
இளவரசன்!
இறுமாப்புடையோன்!
இவனிடம் அவன் ஏகமாய் -

இரைந்தான்!

'என் பெயரை நீயேன் –
ஏற்றிருக்கிறாய்? ஒரு
குழப்படி காரனாய் நீயேன் –
குடைநிழலில் வீற்றிருக்கிறாய்?
உனக்கு வரும் இகழெல்லாம் –
எனக்கு வருகிறது;
எனக்கு வரும் புகழெல்லாம் –
உனக்கு வருகிறது!
உனது –
பேரை மாற்று! இல்லையேல் –
பொருத வா! நான்தொடுக்கும் –
போரை ஏற்று!'

சினந்தான் – அந்த
சித்திராங்கதன்! சீயமென –
சீறினான் – இந்த
சித்திராங்கதன்!

இரண்வதி நதிக்கரையில் –
எழுந்தது போர்; அத்தினபுரம்
விரும்பி யழைக்காமலே – வந்து
விழுந்தது போர்!

புவியில் –
பேராசையில் – வேந்தர்
புரிவதுண்டு போர்; இது –
பேராசையில் வந்த போரல்ல;
பேர் ஆசையில் வந்த போர்!

சிறு –
அக்கப் போராக –
ஆரம்பம் ஆனது – பெரும்
வர்க்கப் போராக –
உக்கிரம் அடைந்தது!

முழுமூச்சாய் நடந்தது –
முப்பத்தாறு மாதங்கள்;
இருவர் தரப்பிலும் –
ஏகப்பட்ட சேதங்கள்!

வீரர்கள் –
வாள்களைச் சுழற்றினர்;
வாள்களைச் சுழற்றி – மாற்றார்
தோள்களைக் கழற்றினர்!
பீரிட்டது ரத்தம்; நெடுநாள் –
நீடித்தது யுத்தம்!

கடைசியில்...
கந்தருவ நாட்டரசன் –
கடுஞ்சினம் காட்டினான்; கூர்
ஈட்டியை சித்திராங்கதன்
ஈரலில் பாய்ச்சி – அந்த
ஈட்டியால் வெற்றியை
ஈட்டினான்!

சித்திராங்கதன்
செத்தது கேட்டு –
சித்தங் கலங்கினாள்
சத்தியவதி! ஏற்கனவேயே –
சத்திரபதி –
சந்தனு சாவால் –
தேய்ந்து கிடக்கும்
சந்தன மதி!

பீஷ்மனும் ஒருகணம்
பிரமித்து நின்றான்; பிறகு –
'விதியது விதியது –
வலியது! வலியது!' என்றான்!

அழுது கிடக்கும் – சிறிய
அன்னையை அணுகி –
ஆறுதல் சொல்லித் தேற்றினான்;
அடுத்த இளவல் –
விசித்திர வீரியனை –
அரசு கட்டிலில் ஏற்றினான்!

மகுடம்;
மயிலாசனம்;
மரகதவாள்;
மணியாரம்! – எல்லாம்
வாய்த்தும் கூட ...
விசித்திர வீரியன் – மெல்ல
வெந்து கொண்டிருக்கும் –
பணியாரம்!

வயதுக்கு வராத
வயது; வடிகால் -
வாய்க்காது ததும்பும் -
வாய்க்கால் மனது!
மூக்குக்குக் கீழே -
மீன மேஷம் பார்த்து -
புறப்பட்டுக் கொண்டிருந்தது -
பூசை முடிபோல் மீசை;
ஆதலால்...
அண்ணன் பீஷ்மனே -
அவன் சார்பாக ஓட்டினான் -
அரசியல் தேரை!

வந்தது -
வேளையானது;
கன்றது -
காளையானது!

விதித்திர வீரியன் -
விதரணை யாக
செங்கோல் ஓச்சினான்;
அத்தினபுரத்தில் -
அறப்பயிர் ஓங்க - அன்பெனும்
செழுநீர் பாய்ச்சினான்!
மண்ணை மணந்தபின் - ஒரு
பெண்ணை மணக்க
வேண்டாமா? - தம்பிக்குப்
பெண் பார்க்கத்
தொடங்கினான் - பீஷ்ம
தர்மாத்மா!

அம்பை!
அம்பிகை!
அம்பாலிகை!

இந்தக்
கன்னியர் மூவரும்...
காசிராஜனின் -
கருமூலம் விளைந்த
கருவூலம்!
மன்னன் - தன்
மணி விழிகளில்
தாங்கிநின்ற
திரிசூலம்!

தேவரும் -
யாவரும் -
மோகித்து நின்ற - இந்த
மூவரும்...

வங்கம்; கலிங்கம்;
கோசலம்; புண்டரம் -
ஆகிய -
தேசங்களுக்கும்
அப்பால் -
அழகு வெளிச்சம்
அடித்து நின்ற...
முத்தமிழ்;
முச்சங்கம்;
முப்பால்!

அம்பை!
விழியில் வைத்திருப்பாள் -
அம்பை!
அப்பழுக்கற்ற
மனம் கொண்ட -
தும்பை!
அந்தம் ஆதி
அந்தம் கொழிக்கும் -
ரம்பை!
கொடியிடை
தேடி நிற்கும் - கொழு
கொம்பை!

அம்பிகை!
அரண்மனைத் தாமரை; எனவே -
தேனெடுக்கத் துணியாது -
தும்பிகை!
இன்னொரு -
கன்னி கை பட்டாலும் -
கன்றிப் போகும் - இளங்
கன்னிகை!
பொன்னகை பொலிவைப்

புறங்காணும் - தகத்தகாய
புன்னகை!
தூரிகை தொட்டெழுதாச்
சித்திரம் என்றிருக்கும் -
காரிகை!

அம்பை; அம்பிகை -
ஆகியோர் அழகை -
அப்பால் நிறுத்துபவள் -
அம்பாலிகை!
விண்மேனகை -
வெள்குமாறு விளங்கும் -
மண்மேனகை!
வண்ணமேனி - ஒரு
மோக மாளிகை! - அவள்
வாய் வார்த்தை - ஒரு
ராகமாலிகை!

பூப்பெய்திய பெண்களுக்கு -
தான்
மூப்பெய்துமுன் மணமுடிக்க -
காசிராஜன் எண்ணினான்;
உரிய -
காரியங்களைப் பண்ணினான்!

சுற்றுவட்டத்து அரசர்க்கு -
சுயம்வர சேதி; தேதி சொல்லி -
காசிராஜன் வரைந்த -
கடிதங்கள் சென்றன;
மூன்று மாலைகளைபபெற -
முந்நூறு கழுத்துகள் -
கனக தண்டிகைகளில் -
காசிக்கு வந்தன!

சிற்றன்னை
சத்தியவதி உத்தரவு பெற்று -
சுயம்வரத்தில் பங்கு பெற -

புறப்பட்டான் -
பீஷ்மனும் தேரில்;
கால்வைத்தான் - கவின்மிகு
காசியென்னும் ஊரில்!

# சுயம்வரம்

சிவிகைகளில்; செம்பொனால் -
செய்த செய்யரதங்களில்;
துரகங்களில்; முகபடாம்
துலங்கிடு தும்பிகளில்...
நகருக்குள் புகுந்த - அயல்



நாட்டவர் கூட்டத்தால்...

காசி நகரம் – ஒரு
தூசி நகரம் ஆனது;
புழுதிப் படலம் – பூமிக்குப்
போர்வையாய்ப் போனது!

சுயம்வரத் திருநாளில் – ஊர்
சுயம் இழந்து நின்றது; அதன்
இயல்பான வாழ்க்கை –
இரண்டுநாள் விடுப்பில் சென்றது!

ஆடவர்;
பெண்டிர்;
அனைவரது தோள்களிலும் –
துருதுருப்பும் –
சுறுசுறுப்பும் –
தொத்திக் கொண்டன; அவரவர்
மனப்படி விளைந்து –
மண்டிக் கிடக்கும் –
தினப்படிக் கவலைகள் –
தொலைந்தே போயின!

ராஜகுமாரிகள் சுயம்வரத்தை –
ரகசியமாகப் பார்க்க...
ஆகாய மேகமும் –
ஆற்றங்கரைக் காற்றும் –
அரண்மனைச் சாளரங்களின் –
அண்டையில் நின்றன;
'யார் மாலை? –
யார் கழுத்தில்?' – என்னும்
சர்ச்சையில் இறங்கி – இரண்டும்
சண்டையில் நின்றன!

சுயம்வரம் நடக்கும் –
சபா மண்டபத்தில்...

பன்னாட்டு அரசர் நடுவில் –
பீஷ்மனும் அமர்ந்திருக்க...
பாதிசபை திகைத்தது;
மீதிசபை நகைத்தது!

அத்தனின் ஆசை அடுப்பு
அவியா திருக்க – தன்
வாலிப வேட்கையை –
விறகாய்க் கொடுத்தவன்;
இல்லறம் என்னும் – ஒரு
சொல்லையே – இதயப்
புத்தகத்தி லிருந்து –
கத்தரித்து எடுத்தவன்!

இவனைப்
பார்த்தாலே – பெண்களுக்கு
மரியாதை கலந்த –
பயம் வரும்! இவனுக்கு –
எந்த விதத்தில் –
ஏற்புடையது – இந்த
சுயம்வரம்?

பிறந்தது கேள்வி; கூடவே –
பிறந்தது கேலி!

'இது –
திடகாத்திர தேகங்களுக்கான –
திருமணத் தேர்தல்! இங்கு –
வேட்பு மனு தாக்கல் செய்ய –
மூப்பு ஏன் வந்தது? இவன் –
இத்துணை நாள் காத்து நின்ற –
பிரமசரியம் – ஓசைப்படாமல்
எப்போது காற்றோடு சென்றது?

பிரதிக்ஞை செய்து –
பீஷ்மன் என்று –
பார் பேசும்படி –
பேர் பெற்றானே...
அந்தப்
பேச்சும் பேரும்
மெய்யா? – இல்லை
கேழ்வரகில் வடிகின்ற –
நெய்யா?'

இத்தகு –

நக்கல் பேச்சுகள்
நாலாபுறமும் கேட்டது;
தங்கத்தை -
செப்பாய் எண்ணி - சபை
தப்பாய் எடை போட்டது!

பிரியமுள்ள தம்பிக்குப்
பெண்ணெடுக்கத்தான் -
பீஷ்மன் வந்தான்; அவசரக்
குடுக்கைகள் வாரிக்
கொட்டிய சொற்களால் - உலை
அடுப்பென உள்ளம் வெந்தான்!
ஒரு
கடிகைப் பொழுது - உடல்
கூசினான்; பிறகு -
வார்தைகளுக்கு
நெருப்பு முலாம் பூசி -
வீசினான்!

'என்
நோக்கம் அறியாது -
நொட்டைச் சொல் பேசிய -
மூர்க்கர்களே! சூளுரைத்த என் -
சொற்களுக்குக்
குற்றம் கற்பித்த -
தூர்த்தர்களே!

இப் படிமிசை -
எட்டு வகைத் திருமணங்கள்
உண்டு; அவற்றில் -
பராக்கிரமம் காட்டி -
பெண்ணைக் கடத்தி மணக்கும் -
இராக்கதமும் ஒன்று!

இந்தக்
கன்னியர் மூவரையும் - என்
கனகமணித் தேரில் - நான்
கடத்தப் போகிறேன்; என்
தம்பி -
விசித்திர வீரியனுக்கும் - இந்த
வஞ்சியர்க்கும் - விவாகத்தை
நடத்தப் போகிறேன்!
முடிந்தால் தடுத்திடுக!
முடியாதெனில் - அந்த
முயற்சியை விடுத்திடுக!'
என -
எழுந்த பீஷ்மன்...

பூக்கள் மூன்றையும் - நொடிப்
பொழுதில் கடத்தி - பொங்கும்
பௌவம் நிகர் - தனது
பௌருஷம் காட்டினான் -
பொருதிய
புரவலர்க் கெல்லாம்;
அந்தப்
பூக்களை மீட்கப் போய் - உயிர்ப்
பூக்களை உதிர்த்தோர்க்கு....
இரங்கற்
பாக்களைப் பாடி நின்றார் - உற்ற
பந்துக்க ளெல்லாம்!

தன்னைச்
சொல்லால் அடித்தோரை -
சொல்லிச் சொல்லி - கை
வில்லால் அடித்து -
வீழ்த்தினான் பீஷ்மன்;
ஆயினும் அவனை -
அயராது எதிர்த்தான் -
ஆண்டகை ஒருவன்;
அவன் பேர் சால்வன்!

சௌபல தேசத்து -
அரசன்; அளப்பரும்
சௌரியம் மிக்க -
அழகன்! குமரியர் -
குழைந்து குழைந்து -
கொஞ்ச நினைக்கும்
குழகன்!

மூவரில் -
மூத்தவளான அம்பை...
முன்னமேயே - தன்
மனத்தால் வரித்து விட்ட -
கேள்வன்! - அந்த
சால்வன்!

களவு போவது - தன்
நிலவு என்பதால்தான்...
தொடர்ந்து வந்து - சால்வன்
தொடுத்தான் போரை; ஒரு
தப்படி கூட தவழமாட்டாது -
தடுத்தான் தேரை!

பீஷ்மன் என்னும் -
பெருங் கடலில் - சால்வன்
காட்டிய வீரம் - பெருங்
காயமாய்க் கரைந்தது; தன் -
பச்சைக் கிளிக்காக - வாள்
பற்றிய வீரனுக்கு - உயிர்ப்
பிச்சை கொடுத்துவிட்டு -
பீஷ்மனின் ரதம் விரைந்தது!

'இந்த மட்டும் - களத்தில்
இனிய காதலன்...
காற்றுப் போகாமல் -
தோற்றுப் போனானே!' -
என்று - காசிராஜன்
கன்று - ஆனந்தக்
கண்ணீர் வடித்தாள்;
காதல் வெம்மையால் -
உள்நாக்கு
காய்ந்து போக - அந்தக்
கண்ணீரையே - ஒருவாய்த்
தண்ணீராய்க் குடித்தாள்!

நெஞ்சம் -
நொந்து நொறுங்கிய - மூன்று
நீல நிலாக்களும் - தேரில்
வந்து இறங்கிய - அந்த
வைகறை நேரம்...
அத்தின புரத்து -
அரண்மனை வாயிலில் -
ரத்தினக் கம்பளம்;
ராஜோப சாரம்!

மூவர்க்கும் - மெல்லிய
முறுவலால் முகமன் கூறி -
வாஞ்சையுடன் வரவேற்றாள் -
சத்தியவதி! அவளது
விழியெல்லாம் வழிந்தது -
சந்தோஷ நதி!

தம்பி
தாலி முடிப்பதற்கு...
மூன்று கழுத்துக்களை -
மூத்தவன் கொண்டு வந்ததில் -
முழுச் சம்மதம் அவளுக்கு;
கல்யாணம் முடித்து -
கனகமணிக் கட்டிலில்...
கால் கொள்ளும் - மூன்று
கொண்டல்களில் - ஒன்றேனும்
சூல் கொள்ளுமாயின்...

சந்ததிப் பயிர் -
செழிக்குமென்பது அவள்
கணக்கு!

விசித்திர வீரியனின்
விவாகத்தை - அதி
விமரிசையாய் நடத்த...
பீஷ்மன் ஆசைப்பட்டான்;
பெரிதும் பிரயாசைப்பட்டான்!

சிற்றன்னை
சத்தியவதியின் -
ஆலோசனைகளை -
அவ்வப்போது கேட்டான்;
அவற்றை அப்படியே ஏற்றான்!

மாணிக்க மேடையிட்டான்;

மரகதப் பந்தலிட்டான்;
ஆணிப்பொன் கூரையிட்டான்;
அனைத்தையும்
பார்வையிட்டான்!

கங்குலும் பகலும்
கண் துஞ்சாது - மணவறையில்
அங்குலம் அங்குலமாக -
அழகைக் கொட்டினான்;
நட்டு வைத்த -
நற்கதலி மரத்திற்குக் கூட -
பட்டுத் துணியால் -
பாவாடை கட்டினான்!

ஊர் -
கோலாகலமா யிருந்தது;
உற்சாகம் -
கொடிகட்டிப் பறந்தது!

இந்த -
ஆரவாரங்களில் அகப்படாது -
ஓரமாய் நின்றாள் அம்பை; பின் -
இறக்கை -
ஒடிந்துபோன உள்ளத்திற்கு -
ஒருவாறு ஏற்றினாள் தெம்பை!

பிறகு -
பெண்மைக்கே உரிய -
பொறையோடும் நிறையோடும்...

பூமியைப் பார்த்து -
பாதம் நடந்தாலும் -
'வஞ்சினம் கொண்டு -
வஞ்சியினம்
விழியை உயர்த்தினால் -
மஞ்சினம் மேயும் - விசும்பதும்
மண்மிசை வீழும்!' என்னும் -
பழமறை வாசகம் -
பழகிய நினைவோடும்....

'அச்சத்தைப் போக்கும் -
பெண்மை
அக்கிரமத்தின்
உச்சத்தைப் போக்கும்!' -
என்னும்
உறுதியான உணர்வோடும்....

அம்பை - பீஷ்மனை
அணுகினாள்; 'எனக்கு நீ -
நடுக்கண்ட நியாயத்தை -
நல்குவையோ?' என்று -
வினவினாள்!

'பீஷ்மனே! புகழ் -
போர்த்த மேனி கொண்ட -
பெருமகனே! புனித -
தீர்த்தமங்கையின் -
திருமகனே!

பிதாவிற்காக - இப்
பிறவியில் - தானொரு
பிதாவாக ஆவதில்லை - என
பிரதிக்ஞை செய்த -
பெரியவனே! - மிக மிக
அரியவனே!

நீ -
தருமம் தெரிந்தவன்; அதன் -
மருமம் புரிந்தவன்!
சொல்!
நெஞ்சத்தில் ஒருவனையும் -
நறு மலர் தூவிய -
மஞ்சத்தில் ஒருவனையும் -
மாதொருத்தி மருவலாமோ?

ஒருவர் எச்சிலை -
மற்றொருவர் பருகலாமோ?
ஒப்புமா - நீ ஏற்று
ஒழுகும் தருமம் இதற்கு?

உன் -
இளவலோடு - என்னை

இணைப்பது எதற்கு?
சௌபல தேசத்துக்
காவலன்! - அந்த
சால்வன்தான் - என்
காதலன்!

இருவரும் -
ஒருவரை யொருவர் -
ஏற்கனவேயே...
விழிகளால் -
விழுங்கிவிட்டோம்!

இப்போது -
இங்கே இருப்பது -
சேலை கட்டிய -
சால்வன்;
இப்போது -
அங்கே இருப்பது -
அங்கி அணிந்த -
அம்பை!

வானதியின் -
வழித் தோன்றலே!
என் -
வார்த்தையைக் கேட்டு -
என்னை நீ -
விடுவி; நீ -
அறங்காப்பவன் என்பதை -
இந்த -
அகிலத்திற்கு -
அறிவி!'

அம்பையின் -
அந்தரங்கம் அறிந்து -
அவளை சால்வனிடம் -
பீஷ்மன்
அனுப்பி வைத்தான்;
அம்பிகை; அம்பாலிகை -
ஆகிய இருவரையும் - தன்
அனுஜனின் தாரங்களாய் -
ஆக்கி வைத்தான்!

அழகு மயில் -
அம்பை எண்ணினாள்:
'அன்பு என்றும் -
தோற்பதில்லை!' என்று.

சௌபல தேசத்து -
சால்வன் எண்ணினான்:
'அம்பை வந்தால் -
ஏற்பதில்லை!' என்று.

---

# முருகன் கொடுத்த மலர் மாலை!

பிறையெடுத்து வளர்ந்த -
பெட்டைத் திங்களை - பீஷ்மன்
சிறையெடுத்து வந்து - பின்னர்
சீக்கிரம் விடுவிக்க...

தும்பை அவிழ்த்தவுடன் -
துள்ளும் கடாரிபோல் -
அம்பை ஆழ்மனத்தில் -
ஆயிரம் அபிநயங்கள்!

கூந்தல் முதல்
குதிகால் வரை - காதல்
பித்தமான நரம்புகளில் -
சுத்தமான சுதிலயங்கள்!

புனல் -

ஊற்றுங்கண் ஒரு நொடியில் –
உலர்ந்துபோய் – புன்னகையின்
ஊற்றுக்கண் என்றாகி...

நேற்று –
பட்ட சங்கடங்கள் எல்லாம் –
பகற்பொழுதில் கண்ட –
கெட்ட சொப்பனங்கள்
என்றாகி...

அழுத முகம் – கண்ணீர்
உழுத முகம் – ஓர்
அழகு முகம் என்றாகி...

காதல் –
சத்துணவு கிட்டுமெனும்
சந்தோஷத்தில் – ஒரு
புத்துணர்வு பரவ...
மொக்கில்லா –
முளரித் தண்டு – என
முன்னம் ஒசிந்த –
முதுகுத்தண்டு நிமிர...

அம்பை –
ஆனந்தக்கூத் தாடினாள்;
சால்வனைத் தேடி –
சௌபல தேசத்திற்கு ஓடினாள்!

வண்டு –
ஊதாப்பூ – என
இதுகாறும் வாடிநின்ற –
ஊதாப்பூ – நேரில்
வந்து நின்றதும் – அதை
வாரியணைக்க வில்லை –
வண்டு! அது –
தள்ளி நின்றது – முகத்தைத்
திருப்பிக் கொண்டு!

அம்பை –
அதிர்ந்து போனாள்;
அக்கணமே –
ஆடிமாதப் பூமரமாய் –
உதிர்ந்து போனாள்!

'சால்வனே! – பிரிய
சிநேகிதனே!
என் –
இந்திரியங்கள் முழுக்க –
இறைந்து கிடக்கும் –
இந்திரனே! – இந்த
செங்கழுநீரை –
சிலிர்க்கவைக்கும் –
சந்திரனே!

நீ –
முகம் கொடுத்துப்
பேசாததற்கு – என்ன
முகாந்தரம்? – உன்
மௌனத்தைக் காட்டிலும் –
கொடிய தல்ல – அந்த
வனாந்தரம்!
'இந்த –
சொந்தமும் பந்தமும்
தொடர்ந்திருக்கும் – பல
ஜன்மாந்தரம்!' – என்று நீ
சொன்ன சொல் –
சென்றதோ இன்று –
தீவாந்தரம்?
அப்படியாயின்...
நீவைத்த நேசம் –
நாலாந்தரம்!

உன்மேல் –
நான்வைத்த நேசம் –
உயர்தரம்! அது –
உனக்காக –
உயிர்தரும்!
அதுசரி...
அன்பனே!
என் வருகைக்கு – நீ
ஏங்குவாய் என்றிருந்தேன்;



அந்த -
எண்ணம் ஏன் -
பொய்த்துப் போனது? உனக்கு
என் -
வண்ணம் ஏன் -
கைத்துப் போனது?
நீ -
மாலையிட வேண்டுமென்று -
மன்றாடுகிறது - என்
மயில் கழுத்து;

ஆனால்....
கழுத்து கொண்ட
காதலை - தலை
எழுத்து மாற்றுமோ?
என்னை ஏமாற்றுமோ?
தெரியவில்லையே!
எனக்கு ஒன்றும் -



புரியவில்லையே!'
என்று –
அம்பை கேவினாள்; ஓர்
அபலைபோல் கூவினாள்!

சால்வன் – பதில்
சொல்ல லானான்; நினைவில் –
சற்று பின்னோக்கிப் போனான்!

'அம்பையே!
அந்த நாள்களில் – இளகிய
அந்திப் பொழுதுகளில்...
தினம் தினம் – நம்மைத்
திங்கள் கொன்றது;
தென்றல் தின்றது!
ஒருவரில் ஒருவர் –
முழுகுவோம்;
ஒருவர் கன்னத்தை –
ஒருவர் உதடுகளால் –
மெழுகுவோம்;
மெழுகுவத்திபோல் –
மோகச் சூட்டில் – உருகி
ஒழுகுவோம்; ஒழுகினாலும் –
ஒழுங்கு கெடாது – நாம்
ஒழுகுவோம்!

நான் –
மறக்கவில்லை;
மறுக்கவில்லை!

ஆயினும்...
அற்ப ஆயுளில் – அந்தக்
காதல் கதை –
காலமாகி விட்டது;
இந்தக் கொடுமை – பீஷ்மனால்
இழைக்கப் பட்டது; நம்
சினேகிதத்தை – அவன்தான்
சவக்குழியில் இட்டது!
நானும் –
செத்துப்போன காதலுக்கு –

சரமகவி பாடிவிட்டேன்;
நமக்குள் –
ஒத்துப்போகாது என்று –
உளக்கதவை மூடிவிட்டேன்!
இப்போது நீ...
இன்னொருவன் வேட்டையாடிய
இறைச்சி; அதை
எடுத்து வழித்து – நான்
உண்பது என்பது –
இகழ்ச்சி!
போரில் – என்னைப்
புறங்கண்டான்; தனது
தேரில் – உன்னைத்
தட்டிச் சென்றான்!
அந்த
பீஷ்மனிடமே செல்; மணம் –
புரிந்துகொள்ளச் சொல்!'

ஒரு காலத்தில் – தன்னை
ஒரு சேரத் தழுவி – 'ஒசியும்
இடைச்சி!' – என்று
இடையைத் தடவியவன் –
இன்று
'இறைச்சி!' – என்று
இழித்துப் பேசிவிட்டானே! –
என
அம்பை வெம்பினாள்; மேலும் –
அழுது அழுது அழுது –
அம்பொற் கன்னம் வீங்கினாள்;
அதன்பின் அவனை நீங்கினாள்!

பிறகு...
சுவரில் அடித்த
பந்துபோல் –
சந்தனு புத்திரனிடமே –
திரும்ப வந்தாள்; துயரம் –
ததும்ப வந்தாள்!

"பீஷ்மனே! – நீதான்
பலாத்காரமாக – என்னைக்
கடத்தியவன்! அச்செயலை –
பகிரங்கமாக –
நடத்தியவன்! – என்பொருட்டு
வாளெடுத்து வந்தோரை –
வில்லெடுத்து – கீழே
கிடத்தியவன்!

'வீரம் காட்டி –
ஒருத்தியை ஒருவன் –
வலியக் கொணர்ந்தால் –
ஆரம் சூட்டி –
அவளை மணக்க வேண்டும்!' –
என
அரச தருமம் சொல்கிறது! – நீ
அரச தருமம் –
அறிந்தவன் என்று –
அனைத்துலகும் சொல்கிறது!
ஆதலால்...
அறவோனே! என்னை நீ –
மணத்தல் வேண்டும்!
நாறிப்போன – ஒரு
நங்கையின் வாழ்வு – உன்னால்
மணத்தல் வேண்டும்!" – என்று
காசிராஜன் மகள் –
கங்கை மைந்தனின் –
கால்களைப் பற்றினாள்; பற்றிக்
கண்களில் ஒற்றினாள்!

ஒண்டொடி – அப்படி
ஒற்றிய போதும் – பீஷ்மன்
ஒற்றைக் காலில் –
நின்றான்; 'அது –
உதவாது!' என்றான்.
சிறிது அமைதி காத்து – பிறகு
அம்பையிடம்...
'மங்கையே!
மறுபடியும் சொல்கிறேன்;
கேள்!
மணவாழ்க்கை – என்
விரதத்தைக் கடிக்கும்

தேள்!
ஊரறிய – நான்
ஒப்புக்கொண்ட சபதத்தை –
உன் பொருட்டு –
உதற மாட்டேன்; நீ –
கதறினாலும் – நான்
பதற மாட்டேன்; மணச்
சிக்கலில் சிக்கி – சிந்தை
சிதற மாட்டேன்!

மீண்டும் –
சால்வனிடமே செல்; நான் –
சொன்னதாகச் சொல்!'
என்று –
அம்பையை பீஷ்மன் –
அவள் காதலனிடம் –
அனுப்பினான்!
சால்வன் – அவளை
சுவீகரிக்க மறுத்து –
சந்தனு மகனிடமே –
திருப்பினான்!

அம்பை –
அங்கும் இங்குமாக –
அல்லாடினாள்;
அவ்விதம் –
ஆறு ஆண்டுகள் –
மல்லாடினாள்!

எந்தத் தோட்டமும் – தன்னை
ஏற்கவில்லை என்று – இந்த
மந்த மாருதம் – ஒரு
சண்டமாருதமாய் –
மாறியது! தன்னைப்
படாத பாடு படுத்திய
பீஷ்மனின் பிராணனை –
விடாது வாங்குவேன் – என
வெறிகொண்டு சீறியது!

விவாகம் என்னும்
வார்த்தையையே – அம்பை
உள்நாக்கிலிருந்து –
வழித்தெறிந்தாள்;
'இனி –
மணம் முக்கியமல்ல;
மகாநதி மைந்தனின் –
பிணம் முக்கியம்' – என்று
பிரதிக்ஞை புரிந்தாள்!

சொர்ணமலைச் சாரலுக்குச்
சென்றாள்; அங்கிருக்கும் –
பாகூத நதிக்கரையில் –
பன்னிரண்டு ஆண்டுகள்...
கால் –
கட்டைவிரலை மட்டும் –
நிலத்தில் ஊன்றி – நிட்டையில்
நின்றாள்!

அம்பையின் முன் –
அழகொளிரத் தோன்றியது...
ஏத்துவார்
எவர்க்கும் –
ஏறுமுகம் காட்டும் –
ஆறுமுகம்!
கவலைக்
கடல் வீழ்ந்தார் –
குறைமுகம் கண்டால்...
குறைதீர்த்துக் கரைசேர்க்கும் –
துறைமுகம்!

தரைமுகம் –
பார்த்து நடந்த – வள்ளிப்
பாவையை மணந்த –
துரை முகம்!
அன்பில் –
அமிழ்முகம் பார்த்தால் –
அருள் முகம் காட்டும் –
தமிழ்முகம்!

பழ
மறைமுகம் தனக்குள் –
மறைமுகமாய் வைத்திருக்கும் –

இறைமுகம்!

பனிசடையில் -
பிறைமுகம் காட்டுகின்ற -
பெம்மான் பெற்றெடுத்த -
நிறைமுகம்!

ஈராறு ஆண்டுகள் - தன்னை
இடையறாது ஏத்தி...
எண்ணமாலை தொடுத்த -
அம்பைக்கு - ஒரு
வண்ணமாலை கொடுத்தான் -
வேலேந்தும் பெருமான்; திரு -
வேங்கடத்தான் மருமான்!

'அம்பையே! - நீ
ஆற்றிய தவம் -
போற்றுதலுக் குரியது; உன் -
பொறை மிகமிகப் பெரியது!
இந்த -
வண்ணமாலையை - கையில்
வாங்கிக்கொள்! - என்
வார்த்தையை - காதில்
வாங்கிக் கொள்!
எவன் -
இந்த மாலையை - கழுத்தில்
ஏற்கிறானோ...
அவன் -
போரில் வெல்வான்;
அந்த -
பீஷ்மனைக் கொல்வான்!'

## சிகண்டி

**கொ**டியில் -
காலாயுதமும் - கைப்
பிடியில் -
வேலாயுதமும் தாங்கி...
வெற்பு தோறும் -
வீற்றிருக்கும் - வண்டமிழ்க்
கற்பு... கருணையொடு
வழங்கிய -
வாடாத வண்ணமாலையை -
புளகாங்கிதத்தோடு - அம்பை
பெற்றுக் கொண்டாள்;
இருமான்
விழிகளில் வளர்த்த -
ஒரு மான் -
வள்ளியை வளைத்த -
பெருமான் -
திருவடியைப் போற்றி நின்றாள்!

வரம் தந்தபின் -
வெயிலேறும் வானத்தில் -
மயிலேறிச் சென்றது -



வெண்ணீ றணிந்த வேதம்;
வாங்கிய வரத்தொடு -
வீடு நடந்தது - தவம்
பன்னெடு நாள் பண்ணியதால் -
புண்ணீர் வடித்த பாதம்!

'இனி
இந்த மாலையை -
எந்தக் காளைக்குப் போட்டு -
கொட்டு முழக்கோடு -
கொம்பு சீவி விட்டால்...
அது -
பின்னங்கால்கள் -
புட்டத்தில் படப் பாய்ந்து -
பீஷ்மனின் பெருங்குடலை -
ஓரே குத்தாகக் குத்தி -
உருவி வெளியே போடும்?'
என்று -
அம்பைக்கு - ஓர்

அதிகப்படிக் கவலை;
அலசினாள் -
அரசர்கள் பட்டியலை!

பிறகு,
பத்துப் பதினைந்து போரில்...
விழுப்புண் வாங்கி - இன்னும்
முழுப் புண் ஆறாமல்...
உப்புக்கும் பருப்புக்கும்
உலாப் பாடும் புலவரிடையே -
உலாத்திக் கொண்டிருக்கும்...
அரசர்களின் -
அரண்மனைக் கதவுகளைத்
தட்டினாள்;
அவர்களிடம் - தன்







அவலத்தை விவரித்துக்
கொட்டினாள்!
'காதலன் சால்வன் – எனைக்
கல்யாணக் கனவுகளை நோக்கி –
நடத்திச் சென்றான்; ஆனால்...
பாதகன் பீஷ்மன் –
பாதியில் புகுந்து – எனைக்
கடத்திச் சென்றான்!
ஆதலால் –
மெய்தழுவிய காதலன் – எனைக்
கைகழுவினான்; பீஷ்மனும் –
கல்யாணம் முடிக்க – என்
கைக்கு அகப்படாது
நழுவினான்!
என் –
அவலங்களின்
ஆணிவேரான –
பீஷ்மனைக் கொல்ல வேண்டும்;
என்–
பிரதிக்ஞை வெல்ல வேண்டும்!
இதோ! இது –

எம்பிரான் முருகன் –
எனக்கீந்த மாலை;
இதை அணிந்துகொண்டு
ஏந்துங்கள் வேலை!
பீஷ்மன் –
பிண மாவான்;
தென்புலத்தார் –
தேசம் போவான்!
நான் விரும்புவதை –
நிகழ்த்துவோர்க்கு –
மனைவி யாவேன்; வாழ்க்கைத்
துணைவி யாவேன்!' என்று...
உற்றவர் போல் – தன்பால்
உள்ளன்பு வைத்திருக்கும்
கொற்றவர்பால் – தான்
கொண்டு வந்த...
வண்ண மாலையை ஏற்க –
வேண்டினாள் அம்பை; யாரும்
வாங்க முன்வரவில்லை –
விலை கொடுத்து வம்பை!

ஆயிரம் பொன்னை –
அள்ளிக் கொட்டினும் –
முதுகைக்
கொள்ளிக் கட்டையால் –
ஆரேனும் சொறிவரோ..?

அசுரப் பசி –
ஆயினும் – ஒரு
தாலத்தை வைத்து – அதில்
ஆலத்தை வைத்தால் –
ஆரேனும் உண்பரோ..?
பீஷ்மனின் –
பேராற்றல்...
புழு; பூச்சி;
புல்; பூண்டு –
அனைத்திற்கும் தெரியும்;
அப்படியிருக்க –
அவனை எதிர்க்க –
ஆர்மனம் துணியும்..?
அச்சத்தால் –
அரசர்களின் முகங்களில் –
ஈயாடவில்லை; அம்பையும் –
அதற்குமேல் அவர்களோடு –
வாயாடவில்லை!

பாஞ்சால நாட்டிற்குப்
புறப்பட்டுச் சென்றாள்;
மைவிழியில் – ஒருவித
மௌனப் புயல் –
மையம் கொண்டிருக்க –
மன்னவன் முன் நின்றாள்!

'பாஞ்சால மன்னனே!
பீஷ்மனால் – என் வாழ்வு
போர்க்கள மானது; விழி –
நீர்க்குள மானது!

எனக்கு –
திக்கில்லை; எனைக் காக்க
எவர்க்கும் –
வக்கில்லை!
நான் –
முறையிட்ட –
மன்னர்க ளெல்லாம்...
மகுடம் சுமந்த –
மண் புழுக்கள்;
மயிலாசனத் தமர்ந்த –
மரப்பாச்சிகள்!

பீஷ்மன் என்னும்
பேரைக் கேட்டாலே – அந்தப்
பெட்டைகளின்...
மேனி அதிர்கிறது;
மீசை உதிர்கிறது;
வாள் – ஒரு
வைக்கோ லாகிறது; செங் –
கோல் – வெறும்
கைக்கோ லாகிறது!

பாஞ்சால நாட்டுப்
புரவலனே! – கட்கம்
துருப்பிடிக்காத
துருபதனே!
காடுமலை கடந்து –
கால்நடை போல்...
கால்நடையாய் – உனைக் காண
வந்திருக்கிறேன்; என்னை உன் –
கையடையாய்த்
தந்திருக்கிறேன்!
ஆறுமுகக் கடவுள்
அளித்த – இந்த
அழகு மாலையை அணிந்து...
பீஷ்மனோடு –
போரிடு! இந்த –
பூமியை விட்டே – அவனைப்
போக்கிடு!'

என
அம்பை –
ஆங்காரமாய் வெடித்ததும்...
துருபதன் – அவளுக்காக
துக்கித்தான்;
அதன்பின் – அவளோடு
தர்க்கித்தான்!

'அரசிளங்குமரியே! – உன்
ஆத்திரம் – எனக்குப்
புரிகிறது; அதன் அளவும் –
தெரிகிறது!
ஆயினும் –
ஆற்றல் மிகுந்த பீஷ்மனை...
என் படை வெல்லும்
என்பது மாயம்; அவனை –
எப்படையும் வெல்லாது
என்பதுதான் நியாயம்!

ஆயிரம் கற்களை –
அள்ளி எறிந்தாலும் –
ஆகாயம் –
ஆகாது காயம்;
மாரியும் வெயிலும் –
மாறி மாறி அடித்தாலும் –
பங்கயம் –
போகாது சாயம்!
அம்பையே! – உனக்கு
அபயம் அளிப்பது – எனக்கு
அபாயம்! ஆதலால்...
வெளியே தேடிக்கொள் – வேறு
உபாயம்!'

துருபதனும் –
துணைவரத் துணியாததால்...
முருகவேள் தந்த –
மாலையை – பாஞ்சால
மன்னனின் மாளிகை வாயிலில் –
மாட்டிவிட்டு மறைந்தாள்;
வேந்தன் – மரணபயத்தில்

உறைந்தான்!

அந்த -
மாலையைக் கண்டாலே - சாவு
ஓலையைக் கண்டதுபோல் -
மன்னவன் - உமிழ்நீரை
விழுங்கினான்; அதை
ஆரும் அண்டாதிருக்க -
ஆணைகள் வழங்கினான்!

அம்பை -
ஆரண்ய மெல்லாம் -
சோறும் நீரும் இன்றி -
சுற்றினாள்; அதன்பின்...
அரச குலத்தையே -
அறவே வெறுக்கும் -
பரசுராமனைப் பார்த்து -
அவன்
பாதங்களைப் பற்றினாள்!

மழுவேந்தும்
முனிவனிடம் - தன்
மனமேந்தும்
வருத்தங்களை - அம்பை
விளக்கினாள்; அவன்
உள்ளத்தை இளக்கினாள்!

பரசுராமன் -
பீஷ்மனின் ஆசான்;
ஆசான் சொல்லை - சீடன்
ஆட்சேபித்துப் பேசான்!
குருவிடம் வைத்த காதலால் -
குரு விடம் வைத்தாலும் -
இவன்
குடிப்பான்; இவனுயிரை
'ஈந்திடுக!' என்று - குரு
இரப்பான் என்றாலும் - இவன்
இறப்பான்!
ஆதலால்தான்...
ஆசானை அழைத்துக்கொண்டு -



பரசுராமன் -
பீஷ்மனிடம் சென்றான்;
அவன் -
'பெருந்தகையே! வருக!'
என்றான்!
மாணாக்கனை -
மகா குரு -
ஆசீர்வதித்தான்; பிறகு ஓர்

ஆணை விதித்தான்!

'பீஷ்மா! – நான்
பார்த்திருக்கிறேன் –
பலமுறை; என்
பேச்சுத்தான் – உனக்குப்
பழ மறை! என் சொல்லைக்
கடந்ததில்லை நீ –
இதுவரை; நீதான் –
குரு பக்தி என்பதற்குப்
பதவுரை!
இதோ!
இந்த அம்பையை –
ஏற்று – மணமாலை
சூட்டு;
என் சொல்லுக்கு
அடங்கியவன் என்று –
காட்டு!'

குருவின்
கட்டளையைக் கேட்டு –
சீடன் பதறினான்; சர்வ
ஜாக்கிரதையாய் –
சொற்களை –
உதடுகளிலிருந்து உதறினான்!

'பெருந்தகையே! நான்
பிணமாலை ஏற்கும்வரை –
மணமாலை ஏற்பதில்லையென –
வாக்களித்தவன்;
பாலுணர்வை –
பாலியத்திலேயே –
தீக்களித்தவன்!
இதைத் தவிர – தாங்கள்
எதைக் கேட்பினும் –
ஈவேன்; எமனுலகு –
போகச் சொல்லுங்கள்;
போவேன்!'

பீஷ்மனின் –
பிடிவாதத்தைப் பார்த்ததும் –
பரசுராமன் விழிகளில் –
படர்ந்தது கோபம்; கணையுடன் –
பற்றினான் சாபம்!
வேறுவழியின்றி – பீஷ்மனும்
வில்லை எடுத்தான்; தனை –
'நூறும் புகுக!' – என
நாளும் வாழ்த்தும் குருவை –
நூறும் வகையில் –
நாராசங்களைத் தொடுத்தான்!
தொடர்ந்தது போர்;
அமைதியைத்
தொலைத்தது ஊர்!
பரசுராமன் –
தோற்றான்; தோற்றதை'
பெருந்தன்மையோடு –
ஏற்றான்!

அம்பை – மீண்டும்
அரணியம் புகுந்தாள்;
ஆலம் அமர்ந்தவனை –
ஆலம் சுமந்தவனை –
அகத்தினில் சுமந்து –
அருந்தவம் புரிந்தாள்!

முக்கண்ணன் வந்தான்; ஒரு –
முக்கியச் செய்தி தந்தான்!

'குணவதியே! – உன்
குறிக்கோள் –
இப்பிறப்பில் –
ஈடேறாது;
இன்னொரு பிறவி –
எடுப்பா யாகில் – உன்னால்
இறப்பான் பீஷ்மன்;
என்சொல் மாறாது!'

அம்பை – உடனே
அக்கினியை மூட்டி –
அதில் குதித்து இறந்தாள்;

துருபதன் மகளாக – மண்மிசை
திரும்பவும் பிறந்தாள்!
சீர்பெற்றாள்;
'சிகண்டி' என்று –
பேர் பெற்றாள்!
வளர்ந்த பின் –
ஒரு நாள்...
மனை –
வாசலில் – மாருத
ஊசலில் ஆடிய –
வாச மாலையை –
சிகண்டி கண்டாள்; எடுத்துச்
சூடிக் கொண்டாள்!

'இது –
பீஷ்மனின் பகைவர –
ஏதுவாகும்!' – என...
காவலன் –
கவலைப் பட்டான்; மகளைக்
காட்டில் விட்டான்!
காட்டில் – ஒரு
கந்தருவனைச் சந்திக்க...
அவனது சித்தால் – சிகண்டி
ஆண் ஆனாள்; மீண்டும்
அரண்மனைக்குப் போனாள்!
மகள் –
மகனாக மாறியதில் – மன்னன்
பரவசப் பட்டான் – பீஷ்மன்
பயத்தை விட்டான்!

'சிகண்டி வசம் – இனி
சந்தனு மகன் உயிர்!' – என
ஏடெடுத்து – எமன்
எழுதி வைத்தான் உயில்!

---

# வியாசன் பிறப்பு

**கா**லம் – தன்
கைவசத்தில் – ஒரு
கைகண்ட மருந்தை –
வைத்திருக் கிறது!

அதை –
அன்றாடம் தடவி...
ஆறாத ரணங்களையெல்லாம் –
அது ஆற்றிவிடுகிறது; சிறு –
தழும்பு கூட – கண்ணுக்குத்
தட்டுப் படாமல் –
அடிபட்ட இடத்தை –
அது மாற்றி விடுகிறது!

இந்தக்
கால வைத்தியம் –
இல்லையென்றால்...
ஆழ்மனத்தின்
அநேக காயங்களில் –
சீழ்பிடித்து –
மானுடம் என்றோ
மரித்திருக்கும்;
மனித ஜாதியே –
மரணித்துப் போய் –
உலக உருண்டை –
வெறித் திருக்கும்!

அம்பிகை;
அம்பாலிகை;
இருவரது இதயங்களிலும் –
இப்படித்தான்...
அம்பை பற்றிய –
அவல நினைவுகள் –
ஆறாப் புண்களாய் –
அடர்ந்து கிடந்தன;
பிறகு – அந்தப்

புண்களின் மேல் -
காலம் தடவிய -
களிம்பால்...
பொருக்குகள் தட்டி - அவை
பொல பொலென உதிர்ந்தன!

அம்பிகையும் -
அம்பாலிகையும் -
அத்தினபுரத்து
அரசிக ளாயினர்;
விவாகம் செய்துகொண்ட -
விசித்திர வீரியனுக்கு -
அந்தப்புரத்து -
சரசிக ளாயினர்!

'வான் நிலவு ஒன்று;
ஊன் நிலவு ரெண்டு!' - என
மூன்று நிலவுகளோடு - மன்னன்
தேன் நிலவு கண்டான்;
உத்தம பத்தினிகளின்
உதடுகளையே - இரவு நேர
உணவாக உண்டான்!

அம்பிகையும் -
அம்பாலிகையும் -
அவர்தம்கையும் -
அரசனின் கையும் -
ஆரத் தழுவி நிற்க...
ஆறுகை தழுவியும் - அதில்
ஆறுகை இன்றி - ஆசை
நூறுகை கொண்டு - அவர்கள்
நெஞ்சைத் தாக்க...

உணர்வுகள் தூண்டின -
வாலிப மிடுக்கை;
துயைசெய வேண்டின -
தலையணை; படுக்கை!
நிதம் நிதம் - இதுபோல்
நிகழ்ந்தது கேளிக்கை;
நீடித்தது வேடிக்கை;

விடியலில் தணிந்தது -
விரகத்தின் கோரிக்கை!

இங்ஙனம் இளையோன் -
இன்புற் றிருப்பதில்...
பீஷ்மன் -
பெருமகிழ்வு கொண்டான்;
தம்பியால் தந்தையின் -
சந்ததி வளரும் - என
நம்பிக்கொண்டு நின்றான்!

ராஜமாதா -
ராணி சத்தியவதி...
'மருமகள்கள் - தனது
மடியில் பிறவாத -
இருமகள்கள்!' என -
இதய பூர்வமாய் -
ஏற்றுக் கொண்டாள்;
நாட்டுப் பண்ணுக்கு -
நல்கும் மரியாதையை - தன்
நாட்டுப் பெண்ணுக்கு
நல்க வேண்டுமென - அவள்
நாட்டு மக்களைக்
கேட்டுக் கொண்டாள்!

'இருவரில் ஒருத்தி - செய்வாள்
இந்துவமிச விருத்தி!' - என்று
சத்தியவதியின் -
தாயுள்ளம் நம்பியது; அவள் -
நெஞ்சை விட்டு - அந்த
நம்பிக்கையை -
காலம் - ஒரு
கடப்பாரை கொண்டு நெம்பியது!

ஆண்டுகள் ஏழு -
ஆனபின்னும்...
மருமகள் எவளும் -
கருக்கொள்ளவில்லை; சந்திர
வமிசத்தின் வாரிசு -
உருக்கொள்ள வில்லை!

சத்தியவதியும் பீஷ்மனும் -
சின்னதாய்ச் சுருங்கினர்;
அதனிலும் பெரிய -
அவலம் நேர்ந்ததும் -
சுக்கு நூறாய் நொறுங்கினர்!

பெண்டாட்டிகள் மேல் -
பாச நோய் கொண்டிருந்த -



விசித்திர வீரியனை - ஒருநாள
காசநோய் கொண்டு போனது!

இளைய மகனையும் -
இழந்துவிட்ட சத்தியவதி -
இடிந்து போனாள்;
முற்றுப்புள்ளி வைத்த -
வாக்கியம் போல் -
முடிந்து போனாள்!

அம்பிகையும் -
அம்பாலிகையும்...

பிள்ளைகளை ஏந்தும் -
பேறில்லாத இடைகளில் -
வெள்ளைகளை ஏந்தினர்;
நீலாம்பரி பாட -
நேர்ந்திடாத வாய்களால் -
நீள ஒப்பாரி பாடி -
நெருப்பாற்றில் நீந்தினர்!
பீஷ்மன் -
பேச்சற்று நின்றான்;

மௌனத்தால் - ஓரளவு
மனத்துயரை வென்றான்!
பின் -
அனைவரையும் -
ஆறுதல் வார்த்தை சொல்லித்
தேற்றினான்; பிரேதத்தைத்
தேரில் ஏற்றினான்!

தந்தைக்காக - தானொரு
தந்தையாவ தில்லையென்று -
சூளுரைத்தவன் - பிள்ளையிலாத்
தம்பிக்காக - தானொரு
தலைச்சனாய் மாறி - இறுதிச்
சடங்குகள் புரிந்தான்; அவன்
இட்ட நெருப்பில் -
இளையோன் எரிந்தான்!

அவரவர் காயங்களை -
ஆற்றியது காலம்;
அத்தின புரத்தில் -
அடங்கியது ஓலம்!

நிலா வமிசம் -
நிரந்தர -
அமாவாசையாய் -
ஆகிவிடக் கூடாது என்று...
சத்தியவதி - ஓர்

உத்தியை வகுத்தாள்; தன்
புத்தியில் பட்டதை -
பீஷ்மனிடம் உரைத்தாள்!

'பீஷ்மனே! - நான்
பெறாமல் பெற்ற மகனே!
விழுதுவிடும் என்று -
வளர்த்த மரம் - இப்படி
விழுந்துவிடும் என்று - எனது
கொடிய கனவுகளிலும் - நான்
கண்டதில்லை; அத்தகு எண்ணம்
நெடிய நனவுகளிலும் - வந்து
நின்ற தில்லை! - நான்
ஈன்றெடுத்த
இரண்டு பிள்ளையானது -
இப்போது...
இரண்டு 'இல்லை'யானது!
ஒன்று -
மணமாகு முன்பே
பிணமானது; மற்றொன்று
மணமாகி - காய்க்காத
மரமாகி - கனலுக்கு
உண வானது!
'இத்துடன் -
இற்றுப்போய்...
விழும்குலம்!' எனும் -
வியாகுலம் - எனை
வருத்துகிறது; உறக்கத்தை -
விழிகளி லிருந்து -
விரட்டுகிறது!

நம்குலம் -
நசித்துப் போவதா?
அரசு கட்டில் -
அநாதை ஆவதா?
மகனே!
நீரால் தழைக்கும் -
நிலம்; பிள்ளைப்
பேறால் தழைக்கும் -
குலம்!
நம் -
வமிசம் வளர - நீ
உதவு;
வைதவியம் எய்திய - இரு
வஞ்சிய ரோடும் - நீ
வைத்திடு தாம்பத்திய -
உறவு! - உன்
விரதத்தை -
விலக்கிடு; ஒரு -
வாரிசை -
வழங்கிடு!
சத்திரியர் குலத்தில்
சந்ததி இல்லையாயின்...
சாத்திரம் இதற்கு -
சம்மதம் தெரிவிக்கிறது;
'ஆபத்தில் - சற்று
அறம் பிறழுதல் -
பாபத்தில் சேராது!' - என
பழநூல் அறிவிக்கிறது!'

சிற்றன்னை -
சத்தியவதி சொல்கேட்டு -
சந்தனு மகன் -
சற்று திடுக்குற்றான்; பின்
சாந்தமாக பதிலிறுத்தான் -
சிந்தையில் -
சிறுதுளியும் -
சிற்றின்ப அழுக்கற்றான்!

'தாயே!
தாங்கள் சொல்வது - அரச
தருமங்களில் ஒன்றுதான்;
நாட்டரசர் நிகண்டில் - இந்த
நியதி உண்டுதான்!
எனினும் - நான்
ஏற்றிருக்கும் -
பிரம சரியம் - எனக்குப்
பிராணனைவிட மேலானது;

கொதிக்கக் காய்ச்சினாலும் –
கள்ளாகுமா பாலானது?
உடையை அவிழ்ப்பது போல் –
உள் நாக்கில் கட்டிவைத்த –
உரையை அவிழ்த்தெறிதல் –
உலுத்தர்கள் புன்மனம்;
கால்கழிக் கட்டிலில் –
கண்மூடும் வரை – காமத்துப்
பால்வழிக் கட்டிலில் –
படுக்காது என் மனம்!'

இங்ஙனம் – பீஷ்மன்
எடுத்துரைத்தும்...
அவன் –
பிடிவாதத்தைத் தளர்த்தப்
பிரயத்தனம் செய்தாள் –
சத்தியவதி; ஆயினும் –
சாக்கடையாய் மாற –
சம்மதிக்கவில்லை – அந்த
சத்தியநதி!

பிறகு – ஒரு
மாற்றுவழி – அவள்
மனத்தில் தோற்றியது; அது –
நம்பிக்கைச் சுடரை – அவள்
நெஞ்சத்தில் ஏற்றியது!

பீஷ்மனை –
தனியே அழைத்துப் போனாள்;
ஒரு –
தகவலைச் சொல்ல லானாள்!

'என் –
இனிய மகனே!
இப்போது நான்
சொல்லப்போவது –
இமாலய ரகசியம்! இதை –
மற்றவர் அறியாது – உன்
மனத்துள் புதைத்துவைத்தல் –
மிக மிக அவசியம்!

உன் –
பிதாவை மணக்குமுன்பே –
நானொரு
பிள்ளைக்குத் தாய்; அதுபற்றிப்
பேசாதிருந்து – இந்நாள்தான்
பேசுமென் வாய்!
கேள்! மகனே! – என்
கதையும் புரியும்; இந்த –
விருட்சத்தின் –
விதையும் தெரியும்!
நான்...
மானிடம் மடிசுமந்த –
மகவில்லை; ஒரு
மீனிடம் விளைந்த பிள்ளை!

வெகுநாள் முன்னம்...
'வசு' எனும் பெயரில் –
இருந்தான் ஒரு மன்னன்;
இணையில்லா விற்பன்னன்!

சுக்கிலபட்சத்து –
சந்திரனாய் வளர்ந்த – அவன்
சுக்கிலத்தை...
ஒரு –
சேல் உண்டது; அது –
சூல் கொண்டது!
வலையெறியும் –
மீனவன் கையில் – அந்த
மீன்வர...
மீன் வழி –
நான் வர...
வலைஞர்குலத்து –
வளர்ப்பு மகளானேன்;
பூப்பெய்தி –
வனப்பு மலரானேன்!

யமுனையைக் கடக்க –
யார்வந்து வேண்டினாலும் –
நான்
ஓடம் ஓட்டுவேன்; சுழித்து –

ஓடும் நீரில் ஓடக் கோலால் -
ஓவியம் தீட்டுவேன்!
ஒருநாள் - என்
ஓடத்தில் - ஒரு
முனிவன் ஏறினான்; என்
முன்கதையைக் கூறினான்!
என் -
மேனி சுமந்த -
மீன்வாடையை - அந்த
ஞானி மாற்றினான்;
தேவரும் நுகர்ந்தறியா - ஒரு
திவ்விய மணத்தை - என்
தேகத்தில் ஏற்றினான்!
'பராசரர்' எனும் -
பெயர் கொண்ட - அந்த
மகரிஷி - என்பால்
மோகம் வைத்தான்; என் -
தேகத்தோடு - தன்
தேகம் வைத்தான்!

பின் -
வையம் புகழும் - ஒரு
பையனை - என்
கருவில் வைத்தான்;
கருவில் வைத்தபிள்ளை -
கைக்கு வந்ததும் - என்னைக்
கன்னியாகவே - பழைய
உருவில் வைத்தான்!
நான் -
மடிசுமந்த - திரு
மகனின் பெயர்...
வியாசன்! - ஞான
விலாசன்!
என் மகன் -
என்னுடன் தங்காமல்...
தனது -
தந்தையுடன் சென்றான்;
செல்லு முன் - எனக்கொரு
சத்தியம் தந்தான்!
'அன்னையே! உனக்கு -
அவலம் ஏதேனும் நேருமாயின் -
என்னை நினை! உடனே.
எதிர்வந்து நின்று - உன்
இன்னல் தீர்த்து -
ஏத்துவேன் உனை!'
அந்த
வியாசனைக் கொண்டு -
நாமொரு
வாரிசைப் பெறலாம் என்பது -
என் கருத்து! - பீஷ்மனே!
என்ன உன் கருத்து?'

இந்த -
ஏற்பாட்டை - பீஷ்மன்
ஏற்றுக்கொண்டான்; சிற்றன்னை
அடிமலர் வணங்கி - தனது
அறைக்குச் சென்றான்!

---

# வம்சவிருட்சம்

**வி**ழி! - நோன்பின்
உக்கிர வெக்கையைக்
கக்கிடும் அக்கினிக்
குழி!

உதடு!
வாய்க்குள் சுரக்கும் - உபநிடத
வாய்க்காலைத் தேக்கிவைக்கும் -
மதகு!

சடை! - வெண்
சாமரங்கள் தொங்குகின்ற -



கடை!

தாடி! – கடுந்
தவசியெனக் காட்டுகின்ற –
ஆடி!

ஆயினும்...
அவனது –
தோற்றத்தையும் –
தோற்றத்தில் எழும் – துர்
நாற்றத்தையும் –
நினைத்துப் பார்த்தால்...

வியாசன் – சற்று
விகார மானவன்; ஆனால் –
அறம் எனும் மொழிக்கு –
அகார மானவன்!

ஊனை –
உண்ணாதவன்;



ஊனை –
உண்ணாதவன்!

மெய் –
மெலிந்தவன்;
மெய்யுணர்வு –
மலிந்தவன்!

அவன் –
முஞ்சி கட்டிய –
முப்புரிநூல்...
நெஞ்சில் புரள –
நடைபயிலும்
நன்னெறி நூல்!
நீறு –
அணிந்துலவும் – நிர்மல
ஆறு!



இத்தகு –
வித்தகனை – வேத
வித்தென விளங்கும் –
உத்தமனை – உள்ளத்தின்
வியாகுலம் தவிர்க்கவல்ல –
வியாசனை...

சத்தியவதி –
சிந்தித்தாள்; சிந்தையில் வைத்து
வந்தித்தாள்!
ஞான விழுது – அவள்
நினைத்த மாத்திரத்தில் –
நேர்வந்தான்; அன்னையின் –
நீரஜப் பாதங்களில் –

நெடுஞ்சாண்கிடையாய் -
நமஸ்கரித் தெழுந்தான்!

விரைந்துவந்த -
வேத ஓசையை வரவேற்று -
வேதியரைக் கொண்டு -
பாத பூசையைப் புரிந்தாள் -
சத்தியவதி; பிறகு -
புகன்றாள் மெல்ல -
சந்ததி சங்கதி!

'வியாசனே! - என்னில்
விளைந்த ஞானப்பிரகாசனே! -
எனை
விட்டுச் சென்ற - இளையமகன்
விசித்திர வீரியன் - உனக்குத்
தம்பிமுறை; அவனால்
தழைக்கவில்லை - நமது
தலைமுறை!

தன் -
பிரதிக்ஞையை முன்னிட்டு -
பீஷ்மன் என் சொல்லை -
ஏற்கவில்லை; உனைவிட்டால் -
என் எண்ணம் ஈடேற -
பிறிதொரு
மார்க்க மில்லை!
அம்பிகை...
அம்பாலிகை...
இருவரும் - உன்
இளையோன் தாரங்கள்;
அவர்கள்
இடைகள் ஏந்தியதில்லை -
ஈரைந்து மாத பாரங்கள்!
நீ - அந்த
நேரிழையார் இருவரையும் -
நேரிடையாய்க் கலந்து...
சந்திர வமிசத்திற்கு - ஒரு
சந்ததியை உதவுக; உனை -
ஈன்றவள் வேண்டுகோள் -
ஈதென உணருக!'

இங்ஙனம் - தன்னை
ஈன்று புறந்தந்தவள் -
இயம்பியதும்...

'தாயே!
தங்கள் வார்த்தையை -
ஏற்கிறேன்; அதனை ஓர்
தவம் போலவே நான் -
நோற்கிறேன்!
சந்தானம் வேண்டுவோர்க்கு -
சான்றோர்கள் - இதுபோலே
சரீரதானம் செய்யலாமென -
சத்திரிய சாத்திரங்கள் -
சமாதானம் சொல்லுகின்றன;
'ஆபத்சகாயம்!' என்று -- இதனை
அவைகள் சுட்டுகின்றன!'
என்று -
வியாசன் செப்பினான்; வமிச
விருத்திக்கு ஒப்பினான்!

பின் -
சந்தியா காலத்தில் -
சத்தியவதி...

கொழுநனை இழந்த -
கொழுந்துகளிடம் -
கொழுந்தனை ஏற்கக்
கோரினாள்; அவர்களை -
சயன அறைகளில் -
சேர்த்து - கொழுந்தனொடு
குலந்தழைக்கக் குலவுமாறு -
கூறினாள்!

அகோரமான - வியாசனின்
ஆகிருதியைக் கண்டதும் -
அம்பிகை - கண்களை
அச்சத்தால் மூடினாள்;
அவன் முகம் காணாமலே -

அவனொடு - அழகிய
அமளியில் கூடினாள்!
பள்ளி நீங்கிய - ஞானப்
பள்ளியிடம்...

'அன்பு மகனே!
அம்பிகை வயிற்றில் -
அருங்குணத்தவனாய் - ஓர்
ஆண்மகன் அவதரிப்பானா?
அரசு முடியை அவன்
தரிப்பானா?'
என்று -
வினவினாள் சத்தியவதி;
விளக்கினான் சதுர்வேதி!

'அம்மா!
அம்பிகை மகன் - பத்தாயிரம்
தும்பிகள் பலம் கொண்டு -
பிறப்பான்; ஒரு நூறு -
பிள்ளைகளைப் பெற்றெடுத்துச்
சிறப்பான்; ஆயினும்...
பெற்றவள்
பிழையால் - பார்வையைத்
துறப்பான்!'

வியாசன் -
விளம்பியது கேட்டு...

'அந்தகன் முடிபுனைந்து -
அரசோச்ச முடியாதே!'
என்று -
எண்ணிக் குமைந்தாள் -
சத்தியவதி; விழிவழி -
சிறுகச்சிறுகச் சிந்தினாள் -
சுடுநீர் நதி!

சில நாள்கள் -
சென்ற பின்...
வியாசனை - மீட்டும்
வரவழைத்து -

அம்பாலிகையை -
அணுகுமாறு வேண்டினாள்;
'அருள்செய்க!' என - அவன்
அன்பு மனத்தைத் தூண்டினாள்!

வியாசனின் -
விகாரத் தோற்றம் கண்டு...
வாயடைத்துப் போய் -
அம்பாலிகை வெடவெடத்து -
ஆதி அந்தம்
வெளிறினாள்; அபலைப்பெண்
போல் -
வெருவினாள்; ஆயினும்...
வேறு வழியின்றி - வியாசனை
மருவினாள்!
புலர்ந்தது பொழுது; வெளியே -
போந்தது மெய்ஞ்ஞான விழுது!

ஐந்தினை அவித்து -
அருந்தவம் ஆற்றும் -
மைந்தனை அழைத்து -
மாதா சத்தியவதி...

'அருமை மகனே! அம்பாலிகை -
அன்னை ஆவாளா? -
அவளாகிலும்
ஊனமற்ற மகனை - செங்கோல்
ஓச்சிட ஈவாளா?'
என்று -
வினவினாள்; வியாசன் -
விநயத்தோடு விளம்பினான்!

'அன்னையே!
அம்பாலிகைக்கு - ஓர்
ஆண்மகன் பிறந்து...
எல்லோர்க்கும் இனியனாய் -
இசையொடு இலங்குவான்;
மைவரை போல் - மன்னும்
ஐவரைப் பெற்று - அவன்
மாமறை போல் துலங்குவான்;

ஆனால்...
அடியேன் -
சுகிக்கையில் - அம்பாலிகை
சுண்ணமாய் வெளுத்ததால் -
அவள்
சூல்கொண்ட பிள்ளையும் -
வெள்ளைத்
தோல் கொண்டு விளங்குவான்!'



திரித்த
சடையைப் பெற்றான் -
தன்பணி முடிந்ததாய் - தாயிடம்
விடையைப் பெற்றான்!

ஒவ்வொரு குழந்தையும் -
ஒவ்வொரு குறையுடன் -
சனித்தது கண்டு - சத்தியவதி
சஞ்சலப் பட்டாள்; கண்
துஞ்சலுங் கெட்டாள்;
பிறகு -
'மீண்டும் - வந்துதவ
வேண்டும்!' என்று...
அஞ்சலைத் தவிர்க்கும் -
அன்பு மகனுக்கு - நினைவு
அஞ்சலை விட்டாள்!
உடனே -
வந்து நின்றான்.
வியாசமுனி; வேழம்
உண்டது போல் -
உள்ளீடற்று விளங்கும் -
விளாங்கனி!

'நன்மகனே!
நீ சொன்னது போல்...
அம்பிகை ஈன்றாள் -
அந்தகப் பிள்ளை;
ஆதலால் எனக்கு -
அமைதியே இல்லை!
அருள் கூர்ந்து -
அவளுக்கு நீ -
ஈந்திடல் வேண்டும் -
இன்னொரு மதலை;
இல்லையென்றால் -
இல்லையென்றாகாது என்
கவலை!'
என்று -
வியாசனிடம் - சத்தியவதி
விண்ணப்பிக்க...

அனுப்பினாள்; அவள் -
வியாசனைக் கண்டு -
வெருவாது மருவி - அவனைத்
திருப்திப் படுத்தித்
திருப்பினாள்!

தான -
சயன அறையைச்
சேர்ந்த பின்பு - அங்கு
நேர்ந்தவற்றை



அதற்கு -
ஒப்புக் கொண்டான் -
ஆண்டகை; ஆனாலொரு -
தப்புச் செய்தாள் -
அம்பிகை!

அவள் - வியாசனின்
அருவருப்பான -
ஆகிருதிக்கு அஞ்சி...
தன் -
அடிமைப் பெண்ணை -
அலங்கரித்து - அவனிடம்

நேர்ந்தபடி - தன்
தாயிடம் - வியாசன்
தெரிவித்தான்; அடுத்தொரு -
அதிசயத் தகவலையும் -
அறிவித்தான்!

'அன்னையே! - என்னை
ஆராதித்த - அந்த
அடிமைப் பெண்ணின் -
அடிவயிற்றில்...
உலக ஒழுக்கங்களெல்லாம் -
ஒன்று திரண்டது போன்ற -
ஒருவன் -
உதிக்கப் போகிறான்; இந்த
பூப்பந்தில் உள்ளவர்க்கு -
புதிய புதிய நீதிகளை - அவன்
விதிக்கப் போகிறான்!
அம்மா! - அவன்
அறக் கடவுளின்
அம்சம்; அவன் -
நிழலில் தழைக்கும் - இந்த
நிலா வம்சம்!
மாதாவே! இனியும்
மகப்பேறு கருதி - எனை
அழைக்க வேண்டாம்; இந்திரிய
நுகர்ச்சியில் என்னை -
நுழைக்க வேண்டாம்!
தருப்பை பற்றிய -
தவசி எனக்கு -
கருப்பை பற்றிய -
கவலை எதற்கு?'
என்று - வியாசன்
ஈன்றவள் ஈரடியை - தன்
சென்னியால் தொட்டான்; பின் -
செலவு பெற்றான்!

வியாசன் -
வெவ்வேறு நிலங்களில் -
விட்டெறிந்த விதைகள் -
வெவ்வேறு தினங்களில் -
வேர்விட்டு -
வெளி வந்தன;
'இந்து குலம் -
இருண்டு போகுமோ?'
என -
ஏங்கிக் கிடந்த -
விழிகளுக் கெல்லாம் -
ஒளி தந்தன!

சத்தியவதியும் -
சந்தனு மகனும் -
சந்ததி வாய்த்ததில் -
சந்தோஷப் பட்டனர்;
சிந்தாகுலம் விட்டனர்!

மூன்று -
மூன்றாம் பிறைகளுக்கும்...

நாள் பார்த்து -
கோள் பார்த்து -
நாமகரணம் -
நடந்தது;
அதைப் பார்க்க -
அத்தினபுரமே -
அரண்மனை நோக்கி நடந்தது!

இருட்டிய திருட்டியொடு -
அம்பிகை -
ஈன்றெடுத்த பிள்ளைக்கு...
'திருதராஷ்டிரன்!' என்று -
திருநாமம் சூட்டினர்;

பூண்டுநிறம் பூண்டு -
அம்பாலிகை வயிற்றில் -
பூத்தெழுந்த பிள்ளையை...
'பாண்டு!' என்று -
பெயரிட் டழைத்தனர்;

அடிமைப்பெண் -

மடியில் -
'சதுரன்!' என -
சகம்மெச்சப் பிறந்த
சேய்க்கு...
'விதுரன்!' என்று -
வைத்தனர் நாமம்!
பிள்ளைகள் மூன்றும் -
பிறந்தபிற் பாடு - 'இன்பம்
கொள்ளைகள்!' என்று -
குதித்தது நாடு!

---

# மகரிஷி மாண்டவ்யர்

அதுவொரு -
பெரிய காடு; அங்கு -
ஓங்கி நிற்கும்
ஒவ்வொரு மரமும் - ஒரு
பெருமாள் மாடு!

காற்றின் கை - கொஞ்சம்
காதருகே வந்தால் போதும்...
ஒரு
காரண -
காரிய மின்றி -
தலையை ஆட்டும் - அந்தத்
தருக்களின் கூட்டம்!

அந்த
முல்லை நிலத்தின்
மார்பின் மேல் -
யாரோ
பிரும்மோபதேசம் செய்து -
போட்டு விட்ட -
யக்ஞோபவீதம் போல்...
நெளிசலும் வளைசலுமாய்
நதியொன்று ஓடும்;
காலையும் மாலையும் -
அலைகள்
சந்திசெய்வது போல் -
காயத்திரியை ஓதும்!

அந்தப்
புனலின் படுகையில் - ஒரு
பர்ணசாலை; அதன்
வலமும் இடமும் -
வாசப் பூக்கள் வளைந்த -
வர்ணசாலை!

பிரதிதினமும் -
புலரியில்...
அந்தப்
பர்ணசாலையை - ஒரு
பிரதட்சிணம் வந்து - அதன்
நுழைவாயிலின் நேரே -
நெடுஞ்சாண் கிடையாக -
நிலத்தில் விழுந்து -
நமஸ்கரித்து விட்டுத்தான்...
தன்
பணிகளைத் தொடங்கும் -
பனிமலைக் காற்று!

அந்த மண்குடிலில்தான் -
மகரிஷி மாண்டவ்யர் -
வெகு காலமாக -
வாசம் செய்கிறார்;
தவ
நெறியெனும் தறியில் -
ஞான ஆடை நெய்கிறார்!

அவர்
ஆசைப்பசி -
அற்றவர்; ஆதலால் -
வேசைப்பசி -

விட்டவர்; நாதன்
பூசைப்பசி -
பெற்றவர்; நான்மறை
ஓசைப்பசி -
உற்றவர்!

உருப்பசி வரினும் - அவருள்
உடற்பசி எழாது; அகம்
அறப்பசி யலாது - பிறிதொரு
புறப்பசி கொளாது!

அவர் -
'ஆன்மப்பசி - என்றும்
மேன்மைப் பசி!' - என
ஆய்ந்தறிந்த -
அருந் தபசி!

அத்தகு தபசிக்கும் - ஓர்
அபவாதம் வந்தது; அவர்
ஆற்றாத பிழைக்கு - காலம்
அபராதம் தந்தது!

ஓர்
அக்கினி நட்சத்திரம் -
ஆரம்பமான நேரம்; அதன் -
வேக்காடு தந்த -
நோக்காடு தாளாது -
பூக்காடு கூட - ஒரு
சாக்காடு ஆகும் -
கடுமையான -
கத்திரி வாரம்; வெப்பக்
கத்தரி - புல் பூண்டைக்
கத்தரிக்கும் வாரம்!

ஆசிரமத்தின் -
வாசலில் உள்ள...
உத்தியானம் நடுவே -
உட்கார்ந்திருந்தார் -
மத்தியானம் - நெடிய
மனத்தியானம் செய்த



வண்ணம்...
மகரிஷி -
மாண்டவ்யர்!

மௌன ஊசியைக் கொண்டு -
மேலுதட்டையும் கீழுதட்டையும்
-
மெல்லத் தைத்திருந்தார்;
இணைபிரிய -

இடந் தராமல்...
மேலிரண்டு இமைகளையும் -
கீழிரண்டு இமைகளையும் -
ஆலிங்கனத்திலேயே -
அமிழ்த்தி வைத்திருந்தார்!

அதன்பின்...
நெஞ்சம் உடுத்தியிருந்த -
நினைவு ஆடைகளை -
அகற்றினார்; அதை -
நிர்வாண மாக்கி - நீண்ட
நிட்டையில் அமர்த்தினார்!

ஆகத்தில் - அற்ப
அசைவு மின்றி - பர



லோகத்தில் – ஆன்மா
லயித்திருக்கையில்...

மகரிஷி
மாண்டவ்யரின்
முன்வினை –
மூவிரண்டு கால்களோடும் –
பொருள்
மூட்டை சுமந்த தோள்களோடும் –

மூச்சு –
இரைக்க இரைக்க – உப்பு
வியர்வையை – உடம்பு
வாளி நீர் போல் – வாரி
இறைக்க இறைக்க –
ஓடிவந்து...

அவரது –
பர்ணசாலைக்குள்
புகுந்து கொண்டது; 'இதுதான் –
பத்திரமான இடம்!' – என்று
புரிந்து கொண்டது!

முன்வினையாய் –
முளைத்து வந்தது –
மூன்று திருடர்கள்; ஆறு
விழிகளிருந்தும் – அறிவு
வெளிச்சமில்லாக் குருடர்கள்!

அரசனின் –
அரண்மனையில் –
அபகரித்த –
அணிகலன்களை –
ஒரு
மூட்டையாய்க் கட்டி –
மாண்டவ்யரின் –
பர்ணசாலைக்குள் –
பத்திரப் படுத்தினர்;
ஓர் –
ஓரமாக...

ஓலைத் தடுக்குகளால் – தம்மை
ஒளித்துப் படுத்தனர்!

ஆபரணத் திருடர்களின்
அடிச்சுவடைத் தொடர்ந்து –
அரண்மனைக் காவலர்கள்
அங்கு வந்தனர்;
தப்பித்துச் சென்ற
தப்புகளைப் பற்றிய –
தடயம் கிடைக்காது
தம்பித்து நின்றனர்!

ஜனனம் தவிர்க்கும்
ஜனார்த்தனன் திருநாமம் –
மனனம் செய்த வண்ணம்
மரத்தடியில்...
மாண்டவர் போல் –
மௌனித் திருந்த –
மாண்டவ்யரைப் பார்த்து –

'இவ்வழி வந்த திருடர்கள் –
எவ்வழி சென்றார்கள்?' – என்று
படைவீரர்களின் தலைவன் –
பரபரப்பாக வினவினான்;
வாய்திறவாத –
வேதியரைக் கண்டு –
நோய் தணியாத –
நோயாளிபோல் முனகினான்!

இதன் –
இடையில்...

படை வீரர்கள் –
பர்ண சாலைக்குள் புகுந்து –
நகைகளையும்...
நகைத் திருடர்களின் –
சிகைகளையும்...
ஒருசேரப் பற்றி –
வெளியே கொணர்ந்தனர்;
இந்தத் திருடர்களுக்கு –

இந்தத் தவசிதான் -
தலைவன் என்று -
தப்பிதமாய் உணர்ந்தனர்!

வேந்தனின் செவிக்கு -
விஷயம் எட்டியது; அவன்
சிந்தைக்குள் ஆயிரம் -
செந்தேள் கொட்டியது!

ரௌத்திரத்தில்
ராஜன் - துர்வாசரின்
பௌத்திரன் ஆனான்;
வெஞ்சினத்தின்
வெக்கையில் - விழிகள்
வியர்த்துப் போனான்!

இறக்கை விரித்த -
இராசாளி போல் -
இருக்கும் மீசையில்...
நீண்ட
நாசியின் -
துவாரங்கள் துப்பிய
தணல் மூச்சால் -
ஏழெட்டு முடிகள்
'திகுதிகு'வென
எரிந்தன; எரிந்து
கரிந்தன!

முனியை நினைத்து
முனிந்தான்; அந்த
முனிவை ஒட்டி - தன்
முடிவை மொழிந்தான்!

'திருட்டுக்குத் தலைமை -
துறவியா?
இருட்டுக்குத் தலைமை -
இரவியா?
பசு மாடா -
புலால் உண்டது?
துளபமா -
துர்நாற்றம் கொண்டது?
காவித்துணி
கட்டிய - ஒரு
சன்னக்கோல் ஏந்தும்
சன்னியாசியின் கை -
கன்னக்கோல் ஏந்துவதா? -
மழைத்
தண்ணீரை மாந்தும்
சாதகப்புள் -
புண்ணீரை மாந்துவதா?
அதற்குள் -
கலி பிறந்து விட்டதா
என்ன? அல்லது -
கலியைச் சூல் கொண்டிருக்கும்
காலத்தாய்க்கு - பிரசவ
வலி பிறந்து விட்டதா
என்ன?
அந்தணன் கெட்டால் -
அறம் கெடும்;

அறம் கெட்டால் -
அகிலம் கெடும்!
ஆதலால்...
வழுவில் வாழ்க்கை -
வாழாத வேதியனை -
கழுவில் ஏற்றுங்கள்; அவனைக்
கழுகுக்கும் காக்கைக்கும் -
கூகைக்கும் குக்கலுக்கும் -
காலை உணவாய் மாற்றுங்கள்!'

அரசன் இட்ட -
ஆணைப்படி...
சீடர்களுக்கு -
ஞானநிழல் நல்கிய -
செழுமரம் - ஒரு
குற்றம் புரியாமலே -
ஏறியது -
கழுமரம்!
அழுதது காடு; அவரடி -

தொழுதது காற்று!
சீலத்தில் சிறந்த -
மகரிஷி மாண்டவ்யர் -
சூலத்தில் ஏற்றியும் -
சாகா திருந்தார்;
பருக நீரும் -
பசிக்குச் சோறும் -
படைக்காத போதும் - உயிர்
போகா திருந்தார்!

அந்தத்
தபோவனத்துத்
தவசிய ரெல்லாம் -
'ப்ரபோ!' என்று -
புலம்பினார்கள்; மாண்டவ்யரின் -
அரவிந்த மலரடியை -
கண்ணீரால்
அலம்பினார்கள்!

மாண்டவ்யர்
மாளா திருப்பதும் -
மகரிஷியை விட்டு -
மற்ற ரிஷிகள் -
மீளா திருப்பதும் - தான்
அபவாதத்திற்கு -
ஆளா யிருப்பதும் -
வேந்தன் மனத்தை -
வாளா லறுத்தது;
'ஒரு -
நிரபராதியை - சூலத்தில்
நிறுத்தி விட்டாய்!' - என்று
மன்னவனை - அவன்
மனச்சான்று - வேகும்
வாணலியில் போட்டு -
வாளைமீனாய் வறுத்தது!

அடுத்த கணமே - அரசன்
அமைச்சர்கள் புடைசூழ -
ஆரண்யம் சென்றான்;
மகரிஷியை - கழு
மரத்திலிருந்து இறக்கி - அவர்
மலரடி தொழுது நின்றான்!

'அய்யனே! - இதுநான்
அறியாமல் செய்த பிழை;
கொஞ்ச நஞ்சமல்ல - அந்தக்
குற்ற உணர்வால் - என்
கண்ணிரண்டும் பெய்தமழை!
கழுவாயில் - தங்களைக்
கிடத்திய பாவத்திற்குக்
கழுவாய் தேடுவேன்; தங்கள்
திருவடித் துகளை -
திருநீறாய் - நெற்றியில்
தினமும் சூடுவேன்!
மகானே! மகரிஷியே!
மன்னிக்க வேண்டும் என்னை;
நான் -
வழிதவறிய பிள்ளை; நீங்கள்
வாழ்விக்கும் அன்னை!'

மன்னவன் பேச்சை - செவி
மடுக்காமலே -
மகரிஷி மாண்டவ்யர்...
தரும தேவதையின் -
திருச்சபைக்குச் சென்றார்;

'தவறென்ன செய்தேன்?
தண்டனை எதற்கு? - என்பால்
தயை கூர்ந்து - தாயே!
தெரிவிக்க வேண்டும் எனக்கு!'
என -
இரப்பது போல் -
இறைஞ்சி நின்றார்!

'முனிவரே!
முன்னம் நீர் -
வண்டுகளையும் பட்சிகளையும் -
வதைத்தீர்; இப்போது -
அனுபவித்த வினையை - நீர்
அப்போதே விதைத்தீர்!'

என்று -
தரும தேவதை
இயம்ப...
'எப்போது?'
என்று -
வினவினார் -
வினைவயப்பட்ட தவசி!
'பிள்ளைப்
பிராயத்தில்!' என்று -
தெரிவித்தாள் -
தருமத்தின் அரசி!
இந்த விளக்கத்தை - மகரிஷி
ஏற்க வில்லை; தனக்கு
விதித்த தண்டனையில் - அவர்
ஒழுங்கைப் பார்க்கவில்லை!

'அறியாப் பருவத்தில் -
ஆற்றிய பிழைக்கு - நீ
அளித்த தண்டனை -
அதிகப் பட்சம்! எனவே -
புரிந்த தவறுக்கு - நீ
பூவுலகில் இறங்கி -
புகுந்திடுக - ஒரு
பெண்ணின் கர்ப்பம்!'

இங்ஙனம்...
தரும தேவதைக்கு -
மகரிஷி மாண்டவ்யர் -
தந்த சாபத்தால்...

அவள் -
அம்பிகையின் -
அடிமைப்பெண் வயிற்றில்...

விதுரனாய் -
விளைந்தாள்; இன்றும்
வையம் புகழும் - அந்த
விதுர நீதியை - அவள்தான்
வரைந்தாள்!

---

# காந்தாரி என்னும் கற்பு நெறி!

திருதராஷ்டிரன்!
பாண்டு!
விதுரன்!

திங்கள் மரபில்
தலையெடுத்த
மூன்று பிறைகள்;
மூன்றுக்கும் குறைகள்!

ஒரு பிள்ளையின்
விழிகள் - வெறும்
குழிகள்;
ஒரு பிள்ளையின்
தோல் நிறம் - பசும்
பால் நிறம்;
ஒரு பிள்ளையின்
தாய்ச்சி - குலத்தில்
தாழ்ச்சி!

முப்பயிரும் -
முளைவிட்டது -
ஒரே வகையான பீஜத்தில்;
விவசாயியால் -
விதைக்கப்பட்டது -
வேறு வேறு பிரதேசத்தில்!
வயலின் வாகுக்கேற்ப
விளைச்ச லிருந்தது;
'மலட்டு நிலமாக இல்லாமல் -
மகசூல் தந்ததே!' - என்று
சத்தியவதிக்கு - ஒரு

சந்தோஷ மிருந்தாலும் -
உள்ளுக்குள் - மன
உளைச்ச லிருந்தது!

'அத்தினபுரத்து
அரியணைமேல் -
அழகுற அமர்ந்து
அரசோச்ச...
அங்கவிலக்கணம்
அனைத்தோடும் - ஓர்
ஆண்டகை -
ஆவிர்ப்பவிக்க வில்லையே!" என்று
அவ்வப்போது
அவள் -
மூக்கைச் சிந்தினாள்; எதிலும்
முழுமனத்தோடு -
ஒட்டாது ஒழுகாது -
விட்டேற்றியாய் -
மூலைக்குமூலை குந்தினாள்!

கண்ணீர் மங்கையாய்க்
காட்சி தந்த சிற்றன்னையை -
தண்ணீர் மங்கையின்
தனயன் தேற்றினான்;

குடும்பத்திற்குத் தான்தான்
காபந்து எனும் வகையில் - ஓர்
இடும்பை வாராது - சிறியதாய்
இடும்பணி ஆற்றினான்!

வியாசன் எனும் - ஆல
விருட்சம் கீழிறக்கிய -
விழுதுகள் மூன்றையும்...
பீஷ்மன் -
பழுதுகள் நேராவண்ணம் -
பாதுகாத்தான்;
குருகுலத்தில் வந்த
கொழுந்துகளை -
குருகுலத்தில் சேர்த்து...
பல்வகைக் கல்வியும் -
பயிற்று வித்தான்!

வாரங்களை -
மாதங்கள் விழுங்கின;
மாதங்களை -
வருஷங்கள் விழுங்கின!
ஈற்றுகள் மூன்றும் -
எருதுக ளாயின;
நாற்றுகள் மூன்றும் -
கருதுக ளாயின!

பட்டம் கட்ட வேண்டிய -
பருவம் வந்தது; சத்தியவதி
உள்ளத்து அபிலாஷைக்கு -
உருவம் வந்தது!

'ஆருக்கு இங்கே -
அரசுப் பட்டம்?
அந்தகனுக்கா?
அடுத்தவனுக்கா?' என
ஊருக்கு வந்தது -
ஒருவகை ஐயம்; ஊர் -
வம்பளக் காமல் -
வேறென்ன செய்யும்?

இனி -
காலம் தாழ்த்துதல்
கூடாது என்று -
காரிய மாற்றினான்
கங்கையின் கன்று!

மூத்தவன் என்னும்
முறைமை கருதி - தலை
முடியின் மேலே - தலைமை
முடியைச் சூட...

திருதராஷ்டிரனை - பீஷ்மன்
தேர்ந்து எடுத்தான்;
கண்ணை இழந்தவன் பால் -
மண்ணைக் கொடுத்தான்!
முடியைச் சூட்டி -

முடிந்த பிற்பாடு...

'ஆண்டு வருவது -
அண்ணன் ஆயினும் - இளவல்
பாண்டு அவனது -
பிரதிநிதி ஆவான்; அவனே
தானைக் கெல்லாம் -
தளகர்த்த னாகி - எதிலும்
தமையன் கருத்தைத்
தழுவிப் போவான்!' என்று.

மன்றத் திருக்கும் -
மறவர்; அறவர் -
முன்னால் முழங்கினான்;
வேந்துக்கு உதவும் -
அமைச்சுப் பொறுப்பை -
விதுரனுக்கு வழங்கினான்!

கொலுவில் அமர்ந்தது
குலவழி அரசு;
விலகிக் கொண்டது - இது
வரையில் வீற்றிருந்த...
கங்கை மைந்தனின் -
காபந்து அரசு!

சந்திர குலத்தின்
சந்ததி - ராஜ்ய
சபையேறியது குறித்து -
சத்தியவதி சந்தோஷித்தாள்;
ஒரு நாளும் தனக்கு -
ஒண்டொடியும் ஒளி முடியும் -
ஒவ்வாது என்று - உறுதியாய்
ஒதுக்கிவைத்து - அவ்வாசைகள்
வவ்வாது தன் வாழ்வை - புகழ்
வாசமொடு வைத்திருக்கும் -
பீஷ்மனின்
சவ்வாது மனத்தை - சத்தியவதி
சொற்செட்டின்றி சிலாகித்தாள்!

விசித்திர வீரியனின் - தேக
வியோகத்திற்குப் பிறகு...
பல்லாண்டு காலம் -
பட்டாபிஷேகமே நடக்காததால்...
அத்தினபுரத்து -
அரண்மனையில்...

ஒரு
கொற்றவனைச் சுமக்காத -
குற்றத்தைச் சுமந்தபடி
பொற்றவிசு புலம்பியது தினம்;
ஓர்
உடையவ னில்லாமல் -
உடைவாள் - உறைக்குள்ளேயே
உடைந்து கிடந்தது மனம்;
மன்னர் -
குலக்கை ஏந்தாத -
குறையை ஏந்திக் கொண்டு - செக்
குலக்கை போல்
கிடந்தது செங்கோல்;

ஒரு
தலைவனின் தலையைச்
சேராத - தன்
தலையெழுத்தை எண்ணி -
தலைபோனாற் போன்றதொரு -
தலையாய துயரத்தில் -
தலை கவிழ்ந்து கிடந்தது.
தலைமுடிமேல்
அமர்ந்து - ஆட்சித்
தலைமை ஏற்கும் திருமுடி;

தான்
நிழல் கொடுக்கவும் -
தனக்கு
நிழல் கொடுக்கவும் -
ஒரு
நாயக னில்லாமல் -
நெஞ்சம் கனத்திருந்தது - மணிக்
குஞ்சம் கனத்திருக்கும் - வெண்
கொற்றக்குடை;

அம்பாரி மேல்
அமர்ந்து -
நாள்கிழமைகளில்
நகர்வலம் வர...
ஒரு
பட்டத்தரசன் இல்லாத
பட்டத்து யானை -
முகபடாம்
மாட்டப் படாமல் -
கொட்டாரத்தில் -
கொட்டாவி விட்டுக்
கொண்டிருந்தது;

கன்னமதம் வழிய -
காற்சங்கிலியோடு நின்றிருந்தது!

மராமத்து இல்லாத
ஒரு பழங்கால -
கிராமத்துக் கோயில்போல்...
ஒட்டடைச் சட்டைகளை -
உடல்களில்
ஒட்டிக்கொண் டிருந்தன - ஓர்
அக்கிராசனர் வாய்க்காத -
அத்தாணி உத்திரங்கள்;
வண்ணம் - உதிர்ந்த
வண்ணம் இருந்தன -
உட்சுவர் சித்திரங்கள்!
இத்துணை ஆண்டுகளுக்குப்
பின் -
இப்போது...

மூவாயிரம் வைதிகர்
முதுமறை ஓத - பாணர்கள்
பாவாயிரம் பாடிப்
பரவி நிற்க - நல்லோர்
நாவாயிரம் வாழ்த்தி
நலம் கூற - பணிப்பெண்கள்
பூவாயிரம் தூவி - நடை
பாவாடை விரிக்க...

திருச்சின்னம்
ஒலி வழங்க -
துந்துபியும்
உடன் முழங்க...
திருதராஷ்டிரன்
திருமுடி சூடி -
திருவோலக்க மண்டபத்தில் -
திருவடி வைத்ததும்...

அரசவையின் - பழைய
அவலங்கள் அனைத்தும் -
விடைபெற்றன;
அரசியல் பணிகள் - புதிய
அழகோடும் அர்த்தத்தோடும்
நடைபெற்றன!

ஆயினும்...
'அந்தகனுக்கா
அரியாசனம்?' என
அங்கலாய்த்தது -
அறியாசனம்!

நாளடைவில் - தனது
நாயகன் திருதராஷ்டிரனின் -
நேரிய ஆட்சியையும் -
நெறிபிறழா மாட்சியையும்
மன்பதை பார்த்தது; அவன் -
மேன்மை மிக்கவன் -
என்பதை ஏற்றது!

பத்தாயிரம் வேழங்களின் -
பலத்தைக் கொண்டவன் -
பகைவர் பயமின்றி - மக்களைப்
பராமரித்தான்; இரு
விழியில்லாமல் - கொலுவில்
வீற்றிருந்த போதும் - ஒரு
பழியில்லாமல் - தருமத்தின்
பதாகை விரித்தான்!

அத்தினபுரத்து -

அமைச்சர் பெருந்தகை –
மாண்புமிகு
விதுரனை...
மாதுரியமும் –
சாதுரியமும் –
சொல்லில் காட்டும் –
சதுரனை...

ஒருநாள் – தனது
உப்பரிகைக்கு –
பீஷ்மன் அழைத்தான்;
பிறகு – தன்
சிந்தையில் உள்ளதை – அவன்
செவிகளில் நுழைத்தான்!

'விதுரனே! – எனக்கு
விருப்பமான மகனே!
புண்ணியங்களின் –
புகலாய் இருக்கும் –
தரும தேவதையின் –
நகலாய் இருப்பவனே!
அகலப் பரவும்
அறவெளிச்சம் –
அகலா திருக்கும்
அகலா யிருப்பவனே!
ஈனர்க்கும் –
இழிஞர்க்கும் –
இகலா யிருப்பவனே!
இருட்டில் கிடக்கும் –
இனியவர்க்குப்
பகலா யிருப்பவனே!
உன்னாலும் – உனது
உடன் பிறப்புகளாலும் –
நம்நாடு –
நெஞ்சுயர்த்தி நிற்கிறது;
பிறநாடு – ஒளியுடன்
பிறங்கும் வழியை –
நம்மிடம் கற்கிறது!
இந்த –
இனிய சூழலில்...
உங்கள் –
மூவருக்கும்
மணம் முடிக்க –
என் எண்ணம்;
என்ன உன் எண்ணம்?'
வானதி மைந்தன் –
வினாவை வீசினான்; விதுரன் –
விநயத்தோடு பேசினான்!

'அய்யனே! எங்களுக்கு –
ஆயும் நீ! அத்தனும் நீ!
ஆயும் எங்கள் அறிவிற்கு
அகப்படாத முத்தனும் நீ! – உன்
சுட்டுவிரல் சுட்டும் திசை –
செல்லும் கால்கள்; என்றும் –
உன்னுரைகள் எங்களுக்கு –
நன்னெறி நூல்கள்!'

விதுரனின் பேச்சால் –
வெகுவாய் மகிழ்ந்த பீஷ்மன்...

முதலில் –
திருதராஷ்டிரன்
திருமணத்தை –
முடிக்க எண்ணினான்; அதற்கு –
முயற்சிகள் பண்ணினான்!

காந்தார நாடு – அவன்
கவனத்திற்கு வந்தது; அங்கு
காந்தாரி என்றொரு –
கஸ்தூரிமான் இருப்பதை –
காற்று – அவனது
காதுகளுக்குத் தந்தது!
காந்தாரியின் தந்தை –
காந்தார நாட்டரசன் – நல்ல
சுபாவன் – எனப்
புகழ் கொண்ட –
சுபாலன்!

சுபாலன் மகளுக்கு – நூறு
சேய்கள் பிறக்குமென்று –
வரம் –
வழங்கியிருந்தான் –
கண்ணுதற் கடவுள் – சுபாலன்!

அந்தணர்கள் மூலம் –
அனைத்தும் அறிந்து...
பீஷ்மன் –
மணம் பேசினான்;
புரவலன் –
மனம் கூசினான்!

'பெண்ணின் புருடன் – ஒரு
பிறவிக் குருடன்!'
என்பதை – மன்னன் மனம்
ஏற்கவில்லை; பிறகு –
குலப்பெருமை கருதி –
குருடனுக்குப் பெண்தர –
குறைமனதோடு ஏற்றான் –
சந்தனு
குமாரன் சொல்லை!

'கண்ணில்லை –
கணவனுக்கு! பின் –
எனக் கெதற்கு –
விழி விளக்கு?' எனக்
கண்களைத் துணியினால் –
கட்டினாள் துணிவினால் –
காந்தாரி! – கால்முளைத்த
கற்புநெறி!

திருதராஷ்டிரனுக்கும் –
திருப்பாவை காந்தாரிக்கும் –
திருமணம் நடந்தது;
அத்தினம் –
அத்தினபுரமே –
அரண்மனைக்குள் கிடந்தது!

சகோதரிக்கு –
சீர்வரிசை கொடுத்தான் –
சகோதரன்; அவன்தான்
சகுனியென்னும் –
சகப் பிரசித்தி பெற்ற –
சூதாட்டக்காரன்!

---

# குந்தி

**அ**வன் –
ஆயர்குலத்து –
அரசு;
அனைத்து யாதவர்க்கும் –
அருள்நிழல் பரப்பும் –
ஆல்;
வன்கணாளர்க்கு –
வாய் கசக்கும் –
வேம்பு;
உழுவலன்பர்க்கு –
உள்நாக் கினிக்கும் –
மா;
வெருவலர்க்கு –
வேங்கை;
விருந்தினர்க்கு –
வாழை!

தேக்கை –
நிகர்த்திருக்கும் – அவன்
யாக்கை; அந்த
யாக்கை –
ஏற்றிருக்கும் – அற
வாழ்க்கை!

'மேலே முள்;
உள்ளே கள்!' – எனப்
புலவோர் பாடுவர் –

உலா; அவனொரு
பலா!
அவன்
மரங்களின் –
நிறங்களில் –
உருவான மனிதன்;
இடைச்சேரி –
இடையறாது –
ஏத்தும் புனிதன்!

அந்த
அரசனின் பெயர் –
சூரன்! – மயிற்
பீலியைச் சூடும் –
பரந்தாமன் கண்ணன் – அவன்
பேரன்!
கோமகன் சூரனுக்கு – ஒரு
குலக்கொடி உண்டு;
பூமகள் நிகர்த்த – அந்தப்
பூவையின் திருநாமம் –
பிருதை! – அவளது
கொப்பூழ்க் கொடியைக்
கத்தரிக்கும் போதே –
'வனப்பு மிக்கவள்!' என –



வையம் வழங்கிவிட்டது -
விருதை!

அவள்
அமாவாசை இல்லாத -
வெண்கதிர்;
அத்தமனம் இல்லாத -
செங்கதிர்; ஓர்
ஆடவன் வந்து -
அறுவடை செய்யாது -
மண்கதிர் போல் - பருவம்
முதிர்ந்து நிற்கும் - ஒரு
பெண் கதிர்!

அத்தகு -
அரசிளங்குமரியின்...

நடைக்கு உவமை -
நதி;
சடைக்கு உவமை -
சாரை;
துடைக்கு உவமை -
தூண்;
இடைக்கு உவமை -



இறை!

ஏனெனில்...
இதைப் பற்றித்தான் –
'இலது' 'உளது' –
என –
இரைகிறது உலகு!
குந்தி போஜன் – என்றொரு
கொற்றவன்! – மடியில்
குந்தி போஜனம் உண்ண – ஒரு
குழந்தை அற்றவன்!

அவன்...
அரசன் சூரனுக்கு –
அத்தை மகனென்று –
ஆனவன்; நட்பில் –
அத்தியந்தமாகிப்
போனவன்!

ஆதலால்...
அருஞ் சொத்தாய் –
ஆணி முத்தாய் –
அன்பின் வித்தாய் –
அழகுப்பூங் கொத்தாய்...
தன் –
மடியில் தவழ்ந்த –
மகள் பிருதையை –
குந்தி போஜனுக்கு – சூரன்
கொடுத்தான் தத்தாய்!
அப்படிக்
கொடுப்பதாய் – முன்னம்
கொடுத்திருந்தான் வாக்கு;
கொடுத்த வாக்கை –
காத்தது சூரனின் நாக்கு!
'குந்தி தேவி!' என்று –
குந்தி போஜன் – தத்துப்
புத்திரிக்கு – ஒரு
புதுப்பெயர் கொடுத்தான்;
'பிருதை' எனும் –
பழைய பெயரை –
பிருதையின் நாக்கிலிருந்தே
பெயர்த்து எடுத்தான்!

குந்தி – கோதகன்ற
குணத்திலும் மனத்திலும் –
முந்தி நின்றாள்; யாண்டும்
உந்திபறந்து – சின்ன
உதடுகளில் – சிறு நகை
சிந்தி நின்றாள்!
அந்தி வந்தாலே...
அந்தியோடு –
குந்தி வந்தாலே...

நந்தவனத்து –
நந்தியா வட்டங்கள் –
அந்த மிழக்கும்;
சிந்து இயற்றும் –
சின்னக் குயில்கள் –
சந்த மிழக்கும்;
மந்த மாருதம் –
மலர்களோடிருக்கும் –
பந்த மிழக்கும்;
சந்திப்பொழுதே –
மொத்தத்தில் –
புந்தி இழக்கும்!

அன்றொரு நாள்...
அரசன் குந்தி போஜனின் –
அதிதியாக...

சந்ததமும் –
சினம் என்னும் –
துர்வாசம் வீசும் –
துர்வாசர் வந்தார்;
வரும்போதே – கனலும்
ஓமகுண்டமாய் வெந்தார்!

துர்வாசர்!
துவராடை புனைந்த –
சர்வேசர்!

எழுதாக் கிளவியை
எழுதிவைத்தாள் -
நாவின் கிழத்தி - அவர்
நாவில் அழுத்தி;
மூவுலகும் நிற்கும் - அந்த
முனிவரை வழுத்தி!
அவர்
தவம் புரிந்தால் -
சிவம் வரும்;
தவம் புரியாமலே -
சினம் வரும்!

அவர் -
வெகுளியின் -
மிகுதியில்...

வானத்தை நோக்கினால் -
வானம் நசுங்கும்;
பூமியை நோக்கினால் -
பூமி பொசுங்கும்;
வாரியை நோக்கினால் -
வாரி சுருங்கும்;
வெற்பை நோக்கினால் -
வெற்பு நொறுங்கும்!

மனத்தை அடக்கியவர்; தலை -
கனத்தை அடக்கியவர்; ஆசை -
இனத்தை அடக்கியவர்; அற்ப -
சினத்தை அடக்காது விட்டார்;
சொற்களால் அநேகரைச்
சுட்டார்!

கோபம் - அவர்
குரல்வளையில் -
கபம் போல் -
கட்டியிருக்கும்;
சாபம் - அவர்
செந்நாவில் -
உமிழ்நீர் போல் -
ஒட்டியிருக்கும்!

இவை
இரண்டையும் - அவர்
எப்போது
எவர் மீது -
துப்புவார் எனச்
செப்புதல் சிரமம்;
அதற்குத்
தப்பிப்பதும் -
தப்பிக்காததும் -
அவரவர் கருமம்!

அத்தகு -
அறநெருப்பை - தன்
அரண்மனையில் -
அதிதியாக ஏற்றதில்....
குந்தி போஜனுக்கு -
குதுகலம் பாதி; 'கோபம் -
தலையெடுக்குமோ?' - எனக்
குலை நடுக்கம் பாதி!

துர்வாசரை -
திருப்திப்படுத்துவது -
துர்லபம்;
சிசுருஷையில் -
சிறுபிழை நேரினும் -
சிட்சை நிச்சயம்!
இங்ஙனம் -
இருப்பினும்...

ஆரணவாணர்
ஆரணம் ஓத -
நாரண நாமம் -
நாற்றிசை மோத -
பூரண கும்பம் -
பூவையர் எடுக்க -
வாரணம் பிளிறி -
வாழ்த்தொலி கொடுக்க...

மாதவ மன்னனை;
மகானுபாவனை -

யாதவ மன்னன் –
எதிர்கொண்டான்; முனியின் –
சேவடிப் பூக்களில் –
சென்னியை வைத்து –
சாஷ்டாங்கமாக –
சேவித்து நின்றான்!

அடைமழை நாள்களில் –
அபூர்வமாய் – கீழ்த்திசையில்
கடைதிறக்கும் கதிர்போல்...

துர்வாசரின்
தடித்த உதடுகளில் –
சபித்தும் செபித்தும்
வெடித்த உதடுகளில் –
முதன்முதலாக – ஒரு
முறுவல் – மெல்ல
முகம் காட்டியது;
அது அவரது –
அகம் காட்டியது!

'பந்தி போஜனம் நடத்தி –
நாளும்
பலரது பசியாற்றும் –
குந்தி போஜனே! – புகழ்
குவிக்கும் யதுகுல ராஜனே!
உன் –
குடை வாழ்க!
கோல் வாழ்க!
குருதி காயாத –
வாள் வாழ்க!
நீயும் –
நின் குடியும் – நெடு
நாள் வாழ்க!
அடியேனுக்கு – இனி
ஆறிரு திங்கள் – உன்
அரண்மனை வாசம்தான்;
அதிதியாக! – அது
ஆகக் கூடுமோ – உனக்கு
அவதியாக?'

மாமுனி – இங்ஙனம்
மொழிந்ததும் – அவர்
மலரடிகளில் –
மீண்டும்...
விழுந்து வணங்கினான்
வேந்தன்; மண் மகளின் –
காந்தன்!

'தகைமை சால் –
தபோதனரே! – இது
தேவரீர் வதியும் –
திருமாளிகை! – இங்கு
அடியேன்தான்
அதிதி; தங்கள் –
அடியே கதியென்றிருக்கும் –
அகதி!'

கொற்றவன் மொழி கேட்டு –
குளிர்ந்தார் தவசி; பாதக்
குறடுகள் அணிந்து – நெடுங்
குன்றுகள் உலவும் துளசி!

குற்றமற்ற முனிவர்க்கு –
குற்றேவல் செய்தாள் –
குந்தி! – காலடியிலேயே
குந்தி!

அவர்
போகுமிடமெல்லாம் –
போனாள் –
பாதரட்சை போல்; பகற்
பொழுதை விடாது –
பின்பற்றும் –
சாயரட்சை போல்!
நித்தியப்படி – அவரது
நியமத்திற்கு...
வேதிகையை –
ஒழுங்குபடுத்துவாள்; அதற்கு –
அரிசிமாக் கோலத்தால் –
ஆடை உடுத்துவாள்; அளிகள் –

மாந்தாது விட்ட -
பூந்தாது மிக்க -
பூக்களாய்ப் பார்த்து -
பூஜைக்குக் கொய்வாள்; பஞ்ச
முகமுடைய விளக்கின் - அஞ்சு
மூக்குகளுக்கும் - அக்கினி
மூக்குத்திகள் மாட்டி - சுடர்
முத்தொளிரச் செய்வாள்!
அவர்
திருமஞ்சனத்திற்கு - கேணியில்
தண்ணீர் சேந்துவாள்; தலை
துவட்டியபின் - துர்வாசர்
தரித்துக் கொள்ள - கைகளில்
துவராடையை ஏந்துவாள்; பஞ்ச
அட்சரம் சொல்லி -
அள்ளிப் பூச -
நீறெடுத்து வைப்பாள்; பின் -
ஆசமனம் செய்து -
அர்க்கியம் விட -
நீரெடுத்து வைப்பாள்!
அவர் -
விழிக்குமுன் விழிப்பாள்;
அவர் -
படுத்தபின் படுப்பாள்!

இன்னணம்....
ஈராறு மாதங்கள் -
உண்டி மறந்து -
உறக்கம் மறந்து - ஒரு
தொண்டச்சியா யிருந்து -
தொண்டு புரிந்து...
கோபக்கார முனிவரை -
குளிர்வித்தாள் குந்தி; அவர்
வரமொன்று கொடுத்தார் -
தனது
உள்ளுணர்வு உந்தி!

'மகளே! - உனக்கொரு
மந்திரோபதேசம் செய்கிறேன்!
எந்த தேவதையை - நீ
எண்ணிக்கொண்டு - இந்த
மந்திரத்தை -
மனனம் செய்தாலும்...
அந்த தேவதையின்
அம்சத்திலே - ஒரு
சேய் உன்னிடம் -
ஜனனம் செய்யும்!'

துர்வாசர் புறப்பட்டார் -
தபோவனம் நோக்கி; அவர் -
சொன்ன மந்திரத்தை -
சோதிக்க எண்ணினாள் -
குந்தி; உள்ளத்தில் -
கொள்ளை ஆவலைத் தேக்கி!

---

# ஒரு பெட்டிக் குழந்தை

**உ**ச்சிவானத்தில் -
ஓடிக்கொண்டிருந்தது...

ஒற்றை ஆழியும் -
ஓரேழ் அசுவமும் -
பூட்டிப் பொலிந்த -
பொற்றேர் ஒன்று;
உள்ளே -
உட்கார்ந்திருந்த சூரியன்...
வெற்றிலை துப்புவது போல் -
வெய்யிலைத் 'தூ'வென்று துப்ப...

அது -
விழுந்த இடமெல்லாம்
வெந்தது; ஆவி -
வந்தது!

கொதிக்கும் நிலத்தில் -
கால்வைக்க பயந்து...
நதிக்கரை -
நாணல்களின் -
இடுப்பில் ஏறிக்கொண்டு -
இறங்கமாட்டே னென்று -
அடம் பிடித்தது -
அடவிக் காற்று;
காற்றின் -
கனம் தாங்காமல் -
நாணல்கள் -
கோணல்கள் ஆயின!

நெடுவானம் பொழிந்த -
நெருப்பு மழையில்...
நதிநீர் -
கொதிநீர் ஆனது;
நகை கக்கி -
நடம்புரிந்த அலையெலாம் -
புகைகக்கி -
புழுங்கிப் போனது!

காலை முதல்
மாலை வரை -
காலி மேயும்
கங்கைக் கரை - இன்று
காலியா யிருந்தது; கரையோர -
மீனைச் சாப்பிடும்
ஆனைச் சாத்தான்கூட -
சூட்டுக்குப் பயந்து
கூட்டுக்குள் - வேறு
சோலியா யிருந்தது!

அங்கே -
குந்தி வந்தாள்; சென்றாண்டில் -
மெதுவாக ருதுவான - செவ்
வந்தி வந்தாள்!
துர்வாச முனிவர் -
தந்தருளிய மந்திரத்தை...

சோதித்துப் பார்க்க - செக்கர்
சோதியை சிந்தையில்
வைத்து - அதை
ஓதினாள்; நேர்வந்து -
ஆதித்தன் நின்றதும் - அவள்
ஆதி அந்தம் அதிர்ந்து - அவை
மோதினாள்!

ஞாயிறு வனப்பை -
தரையில் பூத்த -
திங்கள் கண்டது;
அதன் -
செவ்வாய் வியந்து -
'அடடா!
அற்புதன்!' என்றது;
அந்த -
வியாழன் நிகர்த்த - துர்
வாசன் அருளால் - சொக்க
வெள்ளி நிகர்த்த - ஒரு
வெளிச்சம் 'பளிச்'சென -
சனித்து நின்றது; ஒப்பின்றி -
தனித்து நின்றது!

அது -
வீசியது ஒளி! - கண்
கூசியது வெளி!
குந்திக்கு முன்னால் -
கூப்பிடு தூரத்தில் நின்றான் -
மறை
வந்திக்கும் வெய்யன்;
நூறாயிரம் அரும்புகளை -
நொடியில் அவிழ்க்கும் -
ஓராயிரம் கையன்!

அவன் -
விசும்பில் வேர்விட்ட -
வெங்கனல் விருட்சம்;
அந்த
விருட்சம் - தனது
வெளிச்ச விழுதுகளை...

நிதம் நிதம் -
நிலத்தில் இறக்கும்;
இறக்கா விடில் -
இயற்கை இறக்கும்!

அவன் -
நெடுவானில் நிறுவிய -
நெசவுக் கூடம்;
அந்த
நெசவுக் கூடம் -
நெய்து கொடுக்கும் -
வெய்யில் ஆடையை -
கையில் வாங்கி...
வையம் -
வைகறைப் போதில் -
கட்டிக் கொள்ளும்;
இல்லையேல் -
இருட்டுச் சுவரில் -
முட்டிக் கொள்ளும்!

ஒவ்வொரு நாளும் -
ஒளிப் புடைவையை -
இரவில் - அவன்
இரவல் தராவிடில்...

அம்புலிகூட -
அமரக்கூடும் -
அம்மணமாக;
சம்மணமாக!

அவன் -
காயத்திரி மந்திரத்தின் -
கதாநாயகன்; அவனுக்கு
உசாத்துணையாய் விளங்கும் -
உஷாநாயகன்!

அவன் -
காலை உணவு கடும்பனி; பிறகு -
மாலை வரையில் கடும்பணி!

ஆயினும் -
அன்றாடம்...
அக்கினிகோத்திரத்தில் -
அந்தணர் வழங்கும் -
அக்கிரதாம்பூலமும் -
அவிப் பாகமும்...
அவனது -
பகல் நேரப்
பசியாற்றும்!

ஒரு
சுருக்க மில்லாத -
அருக்கன் புகழை -
சுருக்க முடியுமோ -
சொல்லில்? - ஓர்
அலகு இலாத - அவன்
அருளொளி இலையேல் -
உலகு உழன்றிடும் -
அல்லில்!

தர்ம
சாத்திரம் யாவும் -
தோத்திரம் செய்யும் - அத்தகு
சூரியச் செம்மல்...

உதிரச் சிவப்பாய் - திரு
உடலம் விளங்க; அதன்மேல்
உபவீதம் போல் - வெண்பட்டு
உத்தரீயம் துலங்க;

பீதக ஆடையும் -
பைம்பொன் அங்கியும் -
மாதவ மேனியை -
மருவி யிருக்க;
கனக -
மண்டலங்கள் போல் - செவி
மடல்களில் - அழகு
குண்டலங்கள் கனக்க;

கோடானு

கோடி -
திவசங்கள் கழிந்தாலும் - அவன்
திருமேனி கழியாத - வச்சிரக்
கவசங்கள் சொலிக்க;

'முத்தாரம்! முழுநிலவை -
ஒத்தாரம்! முளரிப்பூங்
கொத்தாரம்! மொத்தத்தில் -
பத்தாரம்! அத்துணையும் -
புத்தாரம்!' எனும்படி -
விதவித ஆரங்கள்...
அவனது -
வித்தாரம் நிறைமார்பில் -
அவனிடம் - ஓர்
உத்தாரம் - வாங்காமல் -
விளையாடிக் கிடக்க...

சௌந்தரியமும் -
சௌலப்பியமும் -
சேர்ந்தாற் போல் -
சேவை தந்து...
அன்பொழுக -
அணுகினான் -
யாதவன் மகளை; குந்தியெனும் -
மாதுளம் மடலை!

அவள் மீது -
தண்ணொளி வீசினான்;
தண்ணீர் போல் பேசினான்!

'குமரியே!
குந்திபோஜனின் -
குமாரியே!
மச்சம் வைத்த -
விழிகளில் - ஏன்
அச்சம் வைத்தாய்?
மந்திரத்தை - நீதானே
உச்சரித்தாய்! - நான்
மண்ணுலகம் வர -
நச்சரித்தாய்!

நான் -
நீள்விசும்பில் இருந்து -
நீயழைத்ததால் -
நிலம் வந்த விருந்து;
வந்த விருந்தை -
ஓம்பாது - புறந்
தள்ளுதல் போலொரு -
தீம்பேது?
உத்தமியே! - என்னை நீ
உபசரிக்க வேண்டும்; என்
உடற்பசிக்கு - உன்னை நீ
உபகரிக்க வேண்டும்!

தோகையே!
துர்வாசன் யார்?
தொல்புவி -
துதி செய்யும் -
யதி! - இது அந்த
யதி செய்த -
விதி!

யதியின் விதியை -
யார் மீறினும் -
அவர் கதி -
அதோ கதி;
இது -
யதி இயற்றிய நியதி!

அழகியே! - நான்
அணைக்க முடியாத -
அக்கினி; ஆனால்...
என்னுள் - உன்னால்
எழுந்தது - எளிதில்
அணைக்கக் கூடிய -
அக்கினி!

ஆதலால் - முதலில்
அங்கி அணிந்த - இந்த
அங்கியை அணை;
அதன்பின் - இந்த

அங்கிக்குள் இருக்கும் -
அங்கியை அணை!'

தன்னைத்
தழுவ வந்த -
தின மணியை;
திவாகரனை -
தடுத்தாள் குந்தி; கண்ணீர்த்
திவலைகள் சிந்தி!

'பகலவனே! சூரிய -
பகவானே!
இந்த வினை - நான்
மந்திரத்தை சோதித்ததால் -
வந்த வினை;
என்னால் ஏற்க -
ஏலாது - விருந்தாக
வந்தவனை!

நான் -
கன்னி கழியாத
கன்னி! - இந்தக்
கன்னிமேல் -
கழிவிரக்கம் காட்டி -
மன்னி!

எனைத்தழுவி - நீ
திரும்பலாம் வானம்;
உனைத் தழுவி - எனக்குத்
திரும்புமா மானம்?

தினகரனே!
தயாபரனே!
என்னால் -
நொறுங்கிப் போவதா -
எந்தை கௌரவம்? இற்ற
கந்தை போல் -
சுருங்கிப் போவதா -
முந்தை கௌரவம்?

இரவியே!
இறைஞ்சுகிறேன் - இணையடி
பரவியே!
இழைத்தேன் பிழை;
அழைத்தேன் உனை;
இருப்பினும் - நீ
அருள் கூர்ந்து...
ஏறுக விண்ணில்;
என்னைக் கற்பொடு -
இருக்கவிடு மண்ணில்!'

பாவையின் சொல்லை - பரிதி
பொருட்படுத்த வில்லை!

'அழகியே! - இந்த
அனலுக்கு - நீ
அனலை மூட்டாதே; பேச்சில் -
அவலயத்தைக் காட்டி - இந்தக்
குவலயத்தை வாட்டாதே!

பயனில்லை -
விழிநீர் சிந்தி; வரும் -
பலாபலன்களை -
விரிவாகச் சிந்தி!

அறம் தோற்கலாம்;
ஆனால் - துர்வாசனின்
வரம் தோற்காது;
வார்த்தைகளை -
வளர்க்காதே - என்
உறவை ஏற்காது; நான் -
வான்புக மாட்டேன் -
உன்னோடு - மன்மத
நோன்பு நோற்காது!
குந்தியே! - என்னைக்
குலவு! - உன்
உந்தியில் உதிப்பான் - ஒரு
மகவு! - அவன்
என்னுடைய -
கவச குண்டலங்களை -

ஏற்றிருப்பான்; அவன் -
ஏந்தும் வில்முன் - எந்த
வேந்தும் இம்பரில் -
தோற்றிருப்பான்; அவனை
அணுகுவதற்கு -
அஞ்சிய வண்ணம் - அந்தக்
கூற்றிருப்பான்; உலகம் -
உள நாள் மட்டும் - அவன்
உலகத்தார் நாவிலெல்லாம் -
வீற்றிருப்பான்!'

இப்படிச் சொன்னான் -
இரவி; கூடவே -
இன்னொன்றும் சொன்னான்!

'குந்தியே!
குழந்தையை ஈன்றபின்...
மறு -
கணமே - மீண்டும்
கன்னியாவாய்; புதிதாய்
வாய் வெடித்த -
வண்ணப் பூவாய்!'

சூரியன் சொல்லுக்கு - குந்தி
சம்மதித்தாள்; அவனோடு
சங்கமித்தாள்!

பிறந்தது குழவி; விண்ணேறிப்
பறந்தது இரவி!

ஊர் வாய்க்கு பயந்து - மகவை
ஓர் பெட்டியில் வைத்து -
கங்கை
நீர்வாயில் சேர்த்தாள் -
குந்தி! - மீண்டும்
கன்னியான சாமந்தி!

புனலில்
மிதந்து வந்த - அந்த
பெட்டிக் குழந்தையை...
ஒரு
தேர்ப் பாகனிடம்
சேர்த்தது காலம்! - அந்தக்
குழந்தைதான்...
'கர்ணன்!' எனப்படும்
கொடை மேகம்!

---

# மூன்று திருமணங்கள்

ஒரு
கன்னி கருவுற்றாள்;
உற்ற கருவை -
பெற்ற பிறகு - மீட்டும்
கன்னி உருவுற்றாள்!
ஆம்!
ஒரு -
பூவானது -
காயானது;
காயாகித்
தாயானது! - அங்ஙனம்

தாயான -
காயானது -
பழையபடி -
பூவானது!
இதைப்பார்த்து -
இயற்கை...
'இது என்ன முரண்?'
என்று -
தலையைப் பிய்த்துக்கொண்டு
திகைத்து நின்றது; 'இது
சுள்ளென்று உறைக்கும்

சூரியனார் சித்து!' - என்று
புள்ளொன்று தன்போக்கில் -
பாடிச் சென்றது!

உலக வழக்கில் - குந்தி
ஒருத்தியிடம்தான்...
கெடுத்த பிறகும் - கற்பு
கெடாமலே இருந்தது - ஒரு
கலவியாலே; எடுத்துக்
கொடுத்த பிறகும் - சற்றும்
குறையாமலே இருந்திடும் -
கல்வி போலே!

'அவளை -
அண்டக்கூடாது - ஓர்
அபவாதம்!' - என
ரவி செய்தான் - அந்த
ரசவாதம்!

ஒரு
போது - பூவான
போது...
அதன் -
பொலிவும் -
பரிசுத்தமும் -
எப்படியிருக்கும்?
அப்படியிருந்தாள் -
குந்தி! இடையில் நேர்ந்த -
அசுத்தங்களையெல்லாம் -
சிந்தி!

வழக்கம்போல் - நந்த
வனங்களில்...
வசந்த மாளிகையின் -
வாசல்களைச் சேர்ந்த...
ரேழிகள் அருகே - நெடு
நாழிகள் அமர்ந்து -
தோழிகள் உடனே - வெண்
சோழிகள் உருட்டினாள்;
[illegible]

பழமுதிர்ச் சோலைக்குள் -
புகுந்து...
பட்டாம் பூச்சியோடும் -
தட்டான் பூச்சியோடும் -
கண்ணாம்பூச்சி ஆடி - மெல்லக்
கைப்பற்றி மருட்டினாள்;
தும்பிகள் - அவளுக்குத்
தம்பிகள் ஆயின; அவை -
முரலும் ஓசையை - விரல்
மீட்டும் சுருதியாய் - அவள்
குரலும் ஏற்று - நாட்டக்
குறிஞ்சிப் பண் பாட...
தும்பிகள் - தம்புராக்
கம்பிகள் ஆயின;
வேளைகள் இவ்வண்ணம் -
விளையாட்டாய்ப் போயின!
குந்தி தேவிக்கு - ஒரு
கொழுநனைத் தேட -
குந்திபோஜன் -
குறித்தான் தேதி;
சுயம்வரம் நடத்த -
சுற்றுவட்டாரத்து -
வேந்தர்களுக்கு -
விடுத்தான் சேதி!

அண்டை தேசத்து -
அரசுகளுக்கெல்லாம் -
வெகு நாள்கள் -
முன்னதாகவே...

கொண்டல்களும் -
கூதல்களும் -
கொடுத்திருந்த -
குறிப்புகளின்படி...

குந்தி - ஒரு
குறிஞ்சிப்பூ!
அந்த -
குறிஞ்சிப்பூவின் - குவியிதழ்
குவித்திருக்கும் தேனை -

உறிஞ்சிப் பருகவும் – பூவை
உடைமையாய்ப் பேணவும் –
வரிந்து கட்டிக்கொண்டு –
வாலிப அரசுகள் –
வண்ணமிகு நகரில் –
வந்து இறங்கின;
சூட்டோடு சூடாக –
சுயம்வரம் நடக்கும் –
பளிங்கு மண்டபத்தின் –
படிகளில் ஏறின!

மணிக்கரங்களில் –
மலர்மாலையை ஏந்தியபடி...
மைய மண்டபத்தில் – குந்தி
பையப் புகுந்தாள்; அந்த –
அழகு ஆறுகண்டு –
அழுக்காறு கொண்டு – இந்த
வையப் பெண்கள் –
வையப் புகுந்தாள்!

அங்கு – வெள்ளிப்
பூண்டு நிறத்துப்
பாண்டுவும் வந்திருந்தான்;
குந்தியெனும் –
அந்திவெயில் – நெஞ்சில்
கொதிப்பேற்ற வெந்திருந்தான்!

நிலம் பார்த்த –
நீள்விழிகளை – மன்னர்
குலம் பார்க்க –
மெல்ல உயர்த்தினாள் –
குந்தி! – உடனே
பரபரத்தது – புரவலர்
பந்தி!
இளவரசுகளின் –
சேதிகள் –
எடுத்து இயம்பினர் –
தாதிகள்!

ஒருவிநாடி – அவையை
விழிகளால் –
துருவினாள்; அதன்பின்
ஓரிடத்தில் –
விழிகளைச்
செருகினாள்!
அனல் –
வேர்வை வடித்த – பிற
வேந்தரை விடுத்து – குந்தியின்
பார்வைப் பறவை –
பறந்து சென்று – மெல்லப்
பாண்டுமேல் போயமர...

'இவனே! இவனே!
இவனே எனக்கு –
இயைந்தவன்!' என்று –
இதயத்தில் வேட்டாள்; தன் –
கைமாலையை – வெள்ளைக்
கைம்மாபோல் – ஆங்கு
கொலுவிருந்த – பாண்டு
கழுத்தினில் போட்டாள்!

ஆரவாரித்தது அவை;
அங்கீகரித்தது அதை;
ஆன்றோரும் சான்றோரும் –
அள்ளித்தூவினர் அட்சதை!

குந்தியின் திருமணத்தை –
குந்திபோஜன் – 'இதுபோல்
முந்தியும் நடந்ததில்லை; இனி
பிந்தியும் நடப்பதற்கில்லை!'
என...
சந்திக்குச் சந்தி –
சனங்கள் பேசுமாறு –
பந்திக்குப் பந்தி –
படைத்தான் பல்வகைச் சோறு

பாட்டும் பரதமும் –
வேட்டும் வாணமும் –
கூட்டுச் சேர – அங்கே
கொப்புளித்தது –

குதுகலம்; அதில் -
முக்குளித்தது -
யதுகுலம்!
அத்தினபுரத்திலும் -
ஆடலும் பாடலும் -
அறுசுவை உண்டியும் -
அல்லோலகல்லோலப் பட்டது;
முகக்கண் இல்லாத -
மூத்தவன் தனது -
அகக்கண் பார்த்து -
ஆனந்தக் கண்ணீர்விட்டது!

'ஒரு தாரம்;
ஒரு தனயன்! - இந்த
அளவுகள் - என்றும்
அரசர்க்கு ஆகாது!
இரண்டோ மூன்றோ -
இருந்தால் தான் -
மரபின் மடி -
மலடாகிப் போகாது!'

இது -
சத்திரியருக்குரிய -
சாத்திரத்தில்...
பீஷ்மன் கற்றறிந்த
பாலபாடம்! இந்த -
பால பாடத்தின் -
பலன்தான்...
திருதராஷ்டிரனுக்கு - அவன்
திருமணம் செய்துவைத்த -
பத்துத் தாரம்;
காந்தாரியின் -
கூடப் பிறந்தவர்கள் - அந்த
பத்துப் பேரும்!
ஒரு
பெண்டோடு நிற்கும் -
பாண்டுவிற்கும் - இன்னொரு
பாணிக்கிரகணம் செய்துவைக்க -
பீஷ்மன் எண்ணினான்;

மத்திர தேசத்து -
மன்னவனை;
சல்லியன் என்னும் -
நல்லவனை நண்ணினான்!

சல்லியனின்
சகோதரி -
மெல்லியலாள்
மாத்திரி! - அவள்
பொன்னவிர் மேனியில் -
புறப்படும் வெளிச்சத்தில் -
பகலாய் மாறும் -
ராத்திரி!

அவள் -
நீலோற்பல
நேத்திரி! - அந்த
நேத்திரம் இரண்டும் -
நெய் நெருப்பின்றி - எரியும்
பூத்திரி!

அவள்!
பொறையும் -
நிறையும் -
பீஷ்மனுக்குப்
பிடித்திருந்தது; நற்
பண்பு - அவளை
பற்றுக் கோடாய்ப்
பிடித்திருந்தது!

பீஷ்மன் -
பெண்ணின் அண்ணனிடம் -
பெண் கேட்டான்;
பெண்ணின் அண்ணன் -
பீஷ்மனிடம் -
பொன் கேட்டான்!

'பீஷ்மனே!
பெரியவனே!
பொன்னைப் பெற்று -

பெண்ணைக் கொடுத்தல் -
எங்கள்
மரபு! - அதை
மீறினால் - அதன் பெயர்
மரபு அல்ல;
திரிபு!'

சல்லியன் மரபை -
சந்தனு மகன் -
போற்றினான்;
போற்றி - நான்கு வார்த்தை
சாற்றினான்!
'சல்லியனே! - நீ
சொல்லியதுதான்
சனாதன தருமம்;
பொன்னைக் கொடுத்து -
பெண்ணைப் பெறுவதே -
புண்ணிய கருமம்!'

இதனை -
பிரமனும் ஒப்பினான்; தன் -
பழமறையில் செப்பினான்!
'மருமகள் என்பவள் - நம்
மனைக்கு வருகின்ற -
திருமகள்! - அவளைப்
பொன்வைத்து அழைத்தல்தான்
-
பொருந்தும்; இது -
புரியாதார் அகமெல்லாம் -
வருந்தும்! - இடையில்
மின்வைத்து வருகின்ற -
மாட்டுப்பெண் - வலக்காலை
முன்வைத்து உள்நுழைந்தால்...
திருந்தாத இல்லமெல்லாம் -
திருந்தும்; தெய்வமே -
அதிதியாய் அங்குவந்து -
அருந்தும்!
எனவே - நீ
எண்ணிய வண்ணம்...
பொருளோடு பொன்னும்
பெறுக; அவை -
போதாதெனில் இன்னும் பெறுக!
சல்லியனே! - இதில்
சங்கையை விடு; என்
சகோதரன் மகனுக்கு - உன்
தங்கையைக் கொடு!'

ஆன்றோர் குறித்த - ஓர்
அமிர்த யோகத்தில்...
அலரியில் -
அரும்பிய பனியை -
அருக்கன் பருகும் -
புலரியில்...

பாண்டுவின் கைத்தலம் -
பற்றினாள் மாத்திரி; நல்ல -
செய்யுள் கையுள் - சேரும்
செம்பொருள் மாதிரி!

பிறகு -
பீஷ்மன்...
விதுரனுக்கேற்ற -
வதுவைத் தேடினான்;
ஊர் ஊராகத்
தேர் ஏறி ஓடினான்!

தேவகன் என்னும் -
திருப்பெயர் தாங்கி - ஒரு
காவலன் இருந்தான்; அவன் -
அறவழி நீங்கி -
அமுது கிடைப்பினும் -
அதனை அருந்தான்!

அத்தகு -
உத்தமனுக் கொரு -
புத்திரி இருந்தாள்;
விதுரனை - அவள்தான்
விவாகம் புரிந்தாள்!

சந்தனு மகனை - தன்

சிந்தைகுளிர வாழ்த்தினாள் –
சத்தியவதி;
சரீரம் தளர்ந்துபோய் –
சலசலப்பின்றி ஓடும் –
சத்தியநதி!

ஒருநாள்...
இருதாரங்களோடும் –
பரிவாரங்களோடும் –
புறப்பட்டான் பாண்டு...
வனத்திற்கு –
வண்ணமான்களை –
வேட்டையாட; அங்கே –
விதிகாத்திருந்தது –
வண்ணமான் வடிவில் –
அவனை
வேட்டையாட!

---

# இமயமலைச் சாரலிலே...

நனி வரை – பரவை
நுரைபோல் வெளுத்த –
பனிவரை! – அங்கு
நெடுகப் பார்க்கலாம் –
நிட்டையில் இருக்கும் – பல
முனிவரை! – ஆயினும்
அவர்களில் ஆரும் –
அறிய வொண்ணார் – அந்த
முதுவரை வயதினை –
இதுவரை!

பூமி –
பார்த்த தில்லை – அந்தப்
பெருவரை பெருமைக்கு –
ஒருவரை வகுத்துரைத்த –
ஒருவரை!

புல்; பூண்டு முதலான –
பல்லுயிரையும் – காக்கக்
கடவரை; காமாட்சி
கணவரை – தனது
வசத்தில் வைத்திருக்கும் –
வடவரை! அந்தத்
தடவரை!

அதன்பேர் இமயம்! அதனை –
அருச்சிக்கும்; ஆராதிக்கும் –
அத்துவைத சமயம்!
அந்த –
நீள்வரையின் –
தாழ்வரையில் தான்...
கூடாரங்கள் எழுப்பிக்
குடிபுகுந்தான்...
பொற்றாலி பூங்கழுத்தில்
பூண்டு – உடன்வந்த
பாரியை இருவரோடும் –
பாண்டு!

கங்குலும் –
பகலும் –
காவலுக்கும் –
ஏவலுக்கும்...
படைஞர் நின்றனர் –
பக்கலில்; படாம் பளிச்சிடு –
கரிகளோடு! பஞ்சகலியாணிப்
பரிகளோடு!

சுற்றிலும் –
சின்னச் சின்னதாய் –
குன்றுகள்;
இமயம் –
ஈன்றெடுத்த –
கன்றுகள்!

நடுவில் கிடந்தது -
நெடுக வளர்ந்த காடு;
கண்பட்ட இடமெல்லாம் -
கிரௌஞ்சங்களின் கூடு!
அங்கு -
அறவே இருக்காது -
ஆள் அரவம்; ஆனால் -
நிறையவே இருக்கும் -
நீள் அரவம்!

ஓரமாய் - அவை
ஊர்ந்து போகும்; ஆருக்கும் -
உண்டாகாது -
உபத்திரவம்; ஆயினும் -
அவற்றைப் பார்த்த -
அச்சத்தில் - ஆருக்கும்
உறைந்து போகும் -
உயிர்த்திரவம்!

கொடிய மிருகங்களின் -
குத்தகையில் இருந்தது -
முழுக்காடு; எனினும் -
வண்ண மான்களின் -
எண்ணிக்கை இருக்கும் -
அம்பது
விழுக்காடு!

அனேக நேரங்களில் -
அடையாளமே தெரியாமல் -
அக்காடு...
தலைமேல் போட்டிருக்கும் -
தண்ணீர் மேகங்களின் -
முக்காடு!

நசநசென -
பொத்தல் பானையாய் -
நாளும் கசியும் வானம்;
மசமசென -
தெப்பலாய் நனைந்து -
நமுத்துக் கிடக்கும் கானம்!

சதா - அந்த
சதுப்பு நிலத்தில் -
சாரலும் தூறலும் -
சடுகுடு ஆடும்; அதீத -
சிலேட்டுமத்தால் -
சிள்வண்டுகளுக்கு -
தொண்டைக்
கம்மல் வந்து - தொண்ணூறு
தும்மல் போடும்!

குயில்களுக்கும் -
குரல்வளைகளில் -
கபம் கட்டும்; அவை -
பாடும் போது - மேல்
பஞ்சமத்தில் -
பிசிர் தட்டும்!

சில சமயம் -
சீதளம் தாளாது...
தாவரங்களுக்குக் கூட -
தடுமன் வந்து - உச்சந்
தலையில் நீர்கோக்கும்; அவை -
வெய்யில் வரும்போது - அதன்
வெம்மையில் வேதுபிடித்து -
பின்
பைய குணமாகிப் பூப்பூக்கும்!

காடு வாடும் -
கங்குலில் - குளிர்
கூடும் போது; அதனிடம்
கை நிறைய -
கம்பளிப் பூச்சி உண்டு;
கம்பளி ஏது?

குந்திக்கும் -
மாத்திரிக்கும் - அந்தக்
காடு பிடித்திருந்தது; கைகால் -
குரக்குவலி வந்து -
குளிரில் - படுகின்ற
பாடு பிடித்திருந்தது!

முகாம் விட்டு - வெளி
முற்றம் வந்ததும் -
முகம் தொட்டு -
முகமன் கூறும் -
மூடு பனியை...
மூடுபனி
முகர்ந்தவுடன் -
மூடிக்கிடந்த -
முகை விரியும் -
முருக்கம் பூவை...

வாடையில் -
வெடவெடக்கும் -
பேடையின் -
மோகன வாயை -
முத்தமிட்டுச் சூடேற்றும் -
நாகணவாயை...

பூநாகம் -
பிடித்து வந்து -
பூவரசு -
மேலமர்ந்து -
புசிக்கின்ற -
புள்ளரசை...

வானில்
உள்ளானை - 'உதவிக்கு
உள்ளான்!' என நம்பி -
வில்லம்பு
உள்ளானைக்
கண்டு - ஒருபோதும்
உள்ளம்
வெருவாது - வனஞ்சுற்றும்
உள்ளானை...

தென்னை -
ஓலை ஒன்றின் மேல் -
உட்கார்ந்து - ஈர
வாலை - கரிய
விசிறி போல் விரித்து -

காலை இளஞ்சூட்டில் -
காயவைக்கும் -
கரிச்சானை...
இவையன்றி -
ஈரம் -
ஊறும் நிலத்தில் -
ஊரும்...
நத்தையை; சிறு
நாங்கூழை;
அட்டையை; மர
வட்டையை...

இப்படி -
எதைக் கண்டாலும் -
குந்திக்கும் மாத்திரிக்கும் -
கண்கொள்ளா வியப்பு!
காரணம்... அத்தகு -
கானகத்தை - அவர்கள்
அதிகம் பார்க்காத -
அரண்மனைப் பிறப்பு!

மரம்; மட்டை;
குளம்; குட்டை; என -
எதனோடும் - அந்த
இருவரும் - மௌனத்தில்
சம்பாஷிப்பார்கள்; அந்த
சம்பாஷிப்பினால் - ஒருவித
சந்தோஷத்தை -
சம்பாதிப்பார்கள்!

பாண்டுவிற்கு - அவற்றில்
பிடித்தமில்லை; - அவன்
பிரியமாட்டான் - தான்
பிடித்த வில்லை; தனக்குப்
பிடித்த வில்லை!
பனியைப்
புல்லேந்தி நிற்கின்ற -
பொழுது
தொடங்கி - வேட்டைக்கு
வில்லேந்தி நிற்பதுதான் - தன்

விருப்பம் என்பான்; வையம் -
அல்லேந்தி நிற்கின்ற -
அந்தியிலேவந்து - விடுதியில்
இல்லேந்தி நிற்கின்ற. -
இதழ்த்தேனை உண்பான்!

அவன் -
அன்றாடம் -
ஆரண்யம் சுற்றி...
ஏவிடும் -
ஏகப்பட்ட சரங்கள் - சென்று
சீவிடும் -
சீயங்களின் சிரங்கள்!
அத்தியின் கொம்பை - ஓர்
அத்திபோல் கொய்யும் -
அவனது
அத்திரம் என்னும் -
சத்திரம்!

யாளியின் உயிரை - அந்த
யமன்போல் வாங்கும் -
அவனது
வாளி!

வல்லியம் குடலை - நேராய
வகிர்ந்து எடுக்கும் - அவன்
சல்லியம்!

வேட்டையில் இறங்கியவன் -
விடுதி திரும்பியதும் -
சேட்டையில் இறங்கிடுவான்;
சிறு வாயில் முத்தாடி -
சேயிழையார்
சிற்றிடையில் விளையாடி -
தொய்யும்
தறுவாயில் உறங்கிடுவான்!

நாள் முழுதும் - தன்





தோள் தழுவும் -
கணை களோடும் - இரு
துணை களோடும்...
நகர் நீங்கி -
நெடுவனம் புகுந்த -
நிலாநிறத் தம்பிக்கு...
நுகர்பொருள் அனைத்தும் -
நாள்தொறும் அனுப்பினான் -
நேசமிகு அண்ணன்! இரு -
நேத்திரமில்லா மன்னன்!
இது -
இங்ஙனமிருக்க...

ஒருநாள் - பாண்டு
ஒற்றையாய்ப் புறப்பட்டான் -
வேட்டை யாட;
வெய்யிலும் மழையும் -
ஒன்றினை ஒன்று -

மையலில் கூட!

நடந்தான்; நடந்தான்;
நீள நடந்தான்;
பாதங்கள் தேய - பல
காதங்கள் கடந்தான்!

மருந்துக்குக் கூட - ஒரு
மிருகம் - அவன்
திருட்டியில்
படவில்லை; வெறுமனே -
தாங்கியிருந்தான் தடவில்லை!

பாணங்கள் யாவும் -
புட்டிலின் உள்ளேயே -
நாணங்கள் மேவ...
முடங்கியிருந்து -
முகங்கள் கடுத்தன; அடிக்கடி -
மூரி நிமிர்ந்து -
மீண்டும் படுத்தன!
ஒருகுடம் வேர்வையை -
பாண்டு
ஒருசேரச் சிந்தினான்; ஒரு
நவ்வல் மரத்தடியின் -
நீழலில் போய்க் குந்தினான்!

அப்போதுதான் -
அந்தக் காட்சி...
பாண்டுவின் -
பார்வையில் பட்டது; அவன் -
வலக்கை உடனே -
வாளியைத் தொட்டது!
சற்றுத் தொலைவில் - அடர்ந்த
செடிகளின் மறைவில்...
ஒரு
பிணை மானும் - அதன்
இணை மானும் -
புணர்ச்சியில் ஒன்றாய்ப்
பொருந்திக் கிடந்தன;
ஒருமேனி - பால்
வாரியாய்;
மறுமேனி - நீள்
மத்தாய்; ஈர்
உயிரை இணைத்து - ஒரு
கயிறாய்த் திரித்து -
காதல் அமுதம் -
கடைந்து எடுத்து -
ஆசை ஆசையாய் -
அருந்திக் கிடந்தன!

முற்றும் கலவி -
முற்றா நிலையில் -
சற்றும் எதிர்பாரா வண்ணம்...
ஆண்மானின் -
அடிமார்பில் -
பாண்டு ஏவிய -
பாணம் பாய்ந்தது;
மறுகணம் - அந்த
மான் - ஒரு
முனிவனாய் மாறி -
மண்ணில் சாய்ந்தது!

பிணைமானும் - உடனே
பெண்ணுருக் கொண்டது;
பிரமித்துப் போய் -
பித்தேறி நின்றது!

பாண்டு -
பக்கத்தில் வந்தான்;
பயத்தில் -
பானைச்சோறாய் வெந்தான்!

மரணிக்கும் தறுவாயில் -
முனிவன் பேசினான்;
திராவகத்தில் - சொற்களைத்
தோய்த்து வீசினான்!

"ஒரு
கணையைக் கொண்டு -
இணையைப் பிரித்தவனே!

வெண் –
கதிர்குலத்துப் புகழை –
கறையானாய் அரித்தவனே!
நானொரு முனிவன்;
என்பேர் 'கிந்தமன்!' – பொய்
மானிடம் வெறுத்து – இந்தக்
கானிடம் வந்தவன்!

நான்மறை –
ஓதி ஓதி –
நாக்குச் சிவந்தவன்; நாளும் –
ஓமத்தை வளர்த்து – அதன்
தூமத்தை உட்கொண்டு –
மூக்குச் சிவந்தவன்!
என்
மனையாளும் நானும் –
மனத்தில் காமம் –
மலர்ந்ததை உணர்ந்தோம்;
மானுருக்கொண்டு புணர்ந்தோம்!
என்னை –
சாபத்தால் அடித்தவனே!
உன்னையும் –
சாபத்தால் அடிக்கிறேன்!
எக்கணம் – உன்
இல்லாளைப் புணர்வாயோ –
அக்கணம் – உன்
ஆவிநீங்க விதிக்கிறேன்!''

முனிவன் –
வான்போக...
முனிவன் கூடவே – அவன்
மான்போக...
முடிவெடுத்தான் பாண்டு –
முன்வினை விதித்த வழி –
தான்போக!

---

# உதித்தான் யுதிஷ்டிரன்...

மரையாகிப் போன
மாமுனிவர் – தன் கணைக்கு
இரையாகிப் போனதால்...
அவரது –
அந்திமச் சடங்குகளை –
பாண்டுவே –
பண்ணி முடித்தான்; பின் –
வாங்கிய சாபத்தை – தன்வசம்
வைத்துக்கொண்டு – தோளில்
தாங்கிய சாபத்தை – இரு
துண்டாக ஒடித்தான்!

விழி சுமந்த
நீரோடும் –
பழி சுமந்த –
நெஞ்சோடும்...
தான் –
தங்கியிருந்த –
விடுதிக்கு –
விரைந்து வந்தான்; இரு
அகமுடையாள்களுக்கும் – ஓர்
அதிர்ச்சியைத் தந்தான்!

'குந்தியே! – நல்
குணவதியே!
மாத்திரியே! – செம்
மாதர் நெறியே!
என்
ஆரங்களை ஏற்ற –
ஆரங்களே! அன்புத்
தாரங்களே!
நான் –
வனத்தில் –
வேட்டையாடுகையில்...

குறிவைத்தேன் – ஒரு
மானை; அது –
கொன்றதோ – ஒரு
மகானை!
மான் –
மகான் என –
மாறிய பின்புதான்...
மகான் –
மான் என –
மாறியிருந்ததை –
அறிந்தேன்; அச்சத்தில் –
அதிர்ந்தேன்; உடல் –
வெலவெலத்து –
விதிர்ந்தேன்!

ரிஷியும் –
ரிஷிபத்தினியும் –
பரகாயப்



பிரவேசம் செய்து -
புலவியும் கலவியும்
புரிகையில்...
விளைந்தது அந்த
விபரீதம்; என்மேல் -
விழுந்தது - அதற்கான
அபராதம்!

பூ முடித்த - என்
பூவையரோடு - நான்
புக முடியாது பள்ளி; மீறிப்
புகுந்து - சையோகம்
புரிந்தால் - மறலி
பறிப்பான் என்னுயிர் கிள்ளி!

புல்லுதல்
என்பதும் - என்னை நானே
கொல்லுதல்



என்பதும்...
ஒன்றுதான் -
என்று...
ஆன பிறகு - அதுவாகவே
அறுந்து போனது - என்
ஆசைச் சிறகு!

இனி
என் உள்ளம்...
உறவாடையை -
உரிக்கும்;
துறவாடையை
தரிக்கும்!
எனவே -
என்னைத்
தனியே விடுத்து - நீங்கள்
திரும்புங்கள் நாடு;
இங்கிருந்து
என்ன பயன் - பசலைக்
கொடிகளை உதறிய -
கொழுகொம் போடு?'

பாண்டு - இப்படிப்
பரமேகாங்கியாய்ப்
போக நினைத்ததும்...

குந்தியும் மாத்திரியும் - பொறி
கலங்கிப் போனார்கள்; சிறு -
கூட்டைக்
கலைப்பதுபோல் - விதி
வீட்டைக் கலைத்துப் போட்ட -
விதிர்விதிர்ப்பில்...
உள்நாக்கு - மேலண்ணத்தில்
ஒட்டிக் கொள்ள -
ஒரு கணம் -
ஊமைகள் ஆனார்கள்!

அதன்பின் - சுய
அறிவு திரும்ப - இருவரும்
ஆணித்தரமாக - ஓர்
அறிவிப்புச் செய்தனர்; தம்
நீள்விழிகளில் -
நிரம்பிக் கிடந்த -
நீர்ப்பூக்களை - விரல்
நுனிகளால் கொய்தனர்!

'நாயகனே!
நாங்கள் இருவரும் - உன்னை
இருட்டிலும் தொடரும் - உனது
இரட்டை நிழல்கள்; இந்த
இரட்டை நிழல்கள் -
இருக்க நிழல் தந்து -
இரட்சிப்பது - உனது
இரட்டைக் கழல்கள்!
வனமாயினும் -
வான மாயினும் - நீ
வாழுமிட மெதுவோ - அங்கு
வருவோம் பின்னோடு;
உடுத்திய -
ஓராடை தன்னோடு!
இந்தத்
தோகையர் அன்பு - வெறும்
தழுவலன்பு அல்ல;
ஒவ்வொரு பிறப்பும் -
ஒட்டி வரும் -
உழுவலன்பு!

சிற்றின்பம் - எங்களுக்கு
வெற்றின்பம்;
உனக்கு -
வாழ்க்கைப் பட்டோமே - அந்த
ஓரின்பம் - எங்களுக்குப்
பேரின்பம்!

இல்லத்தளவு
துறவும் -
உள்ளத்தளவு
உறவும் -
தலைவன் தலைவி ஏற்று -
தவங்கள் நோற்று -

வனவாசம் புரிவதுதான் -
வானப்பிரஸ்தம்; மண்ணில் -
வைகும் வரையில் - அதுபோல்
வாழ்வாங்கு வாழ்ந்தால் -
வாய்க்குமே மூவர்க்கும் - அந்த
வைகுந்தப் பிராப்தம்!

எனவே...
எங்கள் மணாளனே!
இனிய குணாளனே!
உன் -
உடன் இருந்தால் -
உயிர் தரிப்போம்; இல்லையேல் -
உடன் மரிப்போம்!'
இங்ஙனம் -
இரு தாரங்களும்...

பிரதிவாதம் புரிந்ததை -
பாண்டு ஏற்றான்; பத்தினிகள் -
பிடிவாதம் வென்றதால் -
புருஷன் தோற்றான்!

உடனே...
அரசர்க் குரிய -
ஆடை அணிகலன்களை
அகற்றி - அவற்றோடு
தனக்கிருந்த பந்தத்தைத்
துணித்தான்; தான்
துறவு மேற்கொண்ட -
தகவலை - தமையன்
திருதராஷ்டிரனுக்குத்
தெரிவிக்குமாறு - தானைத்
தலைவனைப் பணித்தான்!
பிறகு ...
ஒரு வினையும் -
இரு மனையும் -
உடன் வர...
தவ வாழ்வைத்
தொடங்கினான் பாண்டு;
துளசி மாலையும் -
துவராடையும் பூண்டு!

அரச போகமும் -
சரச போகமும் -
அறவே விடுத்து - தன்
அனுஜன்...
துறவறம் ஏற்றதெண்ணி -
திருதராஷ்டிரன் - வெகுவாக
துக்கித்தான்; தனக்குத்தானே -
தர்க்கித்தான்!

படிமிசை
பிறப்பெய்தும் -
ஒவ்வொரு மனுவிற்கும் -
வாழ்வு ஒரு வழிநடையாகும்!

எங்கெங்கே -
ஏற்றங்கள்;
எங்கெங்கே -
இறக்கங்கள்;
எந்தெந்த -
திக்குகளில் -
என்னென்ன -
திருப்பங்கள்...

என -
ஏற்கெனவேயே -
அவற்றை - ஓர்
அட்டவணை யாக்கி - அவன்
கபால வாசலில் - அதைக்
கல்வெட்டாய்ப் பொறித்து...

பிறகுதான் -
பன்னீர்க்குடத்தைப்
பொத்து - அவனை
பூமியில் இறக்குகிறது ஊழ்!

'பாண்டு - அவனது
பூர்வஜன்ம ஊழ்வழி -
போகிறான்!' என்று -

பீஷ்மன் ஓர்ந்தான்; வெற்றுப்
பிரலாபம் என்பது –
ஒருலாபம் அற்றது – எனப்
புரிந்து கொண்டு – மனப்
பதற்றம் தீர்ந்தான்!

'சந்திர வமிசத்தின் –
சந்ததி விருத்தியில் –
பாண்டுவின் பங்களிப்பு –
பூஜ்ஜியமாகி விட்டதே!'
என்று –
சத்தியவதிமட்டும் – சற்று
சங்கடப் பட்டாள்; அதையும் –
முதுமையின் காரணமாக –
முக்கல்
முனகலோடு விட்டாள்!

நெடுவனத்தில் – ஒரு
நீர்நிலை அருகில்...
சித்தர்களும்;
முத்தர்களும்;
பத்தர்களும்;
பித்தர்களும் –
சஞ்சாரம் செய்யும் –
சாரலில்...

சாமமும் –
ஓமமும் –
ஒலிக்கும் –
சொலிக்கும் –
தவப்பள்ளிகள் நிரம்பிய –
தலத்தில்...

ஒரு பன்னசாலை எழுப்பி –
பாண்டு – தன்னிரு
பத்தினிகளோடு –
பிரவேசித்தான்; தூய –
துவராடையில் – ஒரு
தவராஜனாய் –
பிரகாசித்தான்; 'இனி –
உலகாயத உணர்வுகள் –
உதவாது; அவற்றை –
உடன் உதறுக!' என்று –
உடன்வந்த உத்தமிகளுக்கு –
உபதேசித்தான்!

ஆயினும்...
அல்லாய்ப் பகலாய் –
செல்லாய்ப் புசித்தது –
அவனது அமைதியை – ஓர்
அவலம்; ஒருநாள்...
அந்தியை நிகர்த்த –
அளகம் வளர்த்த –
குந்தியை அழைத்து –
விளக்கினான் – அதன்
விவரம்!

'பிரியமானவளே! – எனைப்
பிரிய மனமிலாதவளே!
பிதிர்க்களுக்குப்
பிண்டம் வைக்கவும் –
திதி பார்த்து –
திவசம் செய்யவும்...
எனக்கொரு –
பிள்ளை இல்லை;
இது என் பாபம்!
இனியும் –
பிறப்பதற்கில்லை;
இது என் சாபம்;
கலவியில் இறங்கினால் –
கட்டாயம் நேரும் – உன்
கணவன் மரிப்பது; பின் –
எங்ஙனம் இயலும் –
என் மூலம் நீயொரு –
கருவைத் தரிப்பது?
ஆதலால் – என்
அன்பே! – நீ
உயர்குலத்தோன் –

ஒருவனின் –
உறவைப் போற்றிடுக! என் –
மரபு தழைக்க –
மகவு ஒன்றை –
மடியில் ஏற்றிடுக!'

பாண்டு –
இப்படிச் சொன்னதும் – தன்
இருசெவிகளைப் பொத்தினாள்
–
குந்தி தேவி; கேட்பதற்கே –
கூச்சம் மேவி!

பாண்டுவே தொடர்ந்தான் –
பேச்சை; பேச்சுக்குப்
பூசினான் – தருமத்தின்
பூச்சை!

'குந்தியே!
கூச்சம் விடு;
காதுகளை விட்டு
கரங்களை எடு!
சபிக்கப்பட்ட –
சூழ்நிலையில்...
சிலவற்றைச் செய்ய –
சாஸ்திரங்கள் ஒப்புகின்றன;
பிள்ளைப் பேற்றை – இங்ஙனம்
பெற்றவர் கதைகளை –
பிராசீனமான நூல்கள் –
பரவலாய்ச் செப்புகின்றன!
எனவே – நம்
இந்து குலம்...
மேம்பட உதவு; நான் –
மொழிந்தபடி –
மேற்கொள் உறவு!'

இந்த –
சந்தர்ப்பத்தில்...
துர்வாசர் – முன்னம்
தனக்குத் தந்த –
வரங்களைப் பற்றி – மெல்ல
வாய் திறந்தாள் – சப்த
சுரங்களைச் சிந்தி – சொல்லைச்
சங்கீதமாக்கும் குந்தி!

பாண்டு – பெரிதும்
பரவசப் பட்டான்;
குடம் குடமாக – ஆனந்தக்
கண்ணீரை விட்டான்; பிறகு...
'அறக் கடவுளை
அழைத்து – அவன்
அம்சத்தில் – ஓர்
ஆண்மகவை ஈந்திடுக!' என்று –
அன்பு மனையாளுக்கு – ஓர்
ஆணை இட்டான்!

தென்புலம் ஆளும் –
தரும தேவனை – குந்தி
அன்புடன் துதித்தாள்; திரு
மந்திரம் ஓதி – அவன்
மலரடி தன்னை – தனது
புந்தியில் பதித்தாள்!
ஆங்கு – உடனே
அறக்கடவுள் வந்தான்; அவளை
–
ஆரத் தழுவி – ஓர்
ஆண்மகவைத் தந்தான்!

தகவு மிக்க – அந்த
மகவு தான் –
தருமபுத்திரன்;
யுகம் கடந்தும் – புகழ்
முகம் காட்டும் –
யுதிஷ்டிரன்!

# நூறு பேர்கள்...

காட்டில் -
குந்திதேவி - ஓர்
ஆண் குழந்தைக்கு -
அன்னையான செய்தி...

காற்று வாக்கில் -
கண்ணிலா மன்னன் -
காதுக்கு வந்தது; உடனே -
காழ்ப்புணர்ச்சி -
காந்தாரி என்னும் -
மாதுக்கு வந்தது!

மூவெட்டு -
மாதங்களாக -
கருவுற்றிருக்கிறாள் -
காந்தாரி; இன்னும்
கைக்கு வந்த பாடில்லை - ஒரு
புழு; பூச்சி!
அவளோடு -
ஆடிக் கொண்டிருந்தது -
காலம் - ஒரு
கண்ணாம் பூச்சி!

'இது -
நிஜ கர்ப்பமா? இல்லை -
கஜ கர்ப்பமா? இதை -
வைத்திருப்பதா? இல்லை -
வழித்தெடுப்பதா?'
என்றெல்லாம்...

சதாகாலம் -
சங்கையோடிருந்தாள் - தன்
வீங்கிய வயிறை -
வருடி; கண் -
குருடா யில்லாத -
குருடி!

இப்படி -
இழுபறியா யிருக்கையில்தான்...

'தனக்கு முந்தி - ஒரு
தாயானாள் குந்தி!' எனும் -
தகவல் வந்ததும்...

காந்தாரி -
கடுப்பானாள்; புகையும் -
அடுப்பானாள்! அவளைப்
பிய்த்துப் பிடுங்கியது - ஒரு
பிள்ளையைப் பெறாமை; அந்தப்
பெறாமை பெற்றெடுத்தது - ஒரு
பிள்ளையை; அதன் பேர்
பொறாமை!

அழுக்காறு -
அவள் உள்ளத்தை -
அழுக்கு ஆறாக ஆக்கியது;
அதுவே -
அவளது கருப்பத்தை -
அழிக்க அவளை ஊக்கியது!

ஒரு -
குழவியை ஈனாத
கும்பியை - ஒரு
குழவியை எடுத்துக்
குத்தினாள்; மென்மேலும் -
மொத்து மொத்தென்று -
மொத்தினாள்!

கிழிந்தது உதரம்;
வழிந்தது உதிரம்; வெளியே –
விழுந்தது வந்து – ஒரு
மாமிசப் பந்து!

இதுகாறும் –
ஈராண்டு காலமாக...
தன் –
கருப்பை –
காத்து நின்றது – ஒரு
மகவு அல்ல; வெறும்
புலவு என்று...
அறிய வந்ததும் –
அந்தகன் மனைவி –
அதிர்ச்சியுற்றாள்; உடனே –
அந்தப் பிண்டத்தை –
அப்புறப் படுத்த –
ஆணையிட்டாள்!

அவ்வமயம் –
அங்கு...
வியாசன் வந்தான்; ஒரு –
விளக்கம் தந்தான்!

'காந்தாரியே!
கற்பு வாரியே!
சுபாலன் பெற்றெடுத்த –
சுகுமாரியே!
நீ –
குருடு அல்ல; ஆனால் –
குருடாய் இருக்கிறாய்! நீ –
மலடு அல்ல; ஆனால் –
மலடாய் நினைக்கிறாய்!
நினைப்பு வேறு;
நடப்பு வேறு;
நினைப்பது நடக்காததும் –
நினைக்காதது நடப்பதும் –
நினைப்பது நடப்பதும் –
நினைக்காதது நடக்காததும் –
வல்லான் –
வகுத்தவாறு!

உத்தமியே!
உன் உதரம் –
உமிழ்ந்த ஊன்விட்டை...
ஒருநூறு குஞ்சுகளை –
உள்ளடக்கிய முட்டை!
இதைக்
காலம் பொரிக்கும்; பிறகு உன் –
கைகளில் கொடுக்கும்!
இப்போது –
இந்தப் பிண்டத்தை...
குளிர் நீரில் –
குளிப்பாட்டி – நூறு
நெய்க்குடங்களில் –
நிரப்பி...
பாதுகாக்க வேண்டும்;
பகலிரவு யாண்டும்!'

இங்ஙனம் – வியாசன்
இயம்பியதும்...

தோழிகள் –
கொண்டு வந்தனர் – நூறு
தாழிகள்!
இறைச்சி உண்டையை –
ஈரைம்பது குடங்களிலும் –
நிறைத்தான் தவசி; நாளைய –
தினத்தில் நடப்பதை –
தக்கணமே அறியும் –
தீர்க்கதரிசி!
எஞ்சியிருந்தது – கைவசம்
கொஞ்சம் புலால்; அதை
இன்னொரு குடத்தில் –
இட்டு நிறைத்தான்; பிறகு –
'என்ன நேரும்?' என்பதை –
எடுத்து உரைத்தான்!

'காந்தாரியே!
காலம் கனிந்ததும் –
குடங்கள் நூறும்...
ஒன்றன்பின் ஒன்றாய் –
வெடிக்கும்;
ஒவ்வொன்றிலிருந்தும் –
ஒவ்வோர் ஆண்பிள்ளை –
உதிக்கும்!
இறுதியாய் – ஊனை
இட்ட குடத்திலிருந்து – ஒரு
பெண்பிள்ளை –
பிறக்கும்; உன்
உள்ளம் போல் –
வாழ்க்கை சிறக்கும்!'

கையுயர்த்தி –
காந்தாரியை வாழ்த்திவிட்டு...
காடு நோக்கிக்
கிளம்பினான் –
வியாசமுனி! உலவும் –
வேதாக்கினி!

சில
அமாவாசைகள் –
ஆயின; சில –
பௌர்ணமிகள் –
போயின!

ஒரு நாள்...
ஒரு நூறு குடங்களில் –
ஒன்று விண்டது; அதன் –
உள்ளிருந்து – ஓர்
ஆண்சிசு –
வெளியே வந்தது!
அந்த –
ஆண் மகவுதான்...
துரியோதனன் என்றும்...
சுயோதனன் என்றும் –
பின்னாளில் – புகழ்
பூத்தவன்; தாழியில் –
முளைத்த கௌரவர்களில் –
மூத்தவன்!

ஆனால் –
அவன் பிறந்த போது...
தேசமெங்கும் தோன்றின –
துர்நிமித்தங்கள்;
ஆங்காங்கு நேர்ந்தன –
அனேக அனர்த்தங்கள்!
திக்கு திக்காக –
திடீர் திடீரென்று –
தீப் பிடித்தது; ஒரு –
பூகம்பம் இன்றியே –
பாளம் பாளமாக –
பூமி வெடித்தது!

ஊழிக் காற்று போல் –
பூழிக் காற்று –
ஊரெங்கும் –
வீசியது; அது –
விசும்பளந்த –
விருட்சங்களை –
வேரோடு கல்லி –
வீசியது!

நாய்களும் –
நரிகளும் –
வாய்விட்டு
அழுதன;
பீதியும் –
பீடையும் –
ஊரையே –
உழுதன!

ஆக மொத்தம் – எங்கும்
அமங்கல சப்தம்!
தாழியிலிருந்து –
தலைப்பிள்ளை –

தலைகாட்டிய -
நாழியிலிருந்து...
ஊருக்கு ஒவ்வாத -
உற்பாதங்கள் -
ஒவ்வொன்றாக -
உற்பவிக்கக் கண்டு...

திருதராஷ்டிரன் -
திகைத்துப் போனான்;
அலகை அதன்கை கொண்டு -
அறைந்தாற்போ லானான்!

அறங்கூறும் பீஷ்மனையும் -
அமாத்தியன் விதுரனையும் -
மற்றும் -
மேலோரையும் நூலோரையும்...
தகவல் அனுப்பி -
தன் அரண்மனைக்குத்
தருவித்தான்; தீக்குறிகள் -
தென்பட்டதால் - தனக்குள்
தான்பட்ட பாடுகளைத்
தெரிவித்தான்!

'என்னை -
ஆற்றுப் படுத்தும் -
அறவோரே!
வனத்தில் - குந்தியின்
வயிற்றில் -
யுதிஷ்டிரன் -
உதித்ததும்...
நாட்டில் -
நன்னிமித்தங்கள் -
நேர்ந்தன; நலம் பயக்கும் -
நாளும் கோளும் -
தோளொடு தோள் -
சேர்ந்தன!

ஆனால் - என்
அன்பிற்குரிய -
மூத்தவன் - மண்ணில்
பூத்ததும்...
தீய சகுனங்கள் -
தோன்றின; ஆங்காங்கு -
தீமைகள் - வேர்
ஊன்றின!
என் தலைச்சன் -
எழுந்த போது -
ஏனிந்த -
தூமகேது?
இவையெலாம் -
எவற்றின் அடையாளம்?
இயம்புக;
என்னாகும் எதிர்காலம்?'

இரு
விழியிலா வேந்தன் - இங்ஙனம்
வெய்துயிர்த்தான்; ஒரு -
பழியிலா விதுரன் - ஏற்றதொரு
வழியுரைத்தான்!

'அரசே! - நான்
ஆய்ந்து பேசுகிறேன்;
தீர்க்க தரிசனத்தில் -
தோய்ந்து பேசுகிறேன்!
தங்கள் -
தலைப்பிள்ளை - தங்களுக்குத்
தலைத்தாழ்வு
தரும்பிள்ளை; நாளை -
தலையெடுத்தால் - பலர்
தலையெடுக்கும் பிள்ளை!
நம் -
தலைமுறைக்குத் தகாத பிள்ளை.
நாம் -
தலைமுழுகத் தகுந்த பிள்ளை!
ஒரு நூறில் - தங்களுக்கு
ஒன்று போகும்; தகப்பனென்று
ஒட்டி
உறவாடிட - தொண்ணூற்று

ஒன்பது போதும்!
பின்னாளில் - இப்பிள்ளையால்
போர் மூளும்;
புகழ் சால் குருகுலத்தின் -
பேர் மாளும்!
எனவே -
இதை இப்பொழுதே...
கைவிடல் நன்று; அது -
குற்றமும் அன்று!'

பேரறிஞன் விதுரன் -
புத்தி சொல்லியும் - பிள்ளைப்
பாசத்தால் - திருதராஷ்டிரன்
ஒப்புக் கொள்ளவில்லை;
ஆகவே -
உதித்த முதற்பிள்ளையை -
ஒதுக்கித் தள்ளவில்லை!

ஒவ்வொரு நாளும் -
ஒவ்வொரு குடம் வெடிக்க -
ஒவ்வொரு குடத்திலும் -
ஒவ்வொரு பிள்ளை விழிக்க...

மொத்தம் ஆண் மகவு -
நூறானது; காந்தாரி
சித்தம் - ஆனந்த
ஆறானது!

இறுதியாய் வியாசன் -
எஞ்சிய புலாலை -
இட்ட குடத்திலிருந்து...
ஒரு
பெண்பிள்ளை பிறந்தது; இரு
கண்முல்லை திறந்தது!

பொற்சிலை நிகர்த்த - அதற்கு
'துச்சலை!' - என்று
திருநாமம் இட்டனர்; தங்கத்
தொட்டிலில் விட்டனர்!

'குழந்தைகள் யாவும் -
கோமேதகக் குவை!' என்று -
குதுகலித்தது; குதித்தது -
குருகுலத்து அவை!

'நூறும் புகுக!' என்று -
நூலோர் வாழ்த்தி - பிள்ளைகள்
நூற்றுவர்க்கும் - இட்ட
நாமங்கள் இவை:

துரியோதனன்; துச்சாதனன்;
துஸ்ஸகன்; துச்சலன்;
துர்முகன்; துஷ்ப்ரதர்ஷணன்;
துர்த்தர்ஷன்; துர்மர்ஷணன்;
துஷ்கர்ணன்; துஷ்ப்ரகர்ஷன்;
துர்மதன்; துர்விரோசனன்;
விவிம்சதி; விகர்ணன்; விந்தன்;
சித்ரன்; உபசித்ரன்; சமன்;
சித்ரபாகு; அயோபாகு; மகாபாகு;
சித்ரவர்மா; சுவர்மா; சுபாகு;
பீமவேகன்; பீமபலன்; பலாகி;
பீமசரன்; பீமவிக்ரமன்;
பிரமதன்; பிரமாதி; பகவாசி;
நந்தன்; உபநந்தன்; நிஷங்கி;
நாகதத்தன்; தண்டி; விராவி;
அபயன்; அலோலுபன்;
அனுயாயி;
அணதரன்; அனாத்ருஷ்யன்;
கவசி;
விவித்சு; விகடன்; வாதவேகன்;
ஊர்ணநாபன்; பத்மநாபன்;
சேனாபதி; சுஷேணன்; சேனானி;
சித்ரசாபன்; சுகுண்டலன்; வீரன்;
சித்ராஷன்; சாரு சித்ராங்கதன்;
சுலோசனன்; ஜலசந்தன்;
கர்ணன்;
மகோதரன்; குண்டோதரன்;
வீரபாகு;
உக்ராயுதன்; உக்கிரசேனன்;

உக்ரசிரவஸ்; சுவர்சஸ்;
சத்யசந்தன்; சகஸ்ரவாக்;
திருடாயுதன்; திருடவர்மா;
சராசந்தன்; திருடசந்தன்;
திருடஷத்ரன்; சோமகீர்த்தி;
திருடகஸ்தன்; சுகஸ்தன்;
அபராஜிதன்; ஆதித்யகேது;
விசாலாஷன்; துராதனன்;
தண்டதாரன்; தனுர்கிரகன்;
உக்கிரன்; பீமதரன்; கனகாயு;
பண்டிதகன்; சேஷம மூர்த்தி;
திருடரதன்; தீர்க்கலோசனன்;
கனகாங்கதன்; ரௌத்ரகர்மா;
குண்டஜன்; சித்ரகன்;
வியூடோரு;
தீர்க்கபாகு; தீர்க்க ரோமன்;
துஷ்பராஜன்; அநுவிந்தன்;
குண்டபேதி!



# பீமன் பிறந்தான்!

ஓர்
ஊனிலிருந்து -
உயிரை வாங்கத்தான் - எமன்
வானிலிருந்து -
வையம் இறங்குவான்;
இம்முறை - அவன்
இறங்கி வந்தது...
ஓர் -
இறப்புக்காக அல்ல;
பிறப்புக்காக!

மரணம் -
மட்டுமல்ல;
'ஜனனமும் அவனால் -
சாத்திய மாகும்!' என்னும் -
சிறப்புக்காக!

ஆம்!
காலன் - ஒரு
கருப்பைக்கு வழங்கினான் -
பாலன்!

எமனின் எச்சத்தை -
ஏற்றுக் கொண்டது -
கொண்டவன் சொற்படி -
குந்தியின் கும்பி;
அந்த -
அந்தகன் தயவால் - ஒரு
தந்தையென்றானான் -
அந்தகன் தம்பி!

அதோ!
பாண்டுவின் -
பர்ணசாலையில்...
ஒரு
தடுக்கில் கிடக்கும் -
தங்க விக்கிரகம்தான்...

குந்தியின் வழியே - அவள்
உந்தியின் வழியே -
புறம் வந்த -
அறம்;
இராவும்
பகலும் - பாவங்களை
அராவும்
அரம்!

பறவையைக் கறவையைப்
பார்த்தவாறே - அந்த
வண்ண மணிப்பிள்ளை -
விரல் சூப்பும்! 'அது -
பிள்ளையல்ல; பிறப்பெடுத்த
பேரறம்!' என்று -
கறவையும் பறவையும் -
கரம் கூப்பும்!

தடுக்கில் படுத்திருக்கும் -
தருமபுத்திரனை...
உத்கிருட்டமான நரனை;
உதிட்டிரனை...
ஒருத்தி -
உதரத்தில் உதித்த -
சூரியனை; உயர் -
ஆரியனை...
அறவான்களின் -
ஆதர்ச புருஷனை; நாளை -
அத்தினபுரியை -
ஆளவல்ல அரசனை...
சுதலைச்
சொற்களாடும் -
கற்கண்டை; உயிர்
மூச்சிழுக்கும் -
பூச்செண்டை.....

ஈரைந்து மாதங்கள்
இன்னமும் நிறையாத -
கீரைத் தண்டை; மானிட
சாதியின் மேன்மையைச்
சாற்ற வந்த - சம
நீதியின் நிகண்டை...

ரிஷிகளும் -
ரிஷிபத்தினிகளும் -
'அறத்தின் சேய்!' என்று -
அள்ளியெடுத்துக் கொஞ்சினர்;
அங்ஙனம் கொஞ்சுவதில் -
அன்னை குந்தியையும் -
அத்தன் பாண்டுவையும் -
அவர்கள் மிஞ்சினர்!

ஆவின் பால்;
ஆட்டின் பால்;
புடவைத்
தலைப்பால் முகம் மறைத்துத்
தாய் கொடுக்கும் -
தலைப்பால் எனப்படும் -
முலைப்பால்...

ஆக -
அனைத்தும் பருகி -
அன்றாடம் வளர்ந்தது...

காலனின் -
காமத்துப்பால் -
ஆக்கியளித்த -
அறத்துப் பால்!

'ஒன்று கிடைத்தால் போதும்!' -
என்று உருகும் -
எவர் மனமும் -

ஒன்றுமே கிட்டாத பட்சத்தில்;
அதுவே...
ஒன்று கிடைத்ததும் – 'இன்னும்
ஒன்று கிடைத்தால் நலம்!' –
என்று மறுகும் –
ஏக்கத்தின் உச்சத்தில்!

இது –
வையத்தார் இயல்பு;
வேறென்ன சொல்ல..?
இதற்குப் பாண்டுவும் –
விதிவிலக் கல்ல!

'எள்ளை இறைக்க – ஒரு
பிள்ளை இல்லையே!' என்று –
சந்ததிக் கவலையில் –
சந்ததம் இறந்தான்; இப்போது –
தருமன் பிறந்ததும் – 'இந்த
ஒருவன் போதாது!' என்று –
மந்திரம் ஓத – மீண்டும்
குந்தியை இரந்தான்!

'என்
இனிய குந்தியே!
இத்தரை மீது –
இசையுடன் வாழும் –
உத்தமி எவளும் –
உனக்குப் பிந்தியே!
கொழுநன் குறித்தால் – நீ
கூவத்தில் குதிப்பாய்;
கேள்வனின் வாக்கை – எழுதாக்
கிளவியாய் மதிப்பாய்!
வாழ்விலும் –
தாழ்விலும் – நீ
ஊழ்வினை போல் – என்
உடன் வருபவள்;
என்னுயிர்க்குப் பிணையாய் –
எமன் – வேறோர்
இன்னுயிர் கேட்டால் – நீ
உன்னுயிரை என்பொருட்டு –
உடன் தருபவள்!

எனைக்
கூற்று கொண்டுபோனால் – மதக்
கூற்றுப்படி கருமம் புரிய...
கூற்றிடமே ஒரு மகனை – நீ
கூற்றின் அம்சமாய்ப் பெற்றாய்;
'கூற்றுக்கே நீதான்
நற்றாய்!' – எனும்
கூற்றால் கீர்த்திகள்
உற்றாய் – இந்தக்
குவலயம் முற்றாய்!

வாஞ்சை மொழியே! – என்
வலது விழியே! – ஓர்
அரசைக் காப்பதற்கு –
அறம் வேண்டும்; அதற்கு –
அனுசரணையாக – போர்த்
திறம் வேண்டும்!
நல்லவளே! – என்
நாயகியே! – எனக்கு நீ
நலம் பொருந்திய மகனை –
நல்கியது போல் – ஒரு
பலம் பொருந்திய மகனை –
பெற்றுத் தருக! வாயு –
பகவானைப் பிரார்த்தித்து –
பிள்ளையைப் பெறுக!'

இங்ஙனம்...
பாண்டு வேண்ட – குந்தியின்
பச்சாத்தாபத்தைத் தூண்ட...
மாருதத்தை அழைத்தாள் –
மந்திரத்தைச் சொல்லி; யாதவர் –
மரபினில் வந்துதித்த –
மாணிக்க வல்லி!

காற்றுக்கான பிரார்த்தனை –
காற்றுவாக்கில் –

ககனத்திற்குச் சென்றது;
கால் வந்து -
குந்தியின் முன்னே -
கால்கொண்டு நின்றது!

வேண்டினாள் - தான்
விரும்பிய வரத்தை;
காலின் காலடியில் -
கவிழ்த்தாள் சிரத்தை!

அவளை -
அன்பொடு -
ஆதுரத் தொடு...
தொட்டது காற்று; அடி -
வயிறெனும் - ஊன்
வயலில் - மெல்ல
நட்டது நாற்று!
காற்று நட்ட -
நாற்று...
பீமனாக விளைந்தது; பாண்டு -
பட்ட கவலையைக் களைந்தது!

மாதாவின் -
மடியிலிருந்து -
மாருதத்தின் மைந்தன் -
மண்ணில் விழுந்ததும்...

பூமி அதிர்ந்தது;
ஆலயந்தோறும் -
அமர்ந்திருக்கும் -
சாமி அதிர்ந்தது;
சாமியின் -
வலக்கரம் -
வாங்கி நிற்கும் -
நேமி அதிர்ந்தது!

'பிறந்திருப்பது -
புயலா? - சிறு
பயலா?' எனப்
பட்டிமன்றம் நடத்தினர்...
பாண்டுவின் -
பர்ணசாலையை -
சுற்றியிருக்கும்
சாதுக்களும் -
சாதுக்களோடு -
சம்சாரம் நடத்தும் -
மாதுக்களும்!

பீமன் பிறந்த -
பத்தாம் நாளில்...
இடுப்பில் பிள்ளையை -
எடுத்துக் கொண்டு -
குளிக்கப் போனாள் -
குந்தி; அவள் -
குளித்து முடித்துக்
குடிலுக்குத் திரும்புகையில் -

புலியொன்று நின்றது - அவள்
பார்வைக்கு முந்தி!

அரண்டாள்;
மிரண்டாள்;
வெருட்சியில் உள்நா -
வறண்டாள்!
புலி துரத்த...
புலியைவிட -
கனவேகமாக -
கிலி துரத்த...
குந்தி ஓடினாள் -
குன்றுகள் சூழ்ந்த -
குறுக்குப் பாதையில் -
குருட்டாம் போக்கில்; அவள் -
ஒக்கலில் 'சிக்'கென -
ஒட்டிய குழந்தை -
'பொக்'கென விழுந்தது -
பள்ளத் தாக்கில்!

'அய்யோ!' என்று -

அலறினாள் குந்தி; உடலில் –
உள்ள பலமெலாம் –
ஒன்றாகச் சிந்தி!

அந்த –
ஓலம் கேட்டு – பாண்டு
ஓடோடி வந்தான்; முத்தலைச்
சூலம் போன்ற – ஒரு
சுடுசரம் தொடுத்து – புலியைக்
காலன் வசம் தந்தான்!
பின்...
பிள்ளையை அள்ள –
பள்ளம் நோக்கிப்
பறந்து சென்றான்; தன்னை
மறந்து சென்றான்!

பிழைத்துக் கிடந்தது –
பிள்ளை; சுக்குநூறாய் –
பொடித்துக் கிடந்தது –
பாறை!
சூறைக்கு –
சனித்த பிள்ளை –
பாறைக்கு –
பயப்படுமா..?

பீமனின் – உடற்
பொலிவும் வலிவும் கண்டு...
பாண்டுவும் குந்தியும் –
பயந்தனர்; பின்னர் –
பயம் அடங்கி –
வியந்தனர்!

பிறக்கும்போதே –
பீமனின் தேகம் – மிகமிகப்
பருமன்; அந்தப்
பருமனில் – கால்வாசிப்
பங்குகூட இல்லாதவன் –
தருமன்!

முன்னவன் –
மென்மையும்...
பின்னவன் –
வன்மையும்...
பாண்டுவை – நாளும்
பூரிக்கச் செய்தன; அந்தப்
புளகத்தில் விழிகள் – ஆனந்தப்
புனலைப் பெய்தன!

பிள்ளைகள் இருவரும் –
தேவதைகள் தந்த –
பிரசாதங்கள்; உடன் வந்த –
பெண்டிர் இருவரும் –
தேவருலகத்து –
பாரிசாதங்கள்!

இந்த –
செல்வங்களை –
சேதப்படாமல் –
காக்க வேண்டாமா..? அதற்குத்
தோதாக வரிவில்லை –
தடக்கையில் –
தூக்க வேண்டாமா..?
இப்படி எண்ணித்தான் –
பாண்டு மீண்டும் –
ஏந்தினான் கை வில்லை;
எனினும் – அவன்
ஏற்றிருந்த துறவறத்தில் –
எள்ளளவும் தொய்வில்லை!

அது –
பின்னொரு நாளில் –
தொய்ந்தது; அதனால் –
பாண்டவர் குலமே –
நைந்தது!

# ஆயிரம் கண்ணன் அருளிய பிள்ளை!

ஆசிரமத்தின் –
ஆசார வாசலுக்கு வெளியே...
மண்தரையை – மையிருட்டால்
மெழுகினாற்போல் –
நீள நெடுக –
நிழல்பரப்பி நின்ற –
ஒரு
தூங்கு மூஞ்சியின் –
தாழ்வான கொப்பில் –
தொங்கிக் கொண்டிருந்தன...
தூளிகள் பறக்கும் –
திறந்த வெளியில் –
தூளிகள் எனப்படும் –
துணித் தொட்டில்கள்;

அவைதான் –
அன்னை குந்தியைப் பொருத்தவரை –
மாளிகை மாடத்து –
மணித் தொட்டில்கள்!
அவற்றில் –
ஆடிக்கிடந்தன; அன்னையின்
ஆராட்டில் – அரும்புவிழிகள்
மூடிக்கிடந்தன...
கூற்றுக்குப் பிறந்த –
குழந்தையும்;
காற்றுக்குப் பிறந்த –
குழந்தையும்!

வனத்தில் –
பீமசேனன் என்னும் –
பேராண்மை பிறந்த – அதே
தினத்தில்... அத்தின –
புரத்தில் –
துரியோதனன் என்னும் –
துராசை பிறந்தது – அந்தப்
புரத்தில்!

நன்றும் தீதும் – ஒரே
நாளில் தோன்றி –
ஒன்றையொன்று
பொன்றும் வகையில் – பின்னர்
போர்க்களம் புகுமென...
விதி –
விதித்ததிந்த
விதி! – இதையெண்ணி
விதிர்விதிர்த்தது –
விழியிலான் ஆளும் –
பதி!

அந்த விதிர்ப்பில்தான் –
அது வெடித்தது –
பாளம் பாளமாக; பெருந்
தருக்கள் சாய்ந்து –
தெருக்கள் ஆயின –
கூளம் கூளமாக!

சுயோதனன் –
சனித்ததில் –
சந்தோஷித்தது கலி; ஆனால் –
சகத்தைக் கவ்வியது கிலி!

'பங்காளிகளை –
பகடைகளாக்கி –

கவறாடப் போகிறது -
காலம்!' - என்பதைக்
காட்டியது - கண்விழித்ததும்
காந்தாரியின் பிள்ளை -
கழுதைபோல் கத்திய -
ஓலம்!

மாற்றலரை -
மர்த்தனம் செய்யப்பிறந்த
மகவு - மண்ணில் விழுந்ததும் -
கர்த்தபம்போல் கத்தியதை...
ஒரு -
துக்கிரி காட்டும்
துர்க்குறி யென்று -
துக்கிக்கவில்லை -
தாய் காந்தாரி; அந்தக்
கத்தல்தான் - சசி
குலத்தின் சுபிட்சத்தை -
சுட்டுகின்ற சகுனமென்று -
சிலாகித்தாள் கண்மூடி!

அன்றாடம் -
அன்னத் தூவியில் இட்டு -
ஆசை ஆசையாய் -
ஆராட்டவும்...
அம்புலி காட்டி -
அம்புலி குலத்து -
அம்புலிகளுக்கு -
அன்ன மூட்டவும்...
அத்தின புரத்து -
அரண்மனையில் -
ஆணி முத்தாலும் -
ஆணிப் பொன்னாலும்...
ஒரு நூறு தொட்டில்கள்;
ஒரு நூறு வட்டில்கள்...
தச்சர்களைக் கொண்டு -
தயார் செய்தாள்; அவற்றைத்
தானே முன்னின்று - அந்தத்
தாயார் செய்தாள்!

பாலும் -
பழமும் உண்டு -
படுத்துக் கிடந்தன...
பின்னாளில் - தமது
பங்காளிகளை நூறும் - அந்தப்
பிள்ளைகள் நூறும்!

அரண்மனை நிலவரம் -
அங்ஙனம் இருக்கையில்...

'சந்திரன் வம்சத்தில் -
சந்ததி யொன்று - அந்த
இந்திரன் அம்சத்தில் -
இருப்பது நன்று!'
என -
எண்ணினான் -
இரு -
தனயர்க்கு ஏற்கெனவேயே -
தாதையான பாண்டு; உடனே -
இந்திரன் குறித்து -
மந்திரம் ஓத -
குந்தியை வேண்டினான் -
இன்னொரு
குழந்தை ஆசை மூண்டு!

கொண்டான் சொல்லை -
கருத்தில்
கொண்டாள் குந்தி; கணவனின்
-
கருத்திற்கு எப்போதும் -
குறுக்கே நிற்காத நந்தி!

வெள்ளை வண்ணனின் -
விருப்பத்திற் கேற்ப -
வெள்ளை வாரணனை -
வரும்படி வேண்டினாள்...
முனிவன் உபதேசித்த -
மந்திரம் ஓதி; உடனே -
புரந்தரன் செவிகளுக்குப்
போனது சேதி!

தவளத்
தந்தியில் ஏறி – தரைக்கு
இந்திரன் வந்தான்; கோதை
குந்தியைத் தழுவி – ஒரு
குழந்தையைத் தந்தான்!

அந்த
ஆண்மகவுதான் –
அர்ச்சுனன்;
பங்குனியில் பிறந்த –
பல்குனன்!

ஆயிரம் கண்ணன் –
அருளிய பிள்ளை –
கோமளம் சொன்னால் –
கொள்ளையோ கொள்ளை!
'வாழிய!' என்று –
வானுலகு –



வாழ்த்தை வழங்கியது;
தேவகணம் –
துந்துபி முழங்கியது!
ககனத்திலிருந்து –
கொட்டியது பூமாரி; அதில்
குளித்தது குந்தியின் –
குடல்சுரந்த தேன்வாரி!

வாசவன் வழங்கிய
வாரிசின் வனப்பு –
மீசுரம் என்றொரு
பாசுரம் படித்து...
அதன்
முளரிப்பூங் கன்னத்தில் –
முத்தம் வைத்தது –
மந்த மாருதம்; வெற்பின் –
முகடு நீங்கி – பிள்ளை
முகம் பார்க்க வேண்டி –
வந்த மாருதம்!

சதசிருங்க மலைவாழும் –
சகல ரிஷிகளும் வந்து –
அர்ச்சுனனைப் பார்த்தனர்;
ஆசீர்வாதங்களை வார்த்தனர்!

பின்பு – ஒருநாள்
பாண்டுவின் வேண்டுகோளை
ஏற்று...

மாத்திரிக்கும் – அந்த
மந்திரத்தை – குந்தி
உபதேசித்தாள்;
அவளும் – ஓர்
அன்னையாக – உடன்
உபகரித்தாள்!

'இந்தப்
பெண்ணொரு மலடு! எனப்
பேசுமோ உலகு?' – என்று
அஞ்சியிருந்த மாத்திரி –

அச்சம் நீங்கினாள்;
மூத்தாள் குந்தி - மானம்
காத்தாள் என்று - அவள்
மலரடியைத் தன் -
மனத்தில் தாங்கினாள்!

இனியதோர் -
இளவேனிற் காலத்தில்...

அஸ்வினி தேவர்களை - தன்
அகத்தில் வைத்து ஆராதித்து -
அழைத்தாள் மாத்திரி - ஒருநாள்
அர்த்த ராத்திரி!

அஸ்வினி தேவர்கள் -
அக்கணமே வந்தனர்; மாத்திரியை
-
ஆரத் தழுவி - அவளுக்கு
ஆளுக்கொரு மகவைத் தந்தனர்!

இருவர் வழங்கிய - அந்த
இருவர்தான்...
நகுலன்!
சகாதேவன்!

ஆக...
மைந்தும் மாண்பும் வாய்ந்த -
ஐந்தும்...
பாண்டுவையும் - அவன்
பத்தினி இருவரையும் -
உவகை உவரியில்
விழுத்தின; நாளும் -
ஆனந்த உணர்வில்
அழுத்தின!

வனத்தில் -
'சுகன்!' என்றொரு - தெய்வ
மகன் இருந்தான்; அவனது -
வித்தைக்கும் - தவ
வாழ்க்கைக்கும் - ஓர்
உவமை சொல்ல - இந்த
வையத்தில் -
ஒருவனும் பொருந்தான்!

காளைப்
பருவம் எய்திய -
பஞ்ச பாண்டவர்கள்...
அவனிடம் -
அனைத்து வித்தைகளையும் -
கைதொழுது கற்றனர்; யாவும் -
கைவரப் பெற்றனர்!

ஈட்டியெறியக் கற்றான் -
எமனின் பிள்ளை;
கதை சுழற்றக் கற்றான் -
காற்றின் கன்று;
கணைகள் -
எய்திடக் கற்றான் -
இந்திரன் எச்சம்;
கத்தியும் கேடயமும் -
கையாளக் கற்றனர் -
அஸ்வினி தேவர்களின் -
அடையாளங்கள்!

தரும -
புத்திரனுக்கு -
பதினாறு வயது -
நிரம்பியபோது - பாண்டுவிற்கு
நிகழ்ந்ததொரு தீது!

வந்தது -
வசந்தகாலம்;
வனமெங்கும் - வேனில்
வரைந்த கோலம்!

தடாகங்கள் -
தாமரைக் கரங்கள் கூப்பி -
சூரிய நமஸ்காரம் -
செய்தன; சூரியன் தன் -
நெருப்புக் கிரணங்களுக்கு -
நிலா முலாம்பூசி -
நிலம் அனுப்ப - அவை

வாச வனசங்களின்
விழிகளில் –
நேச வலைகளை –
நெய்தன!

மாதவிக் கொடிகளிலும் –
மந்தாரைச் செடிகளிலும் –
புஷ்பவதியான
புஷ்பங்கள் – தங்கள்
மடல்களில் – காதல்
மடல்களை எழுதி...
பூங்காற்று வந்து –
படிப்பதற்காக –
காத்துக்கிடந்தன; விழிகள் –
பூத்துக் கிடந்தன!

குதுகலத்தில் இருந்த –
கோகிலங்கள் – கதன
குதுகலத்தைப் பாடி....
காடெங்கும் –
கானமழை பெய்தன;
கல்லையும் புல்லையும் –
கிறங்கச் செய்தன!

'மலைமுடி – அவிழ்த்து
மெல்ல உலர்த்தும் – நரைத்த
தலைமுடி!' எனும்படி – நுரைத்த
அருவி வழிந்தது –
தரையிலே; அதில் –
தீர்த்த மாடிவிட்டு – தலையைத்
துவட்டிக்கொண்டு நின்றன –
கரிக்குருவிகள் –
கரையிலே!

ஆரண்ய மெங்கும் –
அநங்கனின் ஆட்சி;
சிற்றின்ப உணர்வை –
சீண்டுவது போலவே –
சுற்றுப் புறமெலாம் – ஒரு
சுந்தரக் காட்சி!

இங்ஙனம் –
வனமெங்கும் – ஒரு
வசந்தோற்சவம் நடக்க...
விலங்குகளும் – அதன்
வசியத்தில் – இரை
உண்ணாது கிடக்க...

மாத்திரி – ஒரு
மாலைப் பொழுதில் –
மெல்லிய உடுக்கையொடு –
பர்ணசாலைக்குப்
பக்கம் உள்ள –
புல்வெளியில் உலாவ...
அந்த நேரத்தில் – அங்கிருந்த
அசோக மரத்தில் – இரண்டு
அன்றில்கள் குலாவ...

பாண்டு – மன்மத
பாணம்பட்டுத் துள்ளினான்;
பதினெட் டாண்டுகாலம் –
பாதுகாத்து வந்த –
புலனடக்கத்தை – 'பொக்'கெனப்
புறம் தள்ளினான்!
மாத்திரி தடுத்தாள்;
மன்றாடி மன்றாடி – பின்
மறுதலிக்க மாட்டாது –
தடுப்பதை விடுத்தாள்!

பாண்டு –
புடவைகட்டிய –
பூவைத் தழுவினான்;
பூவைத் தழுவிப்
புணர்ந்தத னாலே –
சாவைத் தழுவினான்!

சாபத்தால் வந்த –
சாபம் பலித்தது;

ககனத்தில் நின்று பார்த்த –
கிந்தமன் ஆன்மாவின் –
கண்மலர் சொலித்தது!

# முதல் வனவாசம் முடிந்தது!

பஞ்ச -
பாண்டவர்க்கு...
வேனில் - ஒரு
வேம்பானது; அந்த -
வேனிலில்தான் விளைந்தது -
ஒரு
தீம்பானது!

வாழ்க்கைப்பட்ட - இரு
வஞ்சியர்க்கும் - அந்த
வசந்தகாலம் - ஒரு



கசந்தகாலம்!

அந்தக்
காலமானது - ஆல
காலமானது; அதன் -
கவர்ச்சியில்தான் - பாண்டு
காலமானது!

பாவம்!
பாண்டுவைப் பொருத்தவரை...
மதவேளே -
மறலி;
பூவாளியே -
பாசம்;

தேன்கரும்பே -
திரிசூலம்;
இளங்காலே -
எருமை!

உலக வழக்கில் -
ஒரு -
கணவன் மனைவி -
கலவியில் நேர்வது...
ஒரு
பிறப்பின் -
பிறப்பு;
பாண்டு மாத்திரி -
புணர்வில் நேர்ந்தது...
ஓர்
இறப்பின் -
பிறப்பு!

குற்ற உணர்வில் - நிலை
குலைந்து போனாள்...

சல்லியன்
சகோதரி -
மாத்திரி; கைதவறி -
மண்விழுந்த மண்பாண்டம்
மாதிரி!

தனக்குத் தானே -
பேசிக் கொண்டாள்;
தன்னைத்தானே -
ஏசிக் கொண்டாள்!
'ஊன் கலந்து - என்பால்
உறவாட வந்தவனை - இதழில்
தேன் கலந்து என்னிடம் -
தின்னென்று தந்தவனை -
நான் கலந்து - சுகம்
நல்கியதால்தானே - அவன்
வான் கலந்து - உடனே
வைகுந்தம் போனான்!
நாயகனுக்கு -
நமனாய் வாய்த்தது -
நானா? - இல்லை
முனிவனாய் மாறி -
முன்னம் இறந்த -
மானா?

கூடல் -
கூடாது கூடாது என்று -
கோடிமுறை தடுத்தேனே;
கேட்டானா பாவி? -'தடுக்கக்
கூடாது; உனை நான் -
கூடாது விடமாட்டேன்!'
என்று -
கூடிக்கலந்து - எமனிடம்
கொடுத்தானே ஆவி!'
என்று - மாத்திரி
கூவினாள்; துக்கம் -
குரல்வளையை அடைக்கக்
கேவினாள்!

'மாற்றவளான -
மாத்திரியின் பின்னால் - தன்
பிரியமுள்ள புருஷன் -
பாண்டு போனான்; அவளோடு -
மைதுனம் பழகி - அவன்
மாண்டு போனான்!'

என்று -
தகவல் கிடைத்ததும் - குந்தி
தலைவிரி கோலமாய் ஓடினாள்;

புருஷனின் -
பிரேதத்தின் மீது விழுந்து -
புரண்டு புரண்டு -
பிலாக்கணம் பாடினாள்; விழிப்
புனல்மிதந்து - ஒரு
படகுபோல் ஆடினாள்!
கொங்கைகள் மீதும் -
கும்பியின் மீதும் - தன்
செங்கைகள் கொண்டு -
அடித்துக் கொண்டாள்; உதிரம்
-
சிதறும் அளவு - உதடுகளைக்
கடித்துக் கொண்டாள்!

அழுது அழுது -
அடிநா உலர்ந்து - சோகத்தை
விழுங்கவும் முடியாமல் -
விளம்பவும் முடியாமல் - ஒரு
மூங்கை யானாள்; பின்னர் -
மூர்ச்சை யானாள்!

மனம் -
கந்தையாய் நைந்தும் -
கட்டுகள் தொய்ந்தும் -
கலங்கின பாண்டுவின் -
கன்றுகள் ஐந்தும்!

'எத்தனை உறவுகள் -
இருப்பினும் என்ன?
அத்தனை உறவும் - ஓர்
அத்தனை நிகர்க்குமோ?'
என -
மலங்கமலங்க விழித்து -
மறுகின பிள்ளைகள்;
வெள்ளைத்
தோல்கொண்டோன்
தோள்கொண்டு -
தாங்கிய கிள்ளைகள்!

சதசிருங்க மலையில் -
சதுர் வேதிகளாய் வாழும்...

மகரிஷிகளும்;
மடிசஞ்சிகளும்;
யதிகளும்;
யோகிகளும்...

பாண்டுவின் -
பத்தினி பிள்ளைகளுக்குத்
தத்துவார்த்தங்களைச் சொல்லித்
தேற்றினர்; அவர்கள் -

உத்தரக்கிரியையை -
உசிதமாய்ச் செய்ய - தம்மால்
ஆன உதவிகளை -
ஆற்றினர்!

காமத்தில் சேர்ந்து - அதனால்
ஈமத்தில் சேர்ந்த...
தாதைக்குத் தீவைத்தான் -
தருமபுத்திரன்;
தலைச்சனாய்ப் பிறந்துவிட்ட -
கருமபுத்திரன்!

'நகுலன்!
சகாதேவன்!'
இந்த -
நன்மக்களை -
அஸ்வினி தேவர்களின் -
ஆலிங்கனத்தால் ஈன்ற -
தன் மக்களை...

தழுவிக் கொண்டு - மாத்திரி
தேம்பலானாள்; பின் -
சிதையில் புகுந்து - தானும்
சாம்ப லானாள்!

ஓர்
ஆயன் இல்லையென்று -
ஆயின்...
அலைமோதும் -
ஆநிரை போல்...

கோவலர் குலத்து
குணவதி -
குந்திதேவி...

கண்ணீரும் -
கம்பலையுமாக -
கனத்த மனத்தோடும் - தன்
கன்றுகள் இனத்தோடும்...
தவப்பள்ளி -
திரும்பினாள்;
திரும்பிய திசையெலாம் - தன்
தலைவன் திருவுருவம் -
தென்பட...
தென்பட...
விம்மலும் விசும்பலுமாய் -
விழிநீர் அரும்பினாள்!

அகவை பதினாறு -
ஆன யுதிஷ்டிரன்...

அம்மாவின் கண்ணீரை -
ஆட்காட்டி விரலால் -
அழித்தான்; அதற்குமேல் -
வேறெதும் செய்ய -
விளங்காது - வெறுமனே
விழித்தான்!

பீமனும் - அவன்
பின்னவரும்...

'பிதா போனபின் -
பிதா வாகிறான் -
பின்னோனுக்கு -
முன்னோன்!' எனும் -
மறைமொழிக் கேற்ப
மரியாதை நிமித்தம் -
மௌனமாய் நின்றனர்;
மேலெழுந்த -
மன உளைச்சலை - அந்த
மௌனத்தாலேயே கொன்றனர்!

பவித்திரமான - அந்த
பர்ண சாலையில்...

ஒரு
கேள்வியின்றிக்
கிடந்தது - பாண்டு
வேள்வி நடத்திய -
வேதிகை!

புனையும்
பாதங்களின்றி - புழுதி
படிந்து கிடந்தன - பல
காதங்கள் நடந்த -
பாதுகை!

தண்ணீர் ததும்பும்
கமண்டலம் -
கண்ணீர் ததும்பக்
கிடந்தது!

அட்டணைக்கால் போட்டு -
அநுதினமும்...

பிராதக் காலத்தில் -
பிராணாயாமம் செய்பவன் -
பிராணனை யாமத்தில்
விட்டது -
புரியாமலே...

ஊன்தோல் கொண்ட -
ஒழுக்கத்தின் வரவெண்ணி -
மான்தோல் கிடந்தது -
மண்தரையில் மல்லாந்து!

எடுத்து -

உடுத்துபவனின்...
ஆவி பறந்தது
அறியாமலே – பாவம்!
காவி பறந்தது
கயிற்றுக் கொடியில்!

சேமித்து வைத்த
சமித்துகளும்; பவித்திரமாய் –
திரித்து வைத்த
தருப்பைகளும்...

'ஏன் –
இன்னமும் –
அக்கினிகோத்திரம் –
ஆரம்பிக்கவில்லை?'
என்று –
ஒன்றையொன்று –
வினவின;
ஒன்றும் புரியாமல் –
முனகின!
வளைப்பாரின்றி
வில்லும் – அதில்
பொருத்துவா ரின்றி
பகழியும்...
வாடிக் கிடந்தன – ஓர்
ஓரமாய்; தங்களை –
ஏந்தும் ஏந்தலை –
எதிர்நோக்கி – நெடு
நேரமாய்!

இதற்குமேல் –
எதையும் பார்க்க – குந்தியால்
இயலவில்லை;
மீறிப் பார்க்கவும் – அவள்
முயலவில்லை!

பர்த்தா இல்லாத
பன்ன சாலை – அவளைப்
பிடுங்கித் தின்றது; அவளது –
நீளமான கண் – இமைப்பை
நிறுத்திவைத்து – எங்கேயோ
நிலைக்குத்தி நின்றது!

'இனி –
எதிர்கோட இருக்கும் –
எதிர்காலம்...
இலை –
உதிர்காலமோ? – இல்லை
புதிர்காலமோ?' என –
குந்திதேவி – மனத்துள்
குமைந்தாள்; ஏதும்
சலனமற்ற சிலாரூபமாய்ச்
சமைந்தாள்!

காட்டுத் தீயில் –
மாட்டிய –
கறவை யொன்று –
கன்றுக ளோடு...
தப்புவழி யறியாது –
தம்பித்து நிற்குமே –
அப்படி நின்றாள்...

தப்புவழி யறியாத
குந்தி; உயர் –
சற்குணங்களின் –
சந்தி!

பாண்டுவின் –
புரோகிதரும் – முனி
புங்கவரும் –
புருஷோத்தமருமான...

காசியபர் – ஒரு
காசில் லாதவர்; மனத்
தோட்டத்தில் – ஒரு
தூசில் லாதவர்!

சதசிருங்க மலையே –
சாட்சி சொல்லும்...

அவரது –

அகமும் புறமும் -
அப்பழுக் கற்றது என்று;
அநேக வித்தியார்த்திகள் -
அத்தியயனம் செய்ததுண்டு -
அவர் நிழலில் நின்று!

பாண்டுவின் இறப்பை - தனது
பந்துவின் இறப்பாய் -
நினைந்தவர்;
பாண்டுவைப் பற்றிய - ஒரு
சரம சுலோகத்தைப்
புனைந்தவர்!

அவர் - தன்னுடன்
அநேக ரிஷிகளை -
அழைத்துக் கொண்டு...
குந்திதேவியைக்
காண வந்தார்; அவளது
வியாகுலத்திற்கு - ஒரு
விடிவு தந்தார்!

முனிவரின் முயற்சியால் -
விடிந்தது; குந்தியின்
முதல் வனவாசம் -
முடிந்தது!

# அத்தினபுரத்து அவலங்கள்

வெள்ளை வண்ணன் -
வெண்ணீ றானதால்...
வெள்ளை தரித்தது;
வெண்ணீ றணிந்தது -
அந்திநிலா வமிசத்தில் -
ஆளனை அடைந்த -
குந்திநிலா!

அன்று -
வெள்ளிநிலா முற்றத்தில் -
வெளிச்சந் துப்பிய -
பாண்டுவின்
பள்ளி நிலா...
இன்று -
பகல் நிலாவாய்;
பகல் நிலாவின் -
நகல் நிலாவாய்...
பிரகாசம் இழந்து -
பர்ணசாலைக்குள் - ஐந்து
பிள்ளைகளோடு நின்று -
பிரலாபிப்பது கண்டு...

'இது -
கரும வினை!' என்று -
கணித்தனர் - நாளும்
தரும வினை புரியும்
தவசிகள்;
காசியபர் -
கூட வந்த -
துவராடை கட்டிய -
துளசிகள்!

காசியபர் -
பேசினார்;
கும்மிருட்டில் குமைந்த -
குந்தியின் மேல் -
விடியல் வார்த்தைகளை -
வீசினார்!

'பாண்டுவின் - தர்ம
பத்தினியே! நால்வகைப்
பெண்டிரில் - தலையாய
பத்மினியே!
இன்ன திங்களில் -

இன்ன திதியில் –
இன்ன பட்சத்தில் –
இன்ன பொழுதில்...
மன்னன் பாண்டுவின்
மரணம் என்பது –
முன்னமே அவனது –
முன்வினை மொழிந்தது!

மற்றப்படி...
மான் தந்த சாபம்;
மாத்திரியின் சல்லாபம்;
இத்தியாதி...
இத்தியாதி...

அந்த
முன்வினை மொழிந்த
வாக்கு –
மெய்ப்பட – ஒரு
சாக்கு!

கைவளை சுமந்த –
பெய்வளை ஒன்று –
வைதவியம் எய்தி –
வனத்தில் நின்று –
வாரிசுகள் ஐந்தோடு –
வாடவேண்டும் என்று...
விதியிருப்பின் – அந்த
விதியை – எவரால்
விலக்க வொண்ணும்..?
சூழ் உண்ணும் –
சூழ்நிலையை – குபேரனுக்கும்
ஊழ் பண்ணும்!

மரணம் என்றொரு
முற்றுப்புள்ளி இல்லாது – ஒரு
ஜனன வாக்கியம் – இந்த
ஜகத்தினில் ஏது..?
இதுகுறித்து –
இனியும் நீ –
விசனித்தல் –
விவேக மாகாது!

ஆயர்குலத்து –
ஆயிழையே! – இடைச்
சேரியில் சனித்த –
சேயிழையே!
உங்கள் குலத்தார்க்கு –
உரியதான – ஓர்
உற்சவம் அல்லவா –
உறியடி! – அந்த
உறியடி உணர்த்தும் –
விடாமுயற்சியை ஓர்ந்து – இடை
மூளும் துயர்களை –
முறியடி!

'அழுகின்ற வாய்க்கும் – ஒரு
நாள்
ஆனந்தம் வாய்க்கும்!' – என்று நீ
அழுத்தமாக நம்பு; ஆணிப்பொன்
–
ஆகக்கூடும் செம்பு!

கண்ணீர்;
காயம்;
புண்ணீர்;
போராட்டம்...
இவை –
நான்கும் கண்டு –
அஞ்சும் நெஞ்சு – அது
செல்லும்
ஆறு அறியாது; அச்சம் விட்டு –
எழு! எதா சக்தி முயல்! –
வாழ்வு
எட்டும் அப்போது!

முயல் கறை இல்லாத –
முழுநிலா வமிசத்து –
மருமகளே! – குந்தி போஜனின்
திருமகளே!
இனியும் – நீ

இங்கிருந்தால்...
உனக்கும் –
உன் பிள்ளைகளுக்கும் – மனம்
கனக்கும்!

ஏனெனில்...
இந்த வனம் – பாண்டு
வெந்த வனம்! நீங்கள் –
இருக்க வேண்டிய –
இடம் – அத்தினபுரத்து
நந்தவனம்; அது உங்கள்
சொந்த வனம்!

ஆதலால்...
அரசர்க்கரசன் –
திருதராஷ்டிரன் –
திருமாளிகையில் –
உங்களை –
ஒப்படைப்பது –
எங்கள் கடன்;
வருகிறோம் நாங்களும் –
உங்கள் உடன்!'

குந்தியின் – சிந்தா
குலத்தைத் தவிர்க்க...
ஞான –
தேசிகராய்ப் பிறங்கும் –
காசியபர்...
இன்னணம் –
இனியதோர் –
அகலமான பிரசங்கத்தை –
ஆற்றினார்; அவளது –
வெருவெனும் வெப்பை –
விரிவுரை என்பதோர் –
ஆலவட்டத்தால் – மெல்ல
ஆற்றினார்!

காசியபர் சொல்லுக்கு –
கட்டுப்பட்டாள் குந்தி; வெண்
கலையை மருங்கில் –
கட்டியசெவ் வந்தி!

பிறகு...
மாண்டவர் அத்திகளை – இரு
மண்சட்டிகளில் நிரப்பினர் –
பாண்டவர்; அத்தின –
புரிக்கு அவர்களை –
அழைத்துப்
போயினர் மெய்த்தவம் –
பூண்டவர்!

அன்புசால் பாண்டுவின் –
அகால மரணம் கேட்டு –
அத்தினபுரமே அதிர்ந்தது;
பலபல மக்களின் –
பார்வையி லிருந்து – கண்ணீர்
'பொலபொல'வென உதிர்ந்தது!

ஊரெங்கும் –
ஒப்பாரி; சந்து –
பொந்தெங்கும் –
பிலாக்கணம்!

தம்பியின் சாவறிந்து –
தம்பித்தான் – பத்தாயிரம்
தும்பியின் வலிகொண்ட –
நம்பி! கண்ணீர் –
ஆற்றினில் ஆடிநின்ற –
அம்பி!

பிரியமுள்ள – தனது
பிதாவிற் காக – தானொரு
பிதா வாகாத – பெற்றெடுத்த
பிதாவிற்கு மிகவும் –
பிடித்த மகன்; பீஷ்மனெனும் –
பிதாமகன்!

அவன் –
மனம்கூட – பாண்டு
மரித்தது அறிந்து –
மௌனமாய் அழுதது;

கடுந்துயரம் -
கண்ணீர் ஏர்பிடித்து - அவன்
கன்னங்களை உழுதது!
விதுரன் மட்டும் - ஊழை
வெல்வது அரிது என்று -
நிச்சிந்தையாய் -
நின்றான்; என்றுமே -
ஒன்றோடும் - அவன்
ஒன்றான்!

அன்பு மகனும் -
அருமை மருமகளும் -
என்பு வடிவில் - தன்முன்
இருப்பது கண்டு...
அம்பாலிகை -
'அய்யோ! அய்யோ!' என்று -
அழுது புரண்டாள்; தன்
அணிமையில் நிற்கும் -
அனைவரையும் - ஓர்
அந்தகனாய் எண்ணி
மிரண்டாள்!

மூதாட்டி சத்தியவதி -
மூகம் போல் - ஒரு
மூலையில் இருந்தாள்; இரு -
மரணங்களின் அதிர்வில் -
மடக்கு நீர்கூட - அந்த
மாதரசி அருந்தாள்!

ஆக மொத்தம்...
அரண்மனை எங்கிலும் - ஓர்
அவலச் சுவை - அடையாய்
அப்பிக் கிடந்தது;
கனகமணி மாடத்தின் -
கிழக்கு மேற்கெல்லாம் - சோகம்
கப்பிக் கிடந்தது!

கங்கை ஆற்றில் - அத்தியைக்
கரைப்பதற்கு முன்...
வரிசிலை ஏந்தி -
வனம்சென்று மாண்ட -
குரிசிலை; அந்தக்
குரிசிலை விடாது -
கூடவே தீப்புகுந்த - காதல்
பரிசிலை...
வரிசை வரிசையாய்
ஊரார் வந்து - அவர்தம்
வரிசை பாடி - வாழ்த்தி
வணங்க...

அரச மரியாதையோடு -
அத்திக் கலசங்களை -
மாளிகையின் -
மைய மண்டபத்தில் -
வைத்திருக்க - ஊரே
மொய்த்திருக்க...

அக்கம்பக்கமெலாம் -
அலகின்றிப் பொங்கியது -
துக்க சாகரம்;
கண்ணில் மன்னவன் -
கண்ணில் தெரிந்தது -
கவலை நாடகம்!

வேதம் ஓதினர் -
வேதியர்; கலசங்களுக்கு
விசிறி வீசினர் -
தாதியர்!

தெளித்தனர் பன்னீர்;
தூவினர் பூக்கள்;
அளித்தனர் குங்குமம்;
அப்பினர் சந்தனம்;
ஏற்றினர் தீபம்;
எடுத்தனர் தூபம்;
போற்றினர் வாயால் -
புண்ணியர் நாமம்!

பின்னர் -
புறப்பட்டது ஊர்வலம் -

பல்லியம் முழங்க! ஊர் -
போற்றி கோஷம் வழங்க!

அத்தியின் மீது -
அத்தியை வைத்து -
அத்திநகர் வீதிவழி -
அந்தணர் எடுத்துச்
சென்றனர்; கங்கை -
ஆற்றங்கரை ஓரம்போய் -
நின்றனர்!

உத்தமன் - தரும
புத்திரன்...
அத்தன் அம்மை -
அத்தியை - கங்கை
ஆற்றில் கரைத்தான்;
அடுத்து...
எள்ளும் தண்ணீரும் -
எடுத்து இறைத்தான்!

மான் புகுந்த -
முனிவன் சாபத்தால் -
வான் புகுந்த -
வேந்தன் பாண்டு...
தனயன் புரிந்த -
தர்ப்பணத்தால் -
வினை யொழிந்து -
வைகுந்தம் புகுந்தான்;
ஒழிந்தது பிறப்பென்று -
உவகை மிகுந்தான்!

வியாகுலத்தில் -
வீற்றிருந்த சத்தியவதிமுன் -
வியாசன் தோன்றினான்;
தனது -
தாயாரின் நெஞ்சக் கழனியில் -
சில
தத்துவ விதைகளை ஊன்றினான்

'என்

அர்ச்சனைக்கும் -
ஆராதனைக்கும் உரிய -
அன்னையே!
இனி -
அறம் நீங்குவதால் - புவிக்கு
அமைதி வாய்க்காது;
மறம் ஓங்குவதால் - புண்ணிய
மரம் காய்க்காது!
அது -
பட்டுப் போகும்; நிலை -
கெட்டுப் போகும்;
வாய்மையும் - நல்ல
தூய்மையும் - இந்த
வையத்தை - அறவே
விட்டுப் போகும்!
வருத்தத்திற்குரிய - இத்தகு
வருங் காலம் - என்
விழிகளில் படர்கிறது; நெஞ்சில்
விசனம் அடர்கிறது!
உன் -
கொள்ளுப் பேரர்களாகிய -
கௌரவர்கள் நூறு பேரும் -
உள்ளும் புறமும் -
ஒட்டாது நிற்பார்கள்; நல்ல -
ஒழுக்கத்தை உதறிவிட்டு -
ஊனங்களைக் கற்பார்கள்!

குலம் அழியும்;
குருதி வழியும்;
பொன்மாரி பொழிந்த மண்ணில் -
கன்மாரி பொழியும்!

இங்கு நீ -
இருத்தல் தகாது;
இவற்றைக் கண்டு - உன்
இதயம் தாங்காது!
இரு -
மருமகள்களையும் -
அழைத்துக் கொண்டு -

அடவி செல்; அங்கு -
ஆன்ம விசாரத்தில் ஈடுபட்டு -
அமைதி கொள்!'

வியாசன் - இங்ஙனம்
விழிகளைத் திறந்ததும்...

மாதா சத்தியவதியும் -
மருமகள்கள் இருவரும் -
காடு சென்றனர்; சில -
காலம் சென்று - திரு
நாடு சென்றனர்!

---

# கிருஷ்ணாவதாரம்

**அ**து -
ஆனந்த கீதம்
ஆயர் பாடி -
ஆனந்திக்கும்
ஆயர்பாடி!

அது -
கண்ணன் ஊர்; கங்குல் -
வண்ணன் ஊர்!

அங்கிருக்கிறான் -
அரி யாதவனாகி;
அங்கிருப்பவர் -
அறியாதவனாகி!
ஓர்
ஆவணித் திங்களில் -
அஷ்டமித் திதியில் -
அவதரித்தது -
அஷ்டாட்சரம்!

ஆம்!
ஆதிமூலம் -
ஆகாயம் விட்டு -
அம்புவி வந்தது - ஓர்
அன்னை மூலம்!

பாலிலேயே -
படுத்துக் கிடந்தவன்தான் -
பால்கறக்கும் குடியில் -
பால் குடிக்கப் பிறந்தான்!

மறைவாய் புகுந்து -
மறைவாய் இருந்தவன்தான் -
சிறைவாய் புகுந்தான்;
சிறைவாய் புகுந்து -
தேவகியின் - கரு
அறைவாய் புகுந்தான்!

தேனார் மொழியாள் -
திருமகள் மணாளன்தான் -

கோனார் குலத்துக்
குழவியாகி - அக்குலத்தார்க்கு
வானார் புகழை - வாரி
வழங்கினான்!

ஒரு
நூல்நடை கொண்டு -
நுவலற்கரிய நாயகன்தான் -
கால்நடை கொண்டு -
கால்நடை மேய்த்தான்!

தொழுவதற்குரிய தெய்வம் -
தொழுவத்தில் வந்து - தன்னைத்
தொடுகின்ற பேற்றை...
மாடு பெற்றது; அதனால்
வீடு பெற்றது!

பாம்பில் -
பள்ளிகொண்டவன் தான் - ஒரு
பாலகனாகி - முலைக்

காம்பில் -
கனிவாய் வைத்துக்
கவ்வுகிறான் என்று...

புரியாமலே -
பாலைச் சொரிந்த -
பசுவினை - கண்ணன்
பரிவோடு தடவினான்;
பட்டுப் போனது - அதன்
பழவினை!

நோம்பால் கட்டமுடியாத -
நுண்பொருளை - ஒரு
தாம்பால் கட்டினாள் -
தாய்; காரணம் -
தெருமண்ணைத் தின்றது -
அதன்
வாய்!

ஆம்!
மண்ணைக் காப்பவன் -
மண்ணுக்கு வந்து -
மண்ணைத் தின்றான்;
மண்கொண்ட வாயில் -
மத்தால் அடிவாங்கி -
புண்கொண்டு நின்றான்!

அவன் -
புண்ணார்ந்த வாயை -
அண்ணாந்த போது -

அதில்...
விண்ணார்ந்த யாவும் -
மண்ணார்ந்த யாவும் -
கண்ணாரக் கண்டு...
வந்த கோபம் மறந்து -
வியப்பின் உச்சிக்குப்
போனாள் -
நந்தகோபன் விருந்து!

மயிலிறகு - தலை
முடியில் செருகிய - குளிர்
வெயிலழகு...

ஆய்ச்சியர் நெஞ்சை -
அடுப்படி உலையாய்க்
காய்ச்சியது; அங்ஙனம்...
காய்ச்சிய நெஞ்சில் -
காதல் நதியைப்
பாய்ச்சியது!

முட்டிதேய -
முன்வந்து தவழ்ந்த -
குட்டி நிலாவை...
கொத்து
மலர்போல் அள்ளி - தம்
மருங்கில் வைத்தனர்;
முத்த ஊசிகளால் - தம்
முகங்களை - அதன்
முகத்தோடு தைத்தனர்!

இரு
கால்கொண்டு நடந்த -
கண்ணன் என்னும் -
கற்கண்டு...

அந்தக்
★ கஞ்சனுக்குக்
கைத்தது; அந்தக்
கைப்பு - அவன்
கண்களில் இருந்து -
தூக்கத்தை - வெகு
தொலைவில் வைத்தது!

கஞ்சன் - ஒரு
நஞ்சன்; கல் -
நெஞ்சன்!

கண்ணன் தந்தை -
கஞ்சனுக்கு -

---

★'கஞ்சன்' என்பது கம்சனைக் குறிக்கிறது!

மஞ்சன்!

முன்னம் – இந்த
மன்னன் கஞ்சனின் –
மடியில்...

ஒரு –
பட்டாம்பூச்சி போல் –
உட்கார்ந்திருந்த தங்கையின் –
எட்டாம் பிள்ளையால் – தனக்கு
எட்டும் மரணமென்று...
ஓர்
அசரீரி சொல்ல – கஞ்சன்
அதிர்ந்து போனான்;
ஆதி அந்தம் – அவனது
அங்கத்தில் –
அப்பிக் கிடந்த – மொய்ம்பு
அனைத்தும்...
ஒரு நொடியில் –
உதிர்ந்து போனான்!

தன் –
அங்கையில் வைத்து –
அன்புடன் வளர்த்த –
தங்கையை...

அவள் –
கணவனொடு –
காராகிருகத்தில் வைத்து –
காவல் புரிந்தான்;
பிறக்கப் பிறக்க –
பிள்ளைகள் ஏழை – வாளால்
அறக்கப் பறக்க –
அக்கணமே அரிந்தான்!

எனினும்...
எட்டாம் பிள்ளை – அந்த
சட்டாம் பிள்ளை கைக்கு –
எட்டவில்லை;

அது –
கோகுலத்தில் வளர்வதாய்க்
கேள்விப்பட்ட பின்...

அதன் –
உயிர் சூடிய –
ஊன் ஆடையை –
உரிவதற்கு –

அந்தத்
தீயன்; தீதுப்பும்
வாயன் –
தீட்டாத –
திட்ட மில்லை!

பிள்ளை உயிரை – நச்சுப்
பால் கொடுத்துக்
கொள்ளை அடிக்க...

ஆய்ச்சி வேடத்தில்
அனுப்பினான் – ஒரு
பேய்ச்சியை!
அவள் பேர் –
பூதகி! எம –
காதகி! – கொலை
பாதகி!

அந்தப்
பேய்ச்சியின் பெருமுலை –
பீச்சிய பாலை –
பிள்ளைப் பெருமாள் –
உண்டான்; அவள் –
உதவிய பாலொடு –
உயிரையும் சேர்த்து –
ஒன்றாய் உறிஞ்சிக்
கொண்டான்!

முலையுண்ட கண்ணனால் –
கொலையுண்ட காதகி...
மண்ணில் சாய்ந்தாள் – ஒரு
மழுவால் சாய்த்த –
மரம் போலே; அவள் –

ஆய்ச்சி அல்ல - ஒரு
பேய்ச்சி என்றறிந்து -
அசோதையும் நின்றாள் -
மரம் போலே!

அடுத்து -
சகடாசுரன் எனும் -
சழக்கனை - இடைச்
சேரிக்கு அனுப்பினான்...
கண்ணனின் ஆவி -
கரந்துவர -
கஞ்சனெனும் பாவி!

சகடமும் -
சங்கமும் தாங்கும் -
சக்கரவர்த்தி...

சகடாசுரனை -
சகடம் போல் -
சுழற்றினான்; அவன் -
ஆவியை -
ஆக்கையிலிருந்து -
கழற்றினான்!

மீட்டும்...
மருகனைக் கொல்ல -
மாமன் - ஒரு
மத்தவாரணத்தை ஏவினான்;
கஞ்சன் தங்கை -
கருப்பை வளர்ந்த -
கறுப்பு நெருப்பு - அதன்
மருப்பைச் சீவினான்!

வரையில் உதிரம் -
வாயில் வடியவடிய -
தரையில் விழுந்தது...

முன்னம் -
முதலைவாய் வீழ்ந்த -
காட்டானை - தன்னைக்
காத்தானை;

கடவுளாய் - தன்னைக்
காட்டானை...

அறிய வொண்ணாத -
அசுரன் ஆனை! அதன் -
ஆவிபோய்ச் சேர்ந்தது -
அகல வானை!

கண்ணன் என்னும் -
கருந் தெய்வத்தைக் கொல்ல -
திண்ணன் இன்னும் -
திட்டங்கள் தீட்டினான்;
திட்டங்கள் தோற்று - ஒரு
தீர்வும் தென்படாது - மான
நட்டங்கள் ஏற்று - கஞ்சன்
நாள்களை ஓட்டினான்!

தீயன் இன்னும் -
தீராதிருப்பது தீதென்று -
மாயன் எண்ணினான்; ஒரு
மார்க்கம் பண்ணினான்!

மாமன் வீட்டுக்கு - ஒருநாள்
மருகனே சென்று - அவனை
ஏமன் வீட்டுக்கு -
எளிதாய் அனுப்பினான்;
விண்ணிலிருந்து -
மண்ணுக்கு வந்து -
வினைபுரிந்த வினையை -
விண்ணுக்கே திருப்பினான்!

மூர்த்தி சிறுத்த -
முகுந்தனின் -
கீர்த்தி பெருத்த -
கதையை...
ஒரு -
கீர்த்தனமாய் -
கவனம் செய்து - யமுனைக்
காற்று பாடியது;
ஊரெங்கும் - பரவச
ஊற்று ஓடியது!

இடைச் சேரியில் – ஒருமுறை
இந்திரன் பெய்வித்தான் –
அடைமழை;
அடைமழையிலிருந்து –
அனைவரையும் காத்தது –
அருள்மழை!

ஆம்!
குன்றை எடுத்தான்;
குடையாய் விரித்தான்; மாடு –
கன்றைக் காத்தான் –
கேசவன்;

வெட்கமழையில் –
முட்டமுட்ட நனைந்து –
வெலவெலத்துப் போனான் –
வாசவன்!

காளியன் என்னும் – கொடிய
கட்செவி தன்னை –
மூளியன் ஆக்க – ஆயர்
முதுகுடியைக் காக்க...

மாதவன் – அதை
மர்த்தனம் செய்தான்;
அருள்மிகு –
யாதவன் அதன்மேல் –
நர்த்தனம் செய்தான்!

நோன்பில் –
தோய்ந்து கிடந்த –
வேய்கள் மட்டுமே...
குழல் வண்ணம்
கொண்டு – அந்த
நிழல் வண்ணன்
நேரிய உதடுகளில்...

உட்காரும்; அவன் –
ஊதுவான்! அதில் –
நெக்குருகும் –
நிலம்; நீர்; வான்!

அந்த –
ஞானமழை வழங்கும் –
கானமழை கேட்டு...
கறவை உறங்கும்;
பறவை உறங்கும்; அவன் –
உறவை விழைந்து – கோபியர்
உள்ளம் கிறங்கும்!

அவன் –
குழல்வழி – அமுதக்
குடமொன்று கவிழ்ந்து...
அது –
செவிவழி புகுந்து –
சிந்தையில் இறங்கும்; அதில் –
சித்தம் சுத்தமாகி –
சச்சிதானந்தமாய்ப் பிறங்கும்!

இங்ஙனம் – தனது
இளமைக் காலத்து –
எண்ணங்களிலும்...
பிள்ளைப் பிராயத்து –
வண்ணங்களிலும்...

கரைந்து போனான் –
கண்ணன்;
கவின்மிகு துவாரகை –
மன்னன்!

அவனது –
எண்ணத் தேர் –
இறந்த காலத்தில் ஓட....
அவன் –
அமர்ந்திருந்த –
வண்ணத் தேர் –
நிகழ்காலத்தில் –
விரைந்து ஓடியது...

அழகிய –
அத்தினபுரம் நோக்கி;
அத்தை குந்தியைப் பார்க்கும்
ஆசையை நெஞ்சில் தேக்கி!

# தொன்மை நினைவுகள்

அத்தினபுரியை -
அடைவதற்கு...

அதிகப்பட்சம் - இன்னும்
அரைநாளுக்கும் அதிகமாக
ஆகும்; அந்தப் பாதை -
போகப் போகப் போகப் போகப்
போகும்!

பேய்த் தேர் -
பறந்த வெய்யிலில் - அந்தப்
பொற்றேர் பறந்தது;
தேருக்குள் இருந்த -
தேவகி மைந்தனுக்கு -
பழைய ஞாபகம் -
பழையபடி பிறந்தது!

பீலியைச் சூடிய
பெருமான் - முன்னம் -
காலியை மேய்த்த
கோவலன் அல்லவா!
எனவே -
இரையை -
மீட்டு மெல்லும் -
நிரையைப் போல்...
அந்நாள் நிகழ்வுகளை -
அய்யன் அசைபோட்டான் -
இந்நாள்!



சீதம் காட்டி - மெத்தச்
சில்லிட்டிருக்கிறது - வெள்ளை
ஓதம்! அதன் மேல் -
பாதம் நீட்டி - பன்னகப்
பாயலில் படுத்திருக்கிறது -
வேதம்!

சீதத்தில் -
ஓதத்தில் - சயனித்திருக்கும்
வேதத்தின் -
பாதத்தில்...

பூங்கரம் வைத்து - மெல்லப்
பிடித்துக்கொண் டிருக்கிறது...

அருட்செல்வம் -
ஆலிங்கனம் செய்யும் -
பொருட்செல்வம்!
பறவைமேல் எழுகின்ற -
பரமேட்டி - பால்
பரவைமேல் இங்ஙனம் -
பொய்த்துயில் கொண்டிருக்க...
'ஓம் நமோ நாராயணா!'
'ஓம் நமோ நாராயணா!'
என -
எவ்வுயிர்க்கும் -
நலம்புரி நாமம் -
வலம்புரி ஓத...

சங்கம் ஓதியதை -
செவிகளில் வாங்கி -
சாமி கையிருக்கும் -
நேமி நெகிழ...

தேஜோ மயமாய் -
திகழ்கிறது -
திவ்விய தம்பதியின் -

திருவோலக்கம்;
திருவுளம் -
திதித்துக் கிடக்கிறது - ஸ்ரீ
தேவிக்கும் - கரிய
திருமாலுக்கும்!

ஏகாந்தத்தில் -
எம்பிரானும் எம்பிராட்டியும் -
எழுந்தருளி யிருக்கையில்...
ஓர் -
அபயக்குரல் கேட்டது;
திருப்பாற்கடலையே - அது
தூக்கிவாரிப் போட்டது!

அது -
விண்ணின் குரலல்ல;
மண்ணின் குரல்!
மண்ணெனத் திகழும் -
பெண்ணின் குரல்!

'ஓ!
நாரணனே!
ஆரணனே!
பூரணனே!
காரணனே!
நாவரசு; பாவரசு -
நாளும் ஏத்தும் -
தேவரசே! ஈழத்
தீவரசு தனைச் செற்ற -
பூவரசே!
கூர்மமாய் வந்த -
கூர்மையே!
கேழலாய் வந்த -
நீழலே!
மகரமாய் வந்த -
சிகரமே!

தூணைப் பிளந்து - ஓர்
ஆணைப் பிளந்தவனே!
முப்படியை - மூன்று
தப்படியால் அளந்தவனே!
தாங்கொணாச் சுமையை -
தாங்குகின்றேன்;
மேல் மூச்சு கீழ் மூச்சு
வாங்குகின்றேன்!

நின்றேன் -
நின்னடி ஏத்தி;
நாரா யணனே!
நீயெனைக் காத்தி!'
என்று -
இருகரம் சென்னிவைத்து -
இறைஞ்சி நின்றாள் -
நில மடந்தை; நல்ல -
குல மடந்தை!

'பொறைமேல் பொறையாய்ப்
பெருகிடினும் - அவற்றைப்
பொறைகொண்டு தாங்கவல்ல -
புவிப் பெண்ணே! இன்றென்ன -
குறை கொண்டாய்? கூறுக!'
என்றான் -
இருடீகேசன்;
இலக்குமியாள் நேசன்!

புனலைப்
பொழிந்தது கண்;
பதிலை -
மொழிந்தது மண்!

'முகுந்தனே! இது -
மூன்றாம் யுகம் -
முடிவுறும் தருணம்;
மெல்ல மெல்ல -
மேட்டிமை குறைந்து -
மெலிந்து வருகிறது -
மானுட வருணம்!

ஒழுக்கம் இல்லாத
ஒருவனுக்கு - அவன் நிழலே



வழுக்கும் என்பது - ஒரு
வசனம்!

அந்த
வசனமே -
வழுக்கி விழுந்து -
வழக்கொழிந்து நிற்கிறது;
மன்பதை - தீமை
என்பதை மட்டுமே -
மறைநூலாய்க் கற்கிறது!

குற்றம் -
கோல் பிடிக்கிறது;
குணம் -
கால் பிடிக்கிறது!
அதர்மம் அரிசிதின்கிறது;
தர்மம் தவிடுதின்கிறது!

நிறம் மாறி நிற்கிறது –
அறம்;
திறம் ஏறி நிற்கிறது –
மறம்!

பொய்க்குள் வாழும் –
பொல்லா மனிதனின் –
கைக்குள் செல்வம் –
காய்க்கிறது;
வாய்மை பேசும் –
வாய்களுக் கெல்லாம் –
வாய்க்கரிசிதான்
வாய்க்கிறது!

மகாப்பாவம் செய்தும் –
முன்னேற எண்ணுகிறது – மனித
மனோபாவம்!

கொலை;
களவு;
கோள்;
கபடு...
இவை –
நாலும் – இன்றைய
நானிலத்தார் நெஞ்சுக்கு –
சாலும்;
அதற்கேற்ப –
அமைந்திருக்கிறது –
கொலுவிருக்கும் –
கோலும்!

ஆக...
கோலும் குடியும் – கை
கோத்துக் கொண்டு...
மேலும் மேலும் –
முறைகேட்டைப் புரிந்து –
காலும் கையும் தூக்கி –



ஆலும்!

யாண்டும் -
யாங்கணும்...
நன்றி கொன்றவன் -
வென்றி கொள்கிறான்; நீதி
ஏற்று நின்றவன் -
தோற்று வெள்கிறான்!
பகவானே! - இந்தப்
பாவிகளையும் பாவங்களையும்...
இனியும் தாங்க -
என்னால் இயலாது;
யாவும் அறிந்த -
தேவும்...
மௌனம் -
ஏற்றிருப்பதோ -
எனைக்காக்க முயலாது?'

பூமா தேவியின் -
புலம்பலைக் கேட்டான் -
புண்ணிய மூர்த்தி; சிறிது
புன்னகைத்துவிட்டு -
பதிலிறுத்தான் - அந்த
கண்ணியமூர்த்தி!

'மண் மகளே!
மூன்றாம் யுகமான -
துவாபரத்தின் முடிவிலேயே -
தொடங்கிவிட்டது கலி; உன் -
முதுகுக்கும் - அதனால்தான்
மூண்டுவிட்டது வலி!

யுகங்கள் தோறும் - மனித
முகங்கள் மாறும்;
உத்தமம்...
மத்திமம்...
அதமம்...
அதமாதமம்...

இங்ஙனம் -
வகுக்கப் பெற்ற
வரிசைப் படி...

மனுவின் மாண்பு -
மெல்ல மெல்லச் சரியும்; இது -
யுகதருமம் என்று -
யோகிகளுக்குப் புரியும்!
அதனால்தான் -
அவர்கள்...

சமுகத்தின் -
சீலம் கெட்டது கண்டு -
காலம் கெட்டது என்று -
கணிக்கிறார்கள்;
பிரபஞ்சத்தில் நிகழும்
பிழைகளை - காலத்தின்
தலையின்மேல் - அவர்கள்
திணிக்கிறார்கள்!

இது உண்மைதான்;
ஏனெனில்...
காலச்சக்கரம் - என்
கைக்குள்ளே சுழல்கிறது;
அந்த -
சுழற்சிக்குள்தான் -
சராசரமே உழல்கிறது!

வெயிற் காலத்தை -
விளைக்கும் நான்தான் -
மண்ணில்
மழைக் காலத்தையும் -
மலர்த்துகிறேன்; உலகின் -
விழிக்குள் வெப்பத்தை -
உண்டாக்கும் நான்தான் - அது
உகுக்கும் கண்ணீரையும் -
உலர்த்துகிறேன்!

அவ்வளவு ஏன்?
அண்டங்கள் அனைத்தையும்...
உண்டாக்கும் நானே -

ஒருநாள் விழுங்குகிறேன்;
விழுங்கியதை நானே -
வேறொரு நாள் உமிழ்கிறேன்!

எனது -
அலகிலாத விளையாட்டு -
இது;
இங்கு -
நானறியாது நிகழ்வது -
எது?

பொறுமைக்குப்
பொருள் சொல்லி -
நீளக் கிடக்கும் -
நில மடந்தையே!
இது -
கலியின் வருகைக்குக்
கட்டியம் கூறும் -
காலம்; இனி -
கொஞ்சம் கொஞ்சமாக - நாடு
கடத்தப்பட்டு விடும் -
சீலம்!
கலிகாலம் -
கிட்டவர கிட்டவர...
உன் -
மடிதாங்கும் - பாவ
மூட்டைகள் கூடும்;
விழி பிதுங்கி - உன்
விலா எலும்புகள் வாடும்!

தாங்கி நில்! - மடியில்
வாங்கி நில்! - நான்
தரை வரும் -
வரை!

வெகு -
விரைவில்...

ஒரு -
குலமகளின் -
கருவில் இறங்குவேன்; பின் -
கருவிலிருந்து -
கோகுலத்தின் -
தெருவில் இறங்குவேன்;
இறங்கிய வுடனேயே -
என் தாய்மாமனோடு -
செருவில் இறங்குவேன்!

என் செய்வது? பாவம்!
என் மாமன்தான் - என்னால்
முடியப் போகும் -
முதல் பாவம்!

பிறகு -
பன்னெடுங்காலம்...
மானிட அங்கியில் -
மண்ணில் உலாவி -
மனிதரோடு மனிதனாய் -
மகிழ்ந்து குலாவி...

நல்லாரைக் காப்பேன்;
பொல்லாரைத் தீர்ப்பேன்;
எல்லாவற்றிற்கும் மேலாக -
என்றும் இலங்குமாறு...

நன்னூல் ஒன்றை - என்
நாவினால் யாப்பேன்;
'உய்தி!' என்று சொல்லி - அதை
ஒருவன் செவியில் சேர்ப்பேன்!

அவனிட மிருந்து - அதை
அகிலம் கற்கும்;
ஆன மட்டும் -
அறம் பிறழாது நிற்கும்!

பூமா தேவியே!
பயம் விடு!
பூக்கும் நலம்;
புறப் படு!'
அன்பொழுக - இங்ஙனம்
அருளிச் செய்துவிட்டு...

அரவிந்த நயனம் - மீட்டும்
அறிதுயில் கொள்ள - ஏற்றது
அனந்த சயனம்!

பூமி -
பூமிக்குத் திரும்பியது;
பூவிழியில் -
புலம்பல் அகன்று -
புன்னகை அரும்பியது!



அத்தினபுரம் நெருங்குவதை -
அறிவித்தான் தேர்ப்பாகன்;
தொன்மை நினைவுகளிலிருந்து -
திரும்பினான் தேவகி மைந்தன்!

# விருந்துபசாரம்

'பால் உணர்வின் -
பால் வைத்த பாதிப்பால் -
பால் ஊற்றும் நிலைக்குப்
பால் வண்ணன் போனானே!'
என்று...

பரமபதம் அடைந்த -
பாண்டுவைப் பற்றி...

முக்குக்கு முக்கு -
திக்குக்கு திக்கு -
மூக்கைச் சிந்திய...

அத்தினபுரி -
அவசர அவசரமாக - தன்
அழுகையை நிறுத்திவிட்டு - ஒரு
தொழுகையை மேற்கொள்ளத்
தயாரானது; காரணம்...

தொழுகையைப் புரிவார் -
அழுகையைத் துடைக்கும் -
துவாரகை மன்னனின் தேர் -
தலைநகர் எல்லையைத்
தொட்டுவிட்ட தகவலை -
தென்றல்
தமுக்கடித்துப் போனது!

கண்ணன் தேரில் -
கண்ணனும் வந்தான்;
கண்ணனின்-
அண்ணனும் வந்தான்!

பகலும் இரவும் -
பக்கத்துப் பக்கத்து -
இருக்கையில் -
இருக்கையில்...

ஊர் எல்லையில்
உள்ள - ஒரு
தடாகத்துத் தாமரைக்கு -
தலை சுற்றியது;

'கங்குல் வருகிறது என்று -
குவிவதா? - இல்லை,
வெய்யில் வருகிறது என்று -
விரிவதா?'

முடிச்சவிழ்க்க -
முடியாத வினாவொன்று - அந்த
முண்டகத்தின் -
முண்டாவில் தொற்றியது!

இந்தக்
குழப்பத்திற் கெல்லாம் -
காரணம்...



கண்ணன் வண்ணமும் - அவன்
அண்ணன் வண்ணமும் தான்!

அண்ணன் பலராமன் -
ஆயிரம் அம்புலிகளின் -
திரட்டு; அவனது -
இளவல் பரந்தாமன் -
எழுந்து நடக்கின்ற -
இருட்டு!

இந்த -
இருட்டுதான்...

உலகு முழுவதற்கும் - ஒளியை
உமிழ்கிறது; இல்லையேல் -

உலகுக்கேது பச்சை? - அந்த
இரவியின் வெளிச்சமும் - இந்த
இருட்டு இட்ட பிச்சை!

அல்லும் பகலுமாய் -
அகலாது அன்பு பாராட்டும் -
அல்லையும் பகலையும்...

தாங்கிவரும்
திருத்தேர் -
ஓட்டுமொத்த
ஊரும் வணங்க - ஊர்க்குள்
ஊரும் வேளையில்...

அதைப்
பின்பற்றி -
பிறிதொரு தேரும் வருகிறது; ஊர் -
பெரிய மரியாதை தருகிறது!

அந்தக்
கனகமணித் தேர்க்குள் -
கண்ணபிரானின்...

தாயும் -
தந்தையும் ஆன -
தேவகியும் - வசு
தேவனும்...

வீற்றிருக்கிறார்கள்;
ஊரார் வணக்கங்களை -
ஏற்றிருக்கிறார்கள்!

ரதங்கள் இரண்டும் -
ராஜவீதி வழியே -
ராஜபவனம் சேர்கிறது; சோக -
ரசத்தைப் பருக நேர்கிறது!
தேர்களை விட்டிறங்கி -
திருமாளிகைக்குள் புகுந்ததும்...

நால்வரின் -
நெஞ்சங்களையும் -

குந்தியின் கைம்மை - தயிர்க்
குடத்து மத்தாய்க்
கடைகிறது! உடனே -
கண்ணீர் மதகு உடைகிறது!

அவரவர் பங்குக்கு -
அழுது ஓய்ந்தபின்...

ஆணிழந்த அன்றிலாய் -
அலமந்து நிற்கும் - மஞ்சள்
நாணிழந்த நாத்தியை...

தேவகி -
தேற்றினாள்; நாத்தனார் -
உளக் கொதிப்பை -
வார்த்தை நீர் வார்த்து -
ஆற்றினாள்!

மாய -
வித்தையை நிகழ்த்தும் -
மாயவன் கண்ணன் - தனது
அத்தையை நெருங்கி -
'அஞ்சற்க!' என்றான்; அவள் -
சோகம் முழுவதையும் - தனது
சொல்லால் வழித்துத் தின்றான்!

'அன்புசால் -
அத்தையே! குந்திபோஜன் -
தத்தெடுத்த -
தத்தையே!
இம்பரில் பிறக்கும் -
எவர்க்கும் உண்டு -
ஏற்றம் இறக்கம்!

நானில வாழ்வு - ஒரு
நாணயம் ஒத்தது;
இன்பம் என்னும் -
பூவொரு பக்கம்...
துன்பம் என்னும் -
தலையொரு பக்கம்...
என - அது

இருபக்கம் உற்றது!

அவ்வப்போது - காலம்
அதைச் சுண்டிவிடும்;
அவரவர் -
ஆற்றிய வினைக்கேற்ப...
தலையும் விழும்!
பூவும் விழும்!

அத்தையே!
அத்தகு காலம்...
உன் -
வாழ்க்கை நாணயத்தை -
கட்டை
விரல்மேல் வைத்துச் சுண்ட....

உனக்கு -
தலை விழுந்தது; எனவே உன் -
தலை விழுந்தது!
தலை விழுந்ததால் - உன்
தலை தாங்கிநின்ற -
பூ விழுந்தது!

காலம் - மறுபடியும்
காசைச் சுண்டலாம்; அதில் -
கண்ணீர் மறைந்து -
களிப்பு மண்டலாம்!

எனவே -
இன்பமும் துன்பமும்...

அவ்வப்பொழுது -
அண்டும்; அகலும் - ஓர்
அவஸ்தை! அந்த -
அவஸ்தையை -
அதிகம் பாராட்டாதிருத்தல் -
விவஸ்தை!

என் -
தந்தையின் -
தமக்கையே!

நீ -
ஐவரின் அன்னை; இந்த -
ஐம்புலன்களையும் -
ஆற்றுப்படுத்தும் - மெய்
அறிவெனச் சொல்லலாம்
உன்னை!

பிள்ளைகளைச் செம்மையாய்ப்
பேணுக! பஞ்ச -
பாண்டவர் திருமுகங்களில் -
பாண்டுவைக் காணுக!'

இங்ஙனம் -
இயம்பினான்...

வேய்ங்குழல் -
வேந்தன்;
நப்பின்னை என்னும் -
நங்கை நல்லாளின் -
காந்தன்!

தருமனும் - அவன்
தம்பியரும் - அனைவர்க்கும்
தண்டனிட்டனர்; தங்கள் -
தலைகளால் - அவர்தம்
தாள்களைத் தொட்டனர்!

விழியில்லா வேந்தனும் -
விதுரனும் பீஷ்மனும் -
வந்த விருந்துக்கு - நல்
வணக்கம் வைத்தனர்;

கூடவந்த -
கௌரவ மக்கள்...
நூற்றுவரும் - நிலத்தில்
நீளவிழுந்து வணங்கி - அந்த
நால்வரை மொய்த்தனர்!

காந்தாரி கரம்பற்றி - தேவகி
குசலம் விசாரித்தாள்; அந்த -

நல்லவள் தோள்தடவி -
காந்தாரி
'நலமா?' என வினாவிரித்தாள்!

இருள் நிறத்துக் கண்ணன் -
தரை
இறங்கிவந்த இறை என்று -
இருள் நிறைந்த கண்ணன் - தன்
இதயத்திற்குச் சொல்லியவன்;
ஏற்கெனவேயே - கண்ணனை
எண்ணங்களால் புல்லியவன்!

ஆதலால் - மிகவும்
ஆதுரத்துடன் -
தன்மனை தேடிவந்த
தெய்வத்தை -
திருதராஷ்டிரன்..

ஆரத்தழுவினான்; முன்செய்த -
அனைத்து வினைகளையும் -
ஒரு
சேரக்கழுவினான்!

விதுரனும் அறிவான்; இல்லம் -
விட்டவனும் அறிவான்...

சதுர்மறை நாயகன்தான் -
இடைச்
சேரிவாழ்
கண்ணனென்று! - வேயின்
துவாரம் வழி தேன் பிலிற்றும் -
துவாரகை மன்னனென்று!

எவன் பேரை - விதுரனின்
வாய் வாய்ப்பாடமாய் -
ஓதுகிறதோ...

எவன் புகழ் - விதுரனின்
வாய்க்குள் வாய்க்காலாய் -
ஓடுகிறதோ...

அவன் - விதுரனின்
வாயில் வந்ததால் - அவனை
வாழ்த்தும் வாசகம் - விதுரனின்
வாயில் வந்தது!

'பூபாலனே! - வேணு
கோபாலனே!
வெண்ணெய்
உண்டவாயால் - புழுதி
மண்ணை உண்டாய்;
மண்ணை
உண்டவாயால் - பேய்ப்
பெண்ணை உண்டாய்!

இவை -
அனைத்தையும் உண்டவாயால்
- என்
மனத்தையும் உண்டாய்; அய்யே!
உன்னில் ஒடுங்கும் தகுதி -
என்னில் உண்டா? ஆய்!'

வினயமாய் - இங்ஙனம்
விளம்பிய விதுரன்...
ஒரு
பாமரனாய் - தன்னை
பாவித்தான்; கண்ணன்
சேவடிகளில் விழுந்து -
சேவித்தான்!

விதுரனின் -
வயது கருதி...

'அபசாரம்!'
'அபசாரம்!' என்று -
காலில் விழுந்தவனின் -
கைதொட்டுத் தூக்கினான் -
ஆலில் உறங்கும் கண்ணன்;
அமாவாசை வண்ணன்!

பிறகு -
தரும புத்திரனையும்...

துரியோதனனையும்...

அருகழைத்து -
அவர்தம் -
உச்சந்தலையில் -
உள்ளங்கை வைத்து...

ஆசி அருளினான் - துவாரகை
வாசி!

பரந்தாமன் போல் -
பலராமனும் -
தேவகியும் - வசு
தேவனும்...
சந்திர குலத்து -
சந்ததிகளுக்கு -

மந்திர அட்சதை -
மண்டையில் தூவி...

'தீர்க்காயுள் பெற்றுத்
துலங்குக! தொல்புகழைத்
தீர்க்காது - இன்னமும்
தீர்க்கமாக்கி இலங்குக!'
என்று...
வாழ்த்தினர்; நூற்றைந்து -
வாரிசுகளையும் - வாழ்த்து
வெள்ளத்தில் ஆழ்த்தினர்!

அத்தினபுரத்தில் -
அஞ்சாறு நாள்கள் தங்கி - பின்
துவாரகை -
திரும்புமுன்...

நல்விருந்தாய் வந்த -
நால்வர்க்கும் - அன்புச்
சொல்விருந்தோடு - அறு
சுவை விருந்தும்...
தன் -
மனையில் வழங்கினான் -
மகாநதியின் மகன்; ஒரு -
மனையில் மனம் வைக்காத -
மாணிக்கவாசகன்!

காலையில் -
கண்ணனும் பிறரும் -
ஊர்திரும்பத்
தேர் ஏறுகையில்...

குந்தியும் -
காந்தாரியும் -
விதுரனும் -
விழியிலா வேந்தனும் -
ஒருநூறு பேரும் -
ஓரைந்து பேரும் -

வந்த விருந்தை -
வழியனுப்ப - வாசல்
வந்து நிற்கையில்...

கங்கை மைந்தன் - கஞ்சனின்
தங்கை மைந்தனுக்கு - இரு
கைகளைக் கூப்பி - ஒரு
வணக்கம் வைத்தான்; அந்த -
வணக்கத்தோடு கூடவே - ஒரு
விண்ணப்பமும் வைத்தான்!

'கண்ணா!
காயாம்பூ வண்ணா! - எங்கள்
குடியைக் காத்திடுக! - உனது
கடாட்சம் ததும்பும் -
கருவிழிப் பூக்கள் - எங்கள்
காவினில் பூத்திடுக!

உனது -
பாஞ்சசன்னியம்...
பாண்டவர்க்கும் கௌரவர்க்கும்
-
பாகுபாடின்றிக் கேட்கட்டும்;
உனது -
சுதர்சனம்...
சூது புரிவாரை தீது புரிவாரை -

சுழன்று போய்த் தாக்கட்டும்!

தாயாதிகளாய் -
தழைத்து நிற்கும்...

ஒரு நூறும் -
ஓரைந்தும் -
ஒரு நாளும் -
ஒரு போதும் -
உரசாமல்...

ஒருமித்த -
மனத்தவராய் - தருமம்
நிருமித்த வழியில் -
நடக்க...
அய்யனே! நீ -
அருள் பாலிக்க வேண்டும்;
நின் -
அருள் வாய்த்தால் - பரஸ்பர
அன்பு நிலைக்கும் யாண்டும்!'

பிதாமகன் -
பீஷ்மனின் -
பிரார்த்தனையைக் கேட்டு -
பதில் கூறாமல் -
பரந்தாமன் -
புன்னகை புரிந்தான்;
ஏனெனில் -
பங்காளிக் காய்ச்சல் -
பாலியத்திலேயே -
பூக்கப் போவதை -
புண்ணியன் அறிந்தான்!

உதடுகளில் -
உட்கார்ந்த புன்னகையை -
உதறாமலே...

தேவகிக்குப் பிறந்தான் -
தேரில் ஏறி -
துவாரகைக்குப் பறந்தான்!

---

# மாமனும் - மருகனும்!

ஐந்துக்கும் - ஈர்
ஐம்பதுக்கும்...

ஓர் -
ஊடுவெளி -
உண்டாகாதபடி...

அனுகூலமாயும் -
அனுசரணையாயும் -
அமைந்திருந்தது -
அகவை!

இந்தப் பக்கமும் -
அந்தப் பக்கமும் -
ஈரேழு;

ஈரொன்பது;
மூவஞ்சு;
மூவாறு...
ஏறத்தாழ -
இப்படித்தான்!
பேசுகிற மாதிரி - ஒரு
பேதம் என்பது - அவர்களது
பிராயத்தில் இல்லை; அபிப்
பிராயத்தில் இருந்தது!

அதுகூட -
அரசல்புரசலாக;
அரைக்காசுக்கு -
ஆகாத உரசலாக!

ஆதலால்தான்...
அதிகம் காயப்படாத -
காதலால்தான்...

பஞ்ச -
பாண்டவர்களும்;
பார்வையில்லாதவன் -
பிள்ளைகளும்...

இருதாய் மக்கள் -
என்றில் லாமல் -
ஒருதாய் மக்களாய் -
ஒன்றாகவே...
உண்டார்கள்;
உறங்கினார்கள்;
விழித்தார்கள்;
விளையாடினார்கள்!

ஆனால் -
அந்த...
விளையாட்டுதான் -
விரைவிலேயே -
வினையானது; அந்த வினை -
சன்மப் பகை -
சூல் கொண்ட -
சினை யானது!

குறிப்பாக -
கூறப்போனால்...

குந்தி ஈன்ற -
குன்றுக்கும்;
காந்தாரி ஈன்ற -
கன்றுக்கும்...
எடுத்ததற்கெல்லாம் -
ஏழாம் பொருத்தம்;
இவன் செயலுக்கு -
அவனிடமும்...
அவன் செயலுக்கு -
இவனிடமும்...

விதி கற்பித்தது -
வெவ்வேறு அருத்தம்!

இரு -
தையல்கள் ஈன்றெடுத்த -
திங்கள் குலத்து - இள
வெய்யில்கள் நூற்றைந்தும்...
இரண்டுங் கெட்டான்கள்;
இரண்டுங் கெட்ட நேரத்தில் -
சோலை சுற்றும் காற்றோடு -
தட்டா
மாலை சுற்றும் தட்டான்கள்!
எல்லாமே -
இள வட்டங்கள்;
தளதளவென்று கொதிக்கும் -
இள ரத்தங்கள்!
விளையாட்டில் -
வரத்தானே செய்யும் -
உப்புச் சப்பில்லாத -
ஊமை யுத்தங்கள்!

பீமன்தான் -
பிரதான காரணம்; அவன் -
துதிக்கை இல்லாமல் -
தோற்றிய வாரணம்!

தன் -
பங்காளிகளை - அவன்
பிரியமாகத் தழுவினாலும்...
விலா எலும்புகளில் -
விரிசல் விழும்;
வீவு நேர்ந்தாற்போல் - அலறல்
வீரிட் டெழும்!

துரியோதனன் -
தம்பிகளில்...
ஏழெட்டுப் பேரை -
இடக்கையாலும் வலக்கையாலும்
-
தலைமுடியைப் பற்றித்

தூக்கி...
அலைமுடியைச் சூடிய -
ஆற்றில்...
மூச்சு முட்ட -
முக்கியெடுப்பான்;
'குய்யோ முறையோ' என்று -
கூவிய பின்னால்...
குற்றுயிரும் குறையுயிருமாய் -
கரையில் விடுப்பான்!

பிள்ளைகள் மரமேறிப்
பழங்கள் பறிக்க...
பீமன் - மரத்தைப்
பிடித்து உலுக்க..
பழங்களோடு -
பிள்ளைகளும் உதிரும்;
உதிர்ந்த இடத்தில் -
வழிந்து கிடக்கும் உதிரம்!

பீமன் முதுகில் -
பிள்ளைகளெல்லாம் -
கங்காரு போல் -
குதிரை தாண்டும்;
பீமன் தாண்டினால் -
பிள்ளைகளை மீட்க -
ஆறேழு அடிகள் -
அகழ வேண்டும்!
பெரிதும் இவையெலாம் -
பிள்ளைமையால் -
பீமன் புரிந்த பிழைகள்; தன் -
நெஞ்சத் தறியில் - துரியோதனன்
நெடும்பகை ஆடையை -
நெய்ய உதவிய இழைகள்!

தெரிந்தோ -
தெரியாமலோ...

தருமனின் -
தம்பியால்; இரு -
தாள் கொண்ட -
தும்பியால்...

ஒரு -
துவந்த யுத்தத்திற்கான -
துவசாரோகணம் -

விளையாட்டோடு -
விளையாட்டாக -
விளைந்து விட்டது; அது -
துரியோதனனின் -
துயிலெனும் துகிலை - அவன்
கண்களிலிருந்து -
களைந்து விட்டது!

பீமசேனனின் -
பிரதாபங்களை எண்ணி...
அவனது -
ஆழ்மனத்தில் சுரந்தது -
அழுக்காறு என்னும் -
அழுக்காறு!

ஆம்!
அவனுக்கு -
முதன் முதலாக -
முளைக்கத் தொடங்கியது -
வயிற்றிலே பல்! தன் -
வேலை சுளுவானதில் -
விதியெனும் தேவனுக்கு -
வாயெல்லாம் பல்!

தாயாதியால் - தன்
தூக்கம் போனதில் -
துரியோதனனுக்கு -
துக்கம் வந்தது; அந்த -
துக்கத்தை -
தொலைத்துத் தலைமுழுக -
தக்கவழி எதுவென்று - ஒரு
தர்க்கம் வந்தது!

தர்க்கத்தை -
தொடங்கி வைத்தவன் - தீய

வர்க்கத்தை...
மொத்தமாக -
குத்தகைக்கு எடுத்தவன்;
சுத்தமாக -
சத்தியத்தை விடுத்தவன்!

தூரத்து உறவல்ல;
துரியோதனனுக்கு - அவன்
தாய் மாமன்; மருகனை -
நூறுதல் பொருட்டு -
நூறு வழிசொல்லும் -
நோய் மாமன்!

உத்தமி காந்தாரியின் -
உடன்பிறப்பு; அவளாலும் -
கழிக்க முடியாத -
கடன் பிறப்பு!
அந்த -
சிறியன் பெயர் -
சகுனி! அவன் -
ஆணுருக் கொண்ட -
ஆயிரம் கூனி!

அவன் -
மூவகை மலங்களின்
மொத்தக் கலவை; அவனது -
முக்கியத் தொழில் -
மூளைச் சலவை!

அப்பழுக்கற்ற -
ஆர் மூளையும்...
சகுனியின் -
சலவைக்குப் பின் -

அண்டா அண்டாவாய் -
அழுக்கை அள்ளி அப்பிக்கும்;
அதன்பிறகு -
அவன்...
அஞ்சும் மூணும் ஆறு என்றால் -
அப்படியே அதை ஒப்பிக்கும்!

மாச்சரியம் கொண்டு -
மாற்றாரைக் கவிழ்ப்பதில் -
தீட்சணிய மானவன்;
ஆச்சரியக் குறியே -
ஆச்சரியப்படும் அளவு -
ஆச்சரிய மானவன்!

அவன் -
கவறு ஆடினால் - தாயக்
கட்டை கூடத்
தவறு செய்யாது; நெஞ்சில் -
எழும் எண் -
எண்ணியபடி -
விழும் பொய்யாது!

சூதாடுவதிலும் -
சூதை உள்வைத்து...
வாதாடுவதிலும்
அவன் போல் -
ஆருக்கும் வராது - அத்துணை
அகடவிகடம்; அவன் -
நீலகண்டன் -
நெஞ்சுக்குள் நிற்காத -
ஆலகால விடம்!

சகப் புரட்டனான -
சகுனி மாமன்தான்...

கெட்ட -
பெண்ணாவி போல் -
துரியோதனனைப்
பீடித்துப் பாடம் நடத்தும் -
அண்ணாவி!

அப்பாவி அக்குளில் சிக்கி -
ஆடுகின்ற துரியோதனன் - ஓர்
அப்பாவி! உடல் -
விட்டாவி பிரிந்தாலும் - மாமன்
விரலசைக்காது விடமாட்டான் -
கொட்டாவி!

சகுனி மாமன் -
சமிக்ஞை செய்தால்தான்...
துரியோதனன் -
துலக்குவான் பல்லை;
திருவாய் திறந்து -
துப்புவான் சொல்லை!
மருகனுக்கு -
மூக்கு அரித்தாலும்...
மாமன் -
சொன்னால்தான் -
சொறிவான்; மாமன் -
சொல்லாவிடினும் - அவன்
மேல்
சொல்லொணா அன்பை -
மருகன்
சொரிவான்!

விதியானது - இங்ஙனம்
வகுத்து வைத்தது -
துரியாதனனுக்கு - ஒரு
தீய பந்தம்; இந்த -
தீய பந்தம் -

துரியோதனனைப் பொசுக்க
வந்த -
தீப்பந்தம்!

பீமனைப் பற்றி -
மாமனிடம்...
திரும்பத் திரும்ப -
துரியோதனன் -

பெருங் கவலையோடு -
பிரஸ்தாபித்தான்; சிறு
பிள்ளையைப் போல -
பிரலாபித்தான்!

'மாமனே! - என்
மையிருட்டில் ஒளியுமிழும் -
சோமனே!

நான் -
கங்குலும் பகலும் -
கவலுகிறேன்; மனம் -
நோயுற்றிருப்பதை - உன்னிடம்
நுவலுகிறேன்!

பாண்டவர்கள் - எனக்குப்
பங்காளிகள்;
பங்காளிகளாய் வந்த -
பகையாளிகள்!

அத்தினபுரத்து -
அரியாசனம் - நாளை
அவர்களுக்கென்று -
ஆகலாம்; நான் -
பஞ்சையாய் -
பராரியாய் -
பட்டணம் விட்டே -
போகலாம்!

ஏனெனில் -
எனைப்
பெற்ற தந்தை -
பிறவிக் குருடு; பாண்டவர் -
குருடன் வாரிசுக்குக்
கொடுப்பரோ அரசு?

அவர் -
பறிக்குமுன் - நான்
பறிக்க வேண்டும் -
அரசை; அவர் -
முழங்குமுன் - நான்
முழங்க வேண்டும் -
முரசை!

பாண்டவர்க்கு -
பீமன்தான் -
பலம்; அந்த பலம் -
பிரபலம்! அதையல்லால் -
பாண்டவர்க்கு வேறில்லை -

பிறபலம்!

தம்பியின் பலமே - ஆயிரம்
தும்பியின் பலம் என்று -
தருமன் நினைக்கிறான்; அந்தத்
தருக்கில் கனைக்கிறான்!

அஞ்சு விரல்களில் -
அந்த பீமன்தான் -
கட்டை விரல்; அதை -
அரிந்து விட்டால் -
அடுத்த நான்கும் -
மொட்டை விரல்!

ஏமனை நிகர்த்த -
பீமனைக் கொல்ல -
ஏந்திப் பயனில்லை -
வாளை! அவனை -
ஒழிக்க வல்லது -
ஒன்றே ஒன்றுதான்;
மாமனே! அதுதான் உன் -
மூளை!'

இங்ஙனம் -
துரியோதனன் - மாமனின்
தயவை வேண்டினான்; தன் -
பனித்த பார்வையால் -
மாமனின்
பச்சாத்தாபத்தைத் தூண்டினான்!

சகுனி சிரித்தான்; பிறகு தன் -
சொல்லை விரித்தான்!
'மருகனே! ஏன் -
மனக்குறை?
ஆற்றங்கரை விருந்துக்கு -
ஐவரையும் அழை;
விருந்தில் - காளகூட
விஷத்தைக் குழை!
பிரியமாய் உன் கையால் -
பீமனுக்கு ஊட்டிவிடு;
பிறகு...
அவன் ஆவியை -
ஆகாயத்திற்கு ஓட்டிவிடு!'

---

# நிலாச் சாப்பாடு

**வ**லவன்!
வாய்த்த பெயருக்கேற்றபடி -
வாய் மணக்கச் சமைப்பதில் -
வலவன்!

அவன் -
ஆக்கும் சோறுக்கு -
அடிமையாகும் - ஆர்
நாக்கும்!

அவன் -
உணவுகளில் - அளவோடு
உட்கார்த்தி வைக்கும்...
உவர்ப்பை;
துவர்ப்பை;
கைப்பை;
கார்ப்பை;
புளிப்பை;
இனிப்பை...
புசித்துப் புசித்துப்
புளகம் எய்தி -
பாராட்டு மடல்
படித்திருக்கிறது...
இந்து குலத்து -
இரைப்பை!

அவன்
அத்தினபுரத்து -

அரண்மனைப் பரிசாரகன்;
மடைத்தொழிலில் –
மன்னர் குலத்துக்குக்
கிடைத்தற்கரிய பரிசானவன்!

துரியோதனனுக்கு – அவன்
தொட்டில் பழக்கம்; ஒருநாள் –
வலவன் வாராவிடில் –
வாடிநிற்பது – துரியோதனனின்
வட்டில் வழக்கம்!

காளகூடம் என்னும் –
கடும் விஷத்தை...

பீமன் சோற்றோடு –
பிசைந்து வைக்கும் பொறுப்பு –

வலவனுக்கு –
வந்தது; அவன் மனம் –
வெலவெலத்து –
நின்றது!

ஊதியம் வாங்கும் –
ஊழியம்...
வெலவெலத்தால் என்ன?
சலசலத்தால் என்ன?

துரியோதனனின் –
தனியதிகாரம் –

உலைவைக்கும் கைக்கே –
ஓருயிர்க்கு
உலைவைக்கும்படி –
உத்தரவு இட்டது; அங்ஙனம் –
உலைவைக்கும் பணியை –
ஒழுங்காகச் செய்ய – உரிய
விலைவைக்கப்பட்டது!

நீர் –
படுகையிலே –
பாவம் போக்கும் – மகாநதியின்
படுகையிலே...
படித்துறைகள் –
பலவுண்டு; அவற்றில் –
'பிராமணக் கோடி' –
பிரபலமான ஒன்று!

அந்தத்
தீர்த்தக்கரையின் –
திவ்வியத்தை அள்ளி –
புலவோர்
வார்த்தைக் கரையில் –
வைத்த துண்டு; அதன் –
வனப்பும் –
வசீகரமும் –
தவசிகள் நெஞ்சையும் –
தைத்த துண்டு!

அந்த –
மண்ணழகில் –
மன்னவர்க்குப்
பெண்ணழகும் –
கைத்த துண்டு;
நூறிடத்தில் தாவி –
நொந்த நெஞ்சங்களும் – அந்த
ஓரிடத்தில் ஒன்றி –
மொய்த்த துண்டு!

கங்கைக்
கரைகளிலேயே – அங்குதான்...

கிளி கொஞ்சும்; மாலைக்
கதிரவனின் – மஞ்சள்
ஒளி கொஞ்சும்; ஊர்சுற்றி –
ஓய்ந்துபோன – உச்சிமலை
வளி கொஞ்சும்; வந்து –
ஓய்வெடுப்பார் உள்ளமெலாம் –
களி கொஞ்சும்!

பார்க்கும் இடமனைத்தும் –
பச்சைப் பசேலென்று –

பசுமையை
வார்க்கும் சோலை; பட்சிகள் -
ஆர்க்கும் சோலை!
சதா - நிலம்
சதுப்பாயிருப்பதால் - உடல்
வேர்க்கும் கவலை - எந்த
வேர்க்கும் இல்லை!

அந்த -
வண்ணச் சோலையின் -
வயிற்றுப் பகுதியில் - ஒரு
வசந்த மண்டபம் உண்டு;
அங்குதான் -
அத்தினபுரி ராஜகுடும்பம் -
ஆடிப்பாடி ராத்தங்கும் -
சித்திரான்னங்கள் உண்டு!

அழகு கொழிக்கும் - அந்த
ஆற்றங்கரைக்குத்தான்...

நாள் முழுக்க -
நீர் விளையாட்டு ஆடவும் -
நூற்றைந்து பேரும் -
நெஞ்சு கலந்து கூடவும் -

நிலாச் சோறு
உண்ணவும் - நிசிப்
பொழுதை இனிமையாய்ப்
பண்ணவும்...

தருமனையும் - அவன்
தம்பி நால்வரையும் -
கருமசிரத்தையாய் -
கூட்டி வந்தான்...

துரியோதனன் என்னும் -
துட்டன்; ஒரு -
குருடன் ஈன்றெடுத்த -
குட்டன்!

தம்மை -
விருந்துக்கு அழைத்தது -
வேங்கை என்பதை -
மருந்துக்கும் அறியாத -
மறிகள்...
உற்சாகத்தின் -
உச்சத்தில்...

முடிச்சவிழ்ந்த -
மூட்டையிலிருந்து -
நிலம் விழுந்த -
நெல்லிக் கனிகளாய்...
திசை எட்டும் -
தெறித்து ஓடின; கங்கைத்
தண்ணீரில் குதித்து -
சடுகுடு ஆடின!

அத்தமனம் ஆகும்வரை -
அத்துணை மனங்களும் -
ஒத்தமனம் ஆகி...

கூத்தும் பாட்டுமாய் -
கூச்சல்கள் போட்டன; அந்தக்
கூச்சல்கள் - காற்றில்
நாலுகாத தூரத்திற்கு -
நீச்சல்கள் போட்டன!

இரவு வந்தது;
நிலவு வந்தது;
வாழை இலைகளில் -
உணவு வந்தது!

நீண்ட காலம் -
நாக்கில் நிற்குமாறு - ஒரு
நிலாச்சாப்பாடு! பாண்டவர் -
திகைக்கும் வண்ணம் -
தடபுடலா யிருந்தது -
துரியோதனன் ஏற்பாடு!

அவனை -
அன்னதாதா என்று...
வாயும் வயிறும் -

வாழ்த்த; அவற்றை -
உண்ட மயக்கம் -
உறக்கத்தில் ஆழ்த்த...

பீமனை மட்டும் - தன்
பக்கத்தில் வைத்துக் கொண்டு...

பாலன்னத்தை -
பிசைந்து பிசைந்து - அவனுக்கு
ஒவ்வொரு கவளமாய் -
ஊட்டி விட்டான்...
திருதராஷ்டிரனின் -
தலைச்சன் பிள்ளை;

பாலன்னத்தில் - நஞ்சத்தைப்
பெய்துவைத் திருந்தான் -
தவம் செய்து கிடைத்த -
தவசிப் பிள்ளை!

பாசம் - ஒரு
பாசாங்காய் - துரியோதனன்
பார்வையில் தெரிந்தது -
பட்டாங்காய்!

பீமன் கண்ணுக்கு - அது
புலப்படவில்லை; அப்போது -
பங்காளியின் பிடியில் -
அவனொரு
பச்சைப் பிள்ளை!

சோற்றில் வைத்த கவனத்தால் -
சோதரன் அன்பில் - பீமன்
காற்றில் வைத்த கர்ப்பூரமாய் -
கரைந்து போனான்!

புளியோதனமும் -
ததியோதனமும் -
பீமன் வாய்க்குள் -
புகட்டியவாறே...

சொல்லாடினான் -
சுயோதனன்; சூதாய் சிரிக்கும் -
சுந்தர வதனன்!

'பீமனே! - எனக்குப்
பிடித்தமானவனே!
உனக்கும் எனக்கும் -
ஒரே வயது;
உனக்கும் எனக்கும் -
ஒரே மனது!
எந்தை வேறு;
உந்தை வேறு;
எனினும் இருவரின் -
சிந்தை வேறல்ல!

உனது எனும் எதுவும் -
எனது; அஃதேபோல்-
எனது எனும் எதுவும் -
உனது!
சகோதரனே! - சிற்சில
சமயங்களில் - நமக்குள்
பூத்ததுண்டு - அற்பமான
பூசல்கள்; அவற்றை -
மறந்துவிடு; அவையெலாம் -
முளைத்தவுடனேயே -
மரித்துப்போன -
மழை நாள் ஈசல்கள்!
நல்லவனே! இனி
நமது பாந்தவம்...
விரிசல் விழாத
வானம்; சுருதி -
விலகிச் செலாத
கானம்!'

சுயோதனன் சொல்லுக்கு -
பீமன்
செவிசாய்க்கவில்லை;
நீலம் -
நாடி நரம்புகள் வழியே -
நெடுகப் பரவி...
தரைமேல் -

தலை சாய்த்து
விட்டான்; மூச்சை –
தவணை முறையில் விட்டான்!

அந்தகன் மகன் – உடனே
அவசர அவசரமாக...

பீமனின் –
பருத்த உடம்பை –
காட்டுக் கொடிகளால் –
கட்டி – கங்கை
நீர்க்குள் – சூலங்கள்
நட்டிருந்த இடத்தில்...

உருட்டித் தள்ளினான்;
'ஒழிந்தது பீடை!' என்று –
உள்ளுக்குள் எள்ளினான்!

இனி –
பீமனின் உயிரைப்
பறிக்கும் பணியை...

அவன் –
நாடியில் பரவிய –
நீலமும் – ஆற்று
நீரினில் நிறுவிய –
சூலமும்...
ஐயம் திரிபற –
செய்யும் என்று –

காந்தாரியின் மகன் –
களிப்பேறி நின்றான்; பின் –
வசந்த மண்டபத்திற்கு –
உறங்கச் சென்றான்!

ஓர்
உடலில் இருந்து –
உயிரை உரிப்பது...
எப்படி?
எப்போது?
எங்கே?

என்பதை...

நிர்ணயிப்பதும் –
நிகழ்த்துவதும் –
நீலம் அல்ல;
சூலம் அல்ல; அது –

காலம் என்பதை – அந்தக்
கடையன் ஓர்ந்தானில்லை;
காரணம் – அவன்
சகுனியைத் தவிர – வேறு
சான்றோர் துணை
தேர்ந்தானில்லை!

ஆலகாலம் உண்டாலும் –
அந்திமகாலம் வாராது –
அகாலத்தில் அதுவாக –
அகலவே அகலாது ஆவி;
உயரத்தில் உள்ளவன் –
உள்ளங்கையில் உள்ளது –
உடற்கூட்டைத் திறந்து –
உயிரை விடுவிக்கும் சாவி!

அதனால்தான் –
ஆற்றின் ஆழம் நோக்கி –
புரட்டிவிடப்பட்ட –
பீமன்...

சூலம் –
செருகப்பட்ட இடத்தில் விழ –
காலம் –
கையெழுத் திடவில்லை;
ஆகவே – அவனை
அந்த ஆபத்து தொடவில்லை!

ஆனால்...
ஜலத்தில் இருந்த –
சர்ப்பங்கள் – அவனது
வலத்தில் இடத்தில் –
வாய் வைத்துக் கடித்தன; அவை

கடித்த இடங்கள் -
கருநீலமாகித் தடித்தன!

ஒரு
பிரக்ஞை அற்று - கங்கைப்
புனலின் ஆழத்திற்குள் -
போய்க்கொண் டிருந்தான் -
பீமசேனன்; பெருவனத்துப்
பூங்கொடிகளால் கட்டுண்ட -
பரா தீனன்!

அவன் -
உட்செவிக்குள் -
உமிழ்ந்தது நஞ்சை - ஒரு
கட்செவி!

அது -
செவிவழியே - அவன்
சிரத்திற்கு சென்றது;
முன்னம் - அவன்
மூளையைத் தாக்கியிருந்த -

பழைய விஷத்தை - இந்தப்
புதிய விஷம் தின்றது!

பீமன் -
பிழைத்துக் கொண்டான்;
தொய்ந்த அறிவு -
தெளிந்து நின்றான்!

கண்ணிமைக்கும் கணத்தில் -
கட்டுக்களைக் கழித்தான்;
கொத்திய பாம்புகளை - நகக்
கூர்கொண்டு கிழித்தான்!

நீருக்கடியில் உள்ள -
நாகலோகத்தில் -
இந்தச் செய்தி - ஓர்
இடிபோல் இறங்கியது;

பீதியிலும் -
பிரமிப்பிலும் -
பாம்பரசன் புருவம் - நெற்றிப்
பொட்டுக்கு ஏறியது!

# நாக லோகத்தில்...

'நாமென்ன -
நாங்கூழா?
மரவட்டையா?
மண்ணுணியா?
நாம் -
நச்சரவு! மனிதன் -
நம்மிடமா செய்வது -
சச்சரவு?'

நல்ல -
பாம்பொன்று -
பாம்பரசனிடம் -
பீமனைப் பற்றி -

பரிசீலிக்க - ஒரு
பிராது கொடுத்தது; வெகுளியில்
-
படம் எடுத்தது!

'ஒரு சில -
கூழைப் பாம்புகளையும் -
கோழைப் பாம்புகளையும் -
கூழைப்போல்
குழைத்துவிட்டால்...
மனிதன் என்ன -
மாவீரனா?
மகா தீரனா?

மனிதன் -
மாரிக்கு பயந்து - தன்
குடுமிக்கு மேல் -
குடை பிடிப்பவன்; நாம் -
மாரியை உண்டாக்கும் -
மாரிக்கே -
குடையாய் இருக்கும் -
கொடுப்பினை உள்ளவர்கள்!
நாம் -
புராரிக்கு அணி;
முராரிக்கு அணை;
பிறகு ஏன் - ஒரு
பராரிக்கு பயம்?'

சாரி சாரியாய் வந்து - சில
சாரைகள் கேட்டன -
சர்ப்பங்களின் -
சக்கரவர்த்தியிடம்!

'அற்றை நாளில் -
ஆதிமனிதன்...
சட்டையில்லாது - முண்டக்
கட்டையாய்த் திரிந்தபோதே...
நாம் -
சட்டையை தரித்தவர்கள்;
சட்டையை உரித்தவர்கள்!
நாமல்லவா - அவனிலும்
நாகரீகமான சாதி? - நம்மை
சட்டை செய்யாமல் - அவன்
சண்டை செய்வதென்ன நீதி?

நாம் -
சத்தியத்தைக் காக்கும் -
சர்ப்பம்; மனித -
சாதியில் அத்தகையோர் -
சொற்பம்!

நமக்கு -
நாக்கு இரண்டு;
வாக்கு ஒன்று!

மனிதனுக்கு -
நாக்கு ஒன்று;
வாக்கு இரண்டு!
ஆகவே...
அவனை நாம் -
விடக் கூடாது;
அவனால் -
அவதிகள் -
படக் கூடாது!'

ரெளத்திரத்தோடு -
ராஜநாகம் ஒன்று -
கூறியது; கூடவே -
சீறியது!
சீறியது என்றாலும் - அது
சொன்ன சொல் -
சீரியது என்பதனால்...

இதர நாகங்களும் - அதை
ஏற்றன; பீமனை -
அழிப்பதற்கு - ஆண்டையிடம்
அனுமதி கேட்டன!

நாகங்களின் -
நானாவித கருத்தையும் கேட்டு -
நகைத்தான்...
நாகலோகத்தின் -
நாட்டாண்மைக்கு -
உரியன்;
'வாசுகி' எனும் பெயரில் -
விளங்குகின்ற - கட்டு
விரியன்!

'என் -
பிரியமான -
பிரஜைகளே!

பாம்பென்றால் -
படை நடுங்கும்;
படைஞர் தம் -

நுடை நடுங்கும்!

இந்தப்
பழமொழியை - இன்றொருவன்
பொய்யாக்கி யிருக்கிறான்; ஒரு -
நடுக்கமோ -
நலிவோ இன்றி -
நம்மில் சிலரை நொறுக்கி -
நொய்யாக்கி யிருக்கிறான்!

அந்த -
வியாகுலம் - என்னுள்
வியாபித்து வதைக்கிறது;
ஆயினும்...
அவன் -
நிலத்தில் காட்டும் வலத்தை -
சலத்தில் காட்டினானே...
அந்த -
வன்மையும் வண்மையும் -
என்னுள்
வியப்பை விதைக்கிறது!

அவன் -
பௌருஷத்தின் -
பொழிவு;
பராக்கிரமத்தின் -
பிழிவு!
என் -
நெஞ்சுக்கினிய -
நாகர்களே!

அவனை -
அழிப்பதை விடுத்து - நம்
அதிதியாகக் கொள்வோம் - ஓர்
அழைப்பை விடுத்து!'

அரவரசன் இவ்வாறு -
ஆணையிட்டான்; பீமன் -
அழைத்துவரப் பட்டான்!

அவனைக் கண்டதும்...

ஆர்யகன் என்பவன் -
ஆனந்தக் கண்ணீர் விட்டான்!

அரவுகளில் ஒருவனான
ஆர்யகன் - ஆயர்குலத்து
வரவுகளில் ஒருவனாக
விளங்கியவன்; புகழ்சால் -
கோதையாம் குந்தியின் -
தாதைக்குத் தாதைக்குத்
தாதையாய் - முன்னாளில்
துலங்கியவன்!

எனவே - பீமன்
இவனது -
பௌத்திரனுக்குப்
பௌத்திரன்!

பெயரனுக்குப் பெயரனை; பல -
பெயர் பெயர்த்தாலும் - தனது
பெயர் எஞ்ஞான்றும்
பெயரானை;

ஆண்யானை -
அனையானை;
இனிய தருமனின் -
இளையானை;
வன்கணாளர் எவர்க்கும் -
வளையானை;

கதை யேந்தும் -
கரத்தானை; நெஞ்சு -
உரத்தானை; அத்தின -
புரத்தானை;

சோமனை -
குலமுதலாய்க் கொண்ட -
பீமனை...
ஆர்யகன் -
அடையாளம் கண்டு -
ஆரத் தழுவினான்;

தனது -
பாட்டனின் பாட்டன் -
காட்டிய பிரேமையில் -
பீமனும் முழுகினான்!

வாஞ்சையோடு -
வருடிக் கொள்ளும்...

பாட்டனைப் பேரனைப்
பாம்பரசன் பார்த்தான்; பின் -
பிரியமான - தன்
பேச்சமுதை வார்த்தான்!

'என் -
அன்பிற்குரிய -
ஆர்யகனே!

பீமனில் - நான்
வீரனைக் கண்டேன்; நீ -
பேரனின் -
பேரனைக் கண்டாய்!

உன் -
எள்ளுப் பேரனை -
ஏற்றபடி நான் -
எதிர்கொள்ள வேண்டும்; இதுபோல் -
பேராண்மையை;
பேரா ஆண்மையை - யான்
பார்த்ததில்லை யாண்டும்!

நம் -
உபசாரங்கள் முடிந்து - பீமன்
ஊர் திரும்புகையில்...

நீல -
நீரோட்டம் உள்ள -
நல்ல வயிரத்தை;

கரும்
பச்சை நிறங்காட்டிப்
பளபளக்கும் மரகதத்தை;

பன்முறை -
பழுக்கப் பழுக்கப்
புடம் போட்ட -
பசும் பொன்னை;

முக்கடலில்
முக்குளித் தெடுத்த -
முத்துக் குவியலை;

கொடியின் -
மடியில் -
தவழக் கிடந்த -
பவழத்தை;

எட்டுத்
திக்கும் ஒளியைத்
துப்புமாறு - நம்மவர்
கக்கும் மாணிக்கக்
குப்பையை...

கூடை கூடையாய் - பீமனுக்குக்
கொட்டிக் கொடு;
போதாதெனில் -
மூடை மூடையாய் - இன்னும்
கட்டிக் கொடு!

அவன் -
அளப்பரிய -
ஆற்றல் அரசு; இது -
அவனது -
ஆற்றலுக்கு - நான்
அளிக்கும் பரிசு!'

இப்படி வாசுகி -
செப்பியதும்...

ஆர்யகன் -
அடக்கத்தோடு பேசினான்;
அட்சர அட்சரமாய் -
சொல்லை
அளந்து வீசினான்!

'நாகராஜனே! என் -
நாவிலும் நெஞ்சிலும் -
நீங்காது வீற்றிருக்கும் -
நல்ல நேசனே!

எனது -
உறவினன் பால் -
உனக்கிருக்கும் அன்பை -
ஓர்ந்தேன்; உன்னொத்த -
தயாளன் இல்லையென்று -
தேர்ந்தேன்!

எனினும்...
எளியேனின் விண்ணப்பம் -
ஒன்று; இதனை -
ஏற்று அருள்புரிந்தால் -
நன்று!

பொன்னும் மணியும் - என்
பேரனுக்கு எதற்கு?
அவனுக்கு -
ஊக்கமும் உள்வலியும் -
உதவுகின்ற தன்மை -
உள்ளதோ அதற்கு?
வரும்;
போகும்! - இத்தகு
பொருளால் - இங்கு
ஒருவனுக்கு - என்ன
ஆகும்?

காசு பெருகினால் - கூடவே
காசு பெருகும்; தேக -
பலம் பெருகினால் - கூடவே
நலம் பெருகும்!
ஆதலால்...
அய்யனே!

நம் -
ராஜாங்கத்தில் - நிறைய
ரசக்குடங்கள் உள்ளன; அவை -
அருந்துவார்க்கு -
ஆயிரம் ஆனை பலத்தை -
அளிக்க வல்லன!

அந்த -
அமுதத்தை -
ஆறஅமர அருந்தச்சொல்லி...
குமுதத்தை மலர்விக்கும் -
குலத்தில் பிறந்த -

பீமனுக்கு - விருந்தாகப்
படை! - பிறகு அவன்
பலத்திற்கு முன்நிற்குமோ -
படை?

எவ்வளவு குடங்கள்
இயலுமோ - அவன்
அவ்வளவு குடங்கள்
அருந்தட்டும்; வேழங்களின் -
பலங்கள் அனைத்தும் -
படிப்படியாய் - அவன்
பாதாதி கேசம் - பரவிப்
பொருந்தட்டும்!'

ஆர்யகன் கோரிக்கையை -
அரவரசன் கேட்டான்; உடனே -
ஆவன செய்யுமாறு - ஏவலர்க்கு
ஆணைகள் போட்டான்!

பீமனுக்கென்று -
பிரத்தியேகமான -
மரியாதைகள் -
முடுக்கிவிடப் பட்டன;
நாகர்களின் -
நல்லுப சாரங்கள் -
ஊதையின் மகனின் -
உள்ளத்தைத் தொட்டன!

காற்றின் கன்று -

கிழக்கு நோக்கிக்
குந்தினான்; உண்ணுமுன் -
நாகர்களுக்கு - தனது
நன்றிப் பெருக்கை - குறு
நகையால் சிந்தினான்!

அமுதக் குடங்கள் -
அவன் முன் -
அணிவகுத்தன; அவற்றின் -
உள்ளிருந்து வெளிப்போந்த -
உயரிய வாசத்தில் - பீமனின்
உள்நாக்கும் உதடுகளும் -
உமிழ்நீரை உகுத்தன!

ஒரு குடத்தை எடுத்தான்;
ஒரே மூச்சில் குடித்தான்!
மறு குடத்தை எடுத்தான்;
'மடக்'கென்று முடித்தான்!

இன்னணம்...
எட்டுக் குடங்களை -
எடுத்துப் பருகினான்; தலைக்கு -
ஏறிய போதையால் -
இருவிழி செருகினான்!

படம்விரிக்கும்
பாம்புகள் - பீமன் துஞ்ச
படுக்கை விரித்தன;
அவன் உறங்க - பெண்
அரவங்கள் கூடி - ஓர்
ஆராட்டுப் படித்தன!

எட்டு நாள்கள் -
இமைகளைத் திறவாமல் -
இருந்தான் பிள்ளை;
எட்டு நாள்கள் -
இமைகளை மூடாமல் -
இருந்தாள் அன்னை!

---

# குந்தியின் குமுறல்

நீர் விளையாட்டும் -
நிலாச் சாப்பாடும் -
முடிந்தபின் - இலேசாய்
விடிந்தபின் -

நகரம் திரும்ப -
நிச்சயிக்கையில் தான்...

கட்டைவிரலைக் காணாமல் -
ஒரு
கைவிரல் நான்கும் -
கவலைப் பட்டன; கண்ணீர்த்
திவலை விட்டன!

'என்ன ஆனான்? - பீமன்
எங்கு போனான்?

இன்னும் கால்வாசிகூட -
இருட்டு பிரியவில்லை;
எந்தப் பூவிலும் - ஓர்
இதழ்கூட விரியவில்லை;
புல்லின் பனித்துணியை -
பகலவன் உரியவில்லை;
பத்தடியில் நிற்பவன் - நம்
பார்வையில் தெரியவில்லை!
இதற்குள் எழுந்து -
என் இளவல்...

எங்கு போனான்?
என்ன ஆனான்?

நாளும் -

வான் விழிக்குமுன்னே -
தான் விழிக்காதவன் - இன்று
நான் விழிக்குமுன்னே -
ஏன் விழித்தான்?

என்ன ஆனான்? - பீமன்
எங்கு போனான்?'

தருமன் -
துரியோதனனைக் கேட்டான்;
அவன் -
நகைச்சுவைத் துணுக்கு ஒன்றை -
நக்கலாகத் தூக்கிப்போட்டான்!

'தருமா! - உனக்குத்
தம்பிமேல் ஆசை; உன் -
தம்பிக்கு - அவன்
கும்பிமேல் ஆசை!

கொண்டைச்சேவல் கூவுமுன் - அவன்
கும்பிக்குள்ளிருந்து - ஒரு
சண்டைச்சேவல் கூவியிருக்கும் -
சோறுகேட்டு;
கேட்டவுடன் போடாவிட்டால் -
குடல்களைத் தின்றுவிடும் -
அது
கொஞ்சம் கொஞ்சமாக -
கொத்திக்
கூறு போட்டு!

பலருக்குப்
பசி வந்தால் -
பத்தும் பறக்கும்;
பீமனுக்குப்
பசிவந்தால் -
பாதம் பறக்கும்!

கர்த்தபம் கெட்டால் -
குட்டிச்சுவரு;
வீமன் கெட்டால் -
வட்டில் சோறு!

தருமனே! - என்
தமையனே!

உனக்கும் எனக்கும் -
ஒருசாண் வயிறு;
உம்பிக்கு உள்ளது -
உப்புநீர்க் கிணறு!
அரண்மனைக்குப் போனால் -
அங்கே நீ பார்க்கலாம்...
அன்னக்குவியலை -
அள்ளிவிழுங்கும் - உன்
அன்புக் குவியலை!'

எல்லோரும் தன்போல் -
நல்லோரே எனஎண்ணும் -
இயல்புடைய காரணத்தால்...

தருமபுத்திரன் நம்பினான் -
துரியோதனன் சொல்லை;
அவனொரு -
மருமபுத்திரன் என்றவன் -
மனத்தாலும் நினைத்தானில்லை!

'வீமன் -
வீடுவந்து சேரவில்லை!' எனும் -
விவரத்தை...
தன்மனை திரும்பியதும்தான் -
தருமன் தெரிந்தான்; தீயால் -
பற்றவைக்காமலே - தன்
பாதாதி கேசம் எரிந்தான்!

பீமனின் -
பிரிவானது...

அர்ச்சுனன் முதுகின் -
அச்சொடித்தது; ஓர் -
அச்சத்தை விழிகளில் -
அச்சடித்தது!

நகுலன் இதழ்களிலிருந்து -
நகுதலை நீக்கியது;
சகாதேவனை - சோகத்தின்
சகா ஆக்கியது!

சென்றது ஐவர்;
மீண்டது நால்வர்!
பெற்றவள் குடலை - மாவாய்ப்
பிசைந்தது கவலை!

பிரமை -
பிடித்தவள்போல் - குந்தி
பிச்சேறி நின்றாள்; பின் -
விதியை -
வினைப்பயனை - தன்
வாயில்போட்டு மென்றாள்!

'பொல்லா விதியே!
ஈவும் இரக்கமும் -
இல்லா விதியே!
என் -
பொட்டைப் பறித்தாய்;
பூவைப் பறித்தாய்;
பொட்டும் பூவும் தந்த -
தேவைப் பறித்தாய்!
என் -
இல்லை - உன்போல்
இங்ஙனம் சிதைத்தார் -
இல்லை!

என்
மகனையும் பறித்தால் - நீ
மண்ணாகிப் போவாய்; ஒரு -
நோவு வந்து - நீயும்
சாவு வந்து சாவாய்!

காற்றுக்குப் பிறந்தவன் -
காற்றுக்கு வழியின்றி -
கூற்றுக்கு இரையாவதா? - இங்கு
விதி வகுத்ததே -



வாழ்க்கை யென்றால் - பின்
வெறுங்கல்லென இறையாவதா?

கருப்
பையில் வளர்த்த -
பவழம்; நான் -
கையில் எடுத்த -
கனகம்; என் -
மெய்யில் உதித்த -
வயிரம்; ஒரு -
பொய்யில் விளைந்த -
பொருளா?

இல்லை! என்பிள்ளை -
இல்லை யென்ப தில்லை;
இருக்கின்றான்! இருக்கும் -
எல்லை எந்த எல்லை -
என்பதைத்தான் - இங்கு
எடுத்துரைப்பா ரில்லை!

தருமனே! - உன்
தம்பியரோடு சென்று - உன்
தம்பியைத் தேடு; என்னால் -
தாங்க முடியவில்லை பாடு!'

குரல் தழுதழுக்க -
குந்தி கூவினாள்;
கூவி விட்டு - மூலையில்
குந்திக் கேவினாள்!

'தாயே!
தவிப்பை விடு! - மிகமிகத்
தாற்காலிக மானது - இந்தத்
துயர வடு!
வேளை தீயதாயின் -
வேழம் கூட - சிறு
கல்தடுக்கி விழும்;
கால் சுளுக்கி அழும்!

வேளை நல்லதாயின் -
விஷம்கூட - ஒரு
நல்மருந்து ஆகும்;
நோய்தவிர்ந்து போகும்!
இது -
வேளை செய்த
வேலை; எனினும் -
வெய்யி லடித்து -
வற்றிப் போகாது -
வேலை!

முயல்
கறைவைத்த நிலாவை -
கறுத்த மேகங்கள் -
சிறைவைக்கும்; காற்று ஓர் -
அறைவைத்து மேகங்களை -
அப்புறப்படுத்தி - நிலாவை
சிறைமீட்கும்!

மாதாவே!
மீண்டும்...
நால்வர் ஐவராகும் -
நாள்வரும்; நம்பிடுக!' என -
நற்றாயைத் தேற்றினர் -
நால்வரும்!

பீமனைத்தேடி -
புறப்பட்டான்...
தருமபுத்திரன் - தன்
தம்பியரோடு; தமையனை -
தாதையாய்த் தொழும் -
நம்பியரோடு!

கங்கா நதியின் -
கரை முழுதும் -
கண்கள் எட்டால் -
கழுவிப் பார்த்தனர்;
கங்கைக் குள்ளேயே -
முழுகிப் பார்த்தனர்!

கொடிய வனத்தின் -
நெடிய பரப்பை -

குறுக்கும் மறுக்கும் -
கால்கொண்டு அளந்தனர்;
முக்கு முடுக்கெல்லாம் -
திக்கு திசையெல்லாம் -
இண்டு இடுக்கெல்லாம் -
இரைக்க இரைக்க...

தேடித்தேடி - பீமன்
தென்படாமல் -
நொந்து நூலாகி -
நாடிகள் தளர்ந்தனர்!

வெறுங் கையோடு - பிள்ளைகள்
வீடு திரும்பியதும் - குந்தி
நொறுங்கிப் போனாள்; மன -
நோயாளி ஆனாள்!

நல்லவேளை;
நோய்தீர்க்கும் -
நல் மருந்தாய்...
விதுரன் - அங்கு
வந்து சேர - அவனிடம்
வாய்விட்டழுதாள் - குந்தி
விழிநீர் சோர!

'விதுரனே!
வாய்ச் சொல்லால் -
நோய் தீர்க்கும் -
மதுரனே!
என் -
கண்மணி பீமனை -
காணவில்லை;
துயிலெனும் -
துகிலை...
என் -
பூவிழிகள் -
எட்டு நாள்களாய் -
பூணவில்லை!
இன்னும் -
உயிர்த்திருக்கிறேன்;
ஒருதுளியும் - என்
நல்லுடல் இதுபற்றி -
நாணவில்லை!

நான் - கை
நழுவிப் போன -
ஒருவனுக்காக -
உடனே மரிப்பதா?
இல்லை...
எஞ்சியுள்ள - இந்த
நால்வருக்காக -
நல்லுயிரை தரிப்பதா?

என் -
பெறற்கரிய பேற்றை;
பெருவீரம் -
பொங்குகின்ற ஊற்றை;
பேசற்கரிய -
பேராண்மையின் ஈற்றை;
பொன்மடியில் -
பூத்தெழுந்த நாற்றை;
புகழ்வெளிச்சம் -
பாய்ச்சுமொளிக் கீற்றை;
பீமனென்னும் -
புண்ணியப்பூங் காற்றை...

துரியோதனன் என்னும் -
துக்கிரிதான் -
தொலைத்துத் தலைமுழுகத்
திட்டமிட் டிருப்பான்;
பதவி மாமிசத்தைப்
பறித்துத் தின்ன -
வல்லூறுபோல் - அவன்தான்
வட்டமிட் டிருப்பான்!

இப்படியெல்லாம் -
இல்லாததும் பொல்லாததும் -
எண்ணி எண்ணி...
மருள்கிறது - என்
மனம்;

அறிவார்ந்த விதுரனே!
ஆறுமா – மனத்தில்
ரத்தம் வடியுமென் –
ரணம்?'

கேள்வி கேட்டாள் –
குந்திதேவி; விதுரன் –
பதில் சொன்னான் –
பரிவு மேவி!

'குந்தியே!
குணவதியே! – ஒரு
கோதிலா –
கற்புநிதியே!
உன் –
கண்மணி பீமன் –
காணாதுபோன சேதியை – நீ
கூறவேண்டாம் யாருக்கும்;
மீறிக் கூறினால் –
மரணம் வந்துசேரும் –
மீதமுள்ள நான்கு பேருக்கும்!

துரியோதனன் – ஒரு
தூர்த்தன்; சன் –
மார்க்கம் பேணாத –
மூர்க்கன்!

பங்காளிகளை –
பகையாளிகளாய் –
குறிக்கும் –
குரோதம் உள்ளவன்; தனக்குக்
கைக்கும் பேரை –
தைக்கும் முள்ளவன்!

அவனை –
அடுத்தவர் அறிய –
ஏசாதே; அவனைப் பற்றி –
எவரிடமும் ஏதும் –
பேசாதே!

ஒன்றுரைப்பேன்; கேள்!
உன் பிள்ளைகளுக்கு...
நீளமான ஆயுள் –
நிச்சயம் உண்டு; இது –
விதுரன் சொல்வதல்ல; அந்த –
வியாசன் சொன்னது அன்று!

விரைவில் – பீமன்
வருவான்; உன்
துயருக்கு விடுதலை
தருவான்!'

விதுரனின் –
வாய்மொழியைக் கேட்டதும்...
குந்திதேவி –
குழப்பம் நீங்கினாள்;
எட்டு நாள்களுக்குப் பின் –
இமைமூடித் தூங்கினாள்!

இங்கு –
தாயின் கண்கள் –
துயிலாடையைப் புனைந்தன;
அங்கு –
தனயனின் கண்கள் –
துயிலாடையைக் களைந்தன!

---

# வீமன் – வீடு வந்தான்!

உறக்க ஊசியின் –
ஒற்றைக் காதில் –

மயக்க நூலை –
மெல்லக் கோத்து –

நன்கு தைக்கப்பட்டிருந்த –
நான்கு இமைகளிலும்...

பையப் பையத் –
தையல் விட்டது;

எட்டு நாள்களாய் –
இருட்டில் கிடந்த...

வீமனின்
விழிகளின் மேல் –
'பளிச்'செனை – காலை
வெளிச்சம் பட்டது!

பிலம்போன்ற – தனது
பேழ்வாயைத் திறந்து...

அதன்வழியே –
கொட்டாவி யொன்றை –
அனுப்பினான் வெளியே!

ஒரு வாரமும் –
ஒரு நாளுமாய்...

நீட்டி மடக்காமல் –
நமுத்துக் கிடந்த –
கைவிரல்கள் –
ஐயிரண்டையும்...

நிதானமாக –
நெடுக நீவிநீவி –
நீள இழுத்து –
நெட்டி எடுத்தான்!

ஓர் –
ஈரத் துவாலையைப் போல் –
இடுப்பை முறுக்கி –
உடம்பை –
ஒன்பது கோணல்களாக்கி –
சௌக்கியமாக – ஒரு
சோம்பல் முறித்தான்!

பிறகு –
படுக்கையிலிருந்து – ஒரு
பந்துபோ ால் எழுந்து...

சொட்டுகின்ற –
பொட்டு வியர்வையை –
சுட்டுவிரலால் வழித்தான்;

விநாடி நேரம் –
வந்திருக்கும் இடம்
விளங்காமல்...
திருவிழாவில் –
தொலைந்துபோன
குழந்தைபோல் –
திறுதிறுவென விழித்தான்!

பீமன் –
பள்ளியெழுந்த சேதியறிந்து...
வாசுகியும் ஆர்யகனும் –
வந்தனர்; அவன் செவிகளுக்கு –
தித்திக்கும் தகவல்களைத்
தந்தனர்!

'பீமனே! – பெரும்
பீடுடைய நாமனே!
இரு
புயங்கள் பூரிக்க நடக்கும் –
புயலே;
பாண்டவர்க்குக் கிடைத்த –
புதையலே!
குந்தியின் –
உந்தியில் –
பவனன் வரைந்த – வீரப்
பனுவலே!

பலத்தில் – இனி நீ
பத்தாயிரம் –
மத்த வாரணத்தை –
ஒத்த வாரணம்;
ஆசை ஆசையாய் – நீ
அருந்திய – எட்டுகுட
அமுதம்தான் –
அதற்குக் காரணம்!

வசையறு தேகம் –
வாய்க்கப் பெற்றாய்; அதை –
வச்சிரக் குழம்பில் –
தோய்க்கப் பெற்றாய்!

உன்முன் நின்று – இனி
வீரவசனங்களை –
ஒப்பிப்பா ரில்லை; ஒப்பித்துத்
தப்பிப்பா ரில்லை!

உன் வலிமைக்கு – இனி
வரை யேது? – உன்
விரல்பட்டால் பொடியாத –
வரை யேது?
எதிரிகள் எறியும் –
ஈட்டிகள்...
இனி உன்னளவில் – வெறும்
ஈர்க்குகள்!

வெருவலர் வீசும் –
வாள்கள்; வேல்கள்...
இனி உன்னளவில் –
ஈரவைக் கோல்கள்!

போர்க்களம் –
புகுகின்ற...
களிறும் – உனைக்கண்டால்
பிளிறும்;
வெருவலில் – கரியமேனி
வெளிறும்!

உனை –
நூறும் பொருட்டு –
நூறுகஜங்கள் வரினும்...
நீயொரு –
நெடுமூச் செறிந்தால் –
நூறுகஜங்கள் –
நூறுகஜங்கள் –
தூரப்போய் விழும்; உயரத்
துதிக்கை தூக்கியழும்!

எப்படையும் – நீ
எதிர்வந்தால் – பயத்தில்
வெப்படையும்;
வேர்வையில் குளிக்கும் –
போர் உடையும்!

இவைமட்டுமல்ல பீமனே!
இன்னொன்றும் கேள்!
இவ்விடம் வந்து – அமுதத்தை
இவ்விதம் அருந்தியதால் – இனி
எவ்விடம் சென்றாலும் –
உன்னை
எவ்விடம் என்செய்யும்?

நாகமும் நஞ்சும் – இனி உனது
நட்பென நடந்து –
நாளும் பொழுதும் – உனக்கவை
நலங்களைப் பெய்யும்!
நீ –
வனம் புகுந்தால் – இனி
வனம் நடுங்கும்;
வனம்வாழ் –
விலங்குகளின் –
மனம் நடுங்கும்;
வனத்தில் திரியும் –
வன தேவதைகளின் –
இனம் நடுங்கும்!

ஆரையும் –
அரளவைக்கும் – உன்
ஆகிருதி; ஆயினும் உன் –
ஆற்றலைப் பயன்படுத்து –
அடுத்தவர் நலங்கருதி!'

இங்ஙனம் –
இனிய சொற்களை –
இதழ்வழி உதிர்த்து...
வாய்நிறைய – பீமனை
வாழ்த்தினான் வாசுகி;
அடுத்துப் பேசினான் –

ஆர்யகன் என்னும் விவேகி!

'என் -
எள்ளுப் பேரனே! - எவரும்
எள்ளா வீரனே!
நீ -
இங்கு வந்ததும் - உன்னை
இன்னானென - நான்
இனங்கண்டதும்...
நீ -
அதிதியாய்த் தங்கி -
அட்ட குடங்களில் -
அமுதம் உண்டதும்...
நீ -
அதன் பயனாய் - பதினாயிரம்
அத்திகளின் வலிவை - உன்
ஆக்கையில் கொண்டதும்...

காலம் வகுத்த -
கணக் காகும்; இதில் -
எனக்குற்ற இன்பம் - ஒரு
கணக்கற்ற தாகும்!

வாரிசூழ் -
வையகத்தில்...
வல்லவனா யிருப்பவன் -
நல்லவனா யிருப்பதில்லை;
நல்லவனா யிருப்பவன் -
வல்லவனா யிருப்பதில்லை!

உன்னை -
வல்லவனாயும் -
நல்லவனாயும் -
வல்லான் -
வகுத்திருக்கிறான்; புவிக்கு -
சேமம் தரும் -
செய்ய குணங்களால் -
உனையொரு
தாமம் போல் -
தொகுத்திருக்கிறான்!

உன் -
சௌரியத்தை -
சாதுரியமாய் -
செலவழி; அது உன்னை -
சேர்க்கும் நலவழி!

ஒன்றை யோசி! - உனக்கோர்
உண்மை புலப்படும்; உன் -
இறை நம்பிக்கை -
இன்னும் பலப்படும்!
போட்டானே திட்டம் - உன்
பெரியப்பன் பிள்ளை! நெஞ்சில் -
வேட்டானே உன் வீழ்ச்சியை;
வீழ்ந்தாயா நீ? இல்லை!

என்ன காரணம்?
எடுத்துரைக்கிறேன்; கேள்!

ஓர் -
ஈ; எறும்பைக்கூட -
எவனாலும் - இங்கு
உயர்த்தவோ -
வீழ்த்தவோ ஒண்ணாது;
உன்வினை யன்றி -
உனக்கு - ஒருதுளி
நன்மையும் தீமையும் -
இன்னொன்று பண்ணாது;
ஈசன் திருவுளம் -
இட்டவிதி மீறி - முன்கூட்டி
எவ்வுயிரும் - அந்த
எமனுலகை நண்ணாது;

இன்பத்தில் துள்ளுவார்;
துன்பத்தில் துவளுவார்;
இம்பர் இருப்போர் -
இவையெலாம் எண்ணாது!

சாகவேண்டிய
உன்னை - இயற்கை
சாகடிக்காது விட்டது;

உன்னால் –
ஆகவேண்டியவை இங்கு –
இன்னும்
அநந்தம் உள்ளது!

அன்புள்ள பீமனே!
அறத்தையே ஆடையாய் – உன்
அரையில் உடுத்து; நீ –
ஆற்றும் செயல்களால் – உன்
அன்னையின் பெருமையை –
அகலப் படுத்து!'

அன்புசால் –
ஆர்யகனின் – நீண்ட
அறிவுரையை...

பீமன் –
செவிகளில் வாங்கினான்;
பின் – தன்
பாட்டனுக்குப் பாட்டனை...
சேவித்து – அவன்
சேவடிகளை – தன்
சென்னியில் தாங்கினான்!

பீமன் –
பூவுலகு புறப்படுமுன்...
திவ்விய வாசனை –
திரவியங்கள் –
தூவப் பெற்ற –
தூய தண்ணீரில்...

குளித்தான்; சிறு –
குழந்தை போல் –
நீர்த் தொட்டியில் –
நெடுநேரம் அளைந்து –
களித்தான்!

பிறகு – ஒரு
பூந்துவாலையை எடுத்து...
தலையை –
துவட்டிக் கொண்டான்;

தும்பைப்பூ நிகர்த்த –
துணிகளை – தனது
திருமேனியில் – தேசுற
தரித்து நின்றான்!

மூர்க்கமான விஷங்களை –
முறியடிக்கக் கூடிய –
மூலிகைகளை...
நாகர்கள் – அவனது
நெடுங் கரத்தில் –
காப்பு நாணாகக்
கட்டினர்;
அதன்பின் – மந்திரித்த
அட்சதைகளை – அவன்
குடுமியின் மேல் –
கொட்டினர்!

பிறகு –
பீமசேனன்...
சௌகரியமாக –
சம்மண மிட்டு –
நேர்த்திமிகு –
நாக கன்னியர் –
பரிவொடு –
பரிமாறிய...
சித்திரான்னங்களை –
சுசிருசியாகப் புசித்தான்;
உண்டிகளுக்கு நடுவே –
ஒளிந்துகொண்டு வசித்தான்!
போசன மிட்டவர்க்கு – தன்
பூரண திருப்தியை – ஓர்
ஏப்பத்தின் மூலம் –
எடுத்து விரித்தான்; பின் –
திருநீற் றமுது தடவி –
தாம்பூலம் தரித்தான்!

வாசுகியின் –
வாழ்த்தையும்;
ஆர்யகனின் –
ஆசீர் வாதத்தையும்...

வாங்கிக் கொண்டு - பீமன்
விடை பெற்றான்;
விடை பெறுகையில் - சிறிது
வருத்த முற்றான்!

நாகர்கள் - அவனை
நாகலோகத்தில் இருந்து...
ஏந்தி -
எடுத்து வந்து...
கங்கா நதியின் -
கரையில் சேர்த்தனர்;
பீமனின் -
பிரிவை எண்ணி -
கண்கலங்கி -
கண்ணீர் வார்த்தனர்!

வீமன் -
வீடுவந்து சேர...
கொதித்துக் கிடந்த -
குந்தியெனும் குணவதியின் -
கும்பி குளிர்ந்தது;
குளிர்ந்து கிடந்த -
கொடியவன் துரியோதனனின் -
கும்பி கொதித்தது!

---

# கிருபாசாரியன்

மகரிஷி கௌதமரின் -
மகன் மகன்...
கீர்த்திமிகு -
கிருபாசாரியன்!

அஸ்திரத்தால் -
அனைத்தையும் -
அஸ்தி ஆக்கவல்ல -
அதிசய ஆரியன்!

புல்லேந்தும் கை -
வில்லேந்தியது; புரிநூலின் -
தொட்டில் போன்ற
தோளில் - அம்புப்
புட்டில் தொங்கியது!

சதுர்வேதம் ஓதும் நா -
தனுர்வேதம் ஓதியது; எதிலும் -
நெறியைப் பார்க்கும்
கண் - எய்யும்
குறியைப் பார்த்தது!

சாதியில் அவனொரு -
வேதியனாயினும் -
சத்திரியன் போல் -
சமர்க்குணம் பூண்டவன்;
பார்ப்பில் பிறந்த
பரசுராமனை -
வார்ப்பில் மீண்டும் -
வடித்தது போன்றவன்!
கிருபாசாரியனுக்கு -
'கிருபி' என்று -
சோபிதம் மிக்க - ஒரு
சோதரி உண்டு!

இந்த -
இருவரும்...
ஒரு -
பெண்டில் -
உதித்தவரல்ல; நாணல் -
தண்டில் உதித்தவர்கள்!

மகரிஷி கௌதமரின் -
மகன்...
சரத்வான் எனும் -
சத்தியவான்!

அவன் –
புலன்களைப் புறங்கண்ட –
புண்ணியவான்;
கலவி எண்ணத்தை –
கருத்திலும் இருத்தாத –
கண்ணியவான்!

சூழ்நிலையால் – ஒரு
சுடுநிலை வரினும் –
நடுநிலை வழுவாத –

நியாயவான்; அவன் சிந்தை –
மும்மல மேகங்கள் –
மொய்க் காத –
நிர்மல மான –
நெடிய வான்!

அவன்...
ஆரண்யத்தில் –
அமைதி அமைந்த – ஓர்
ஆற்றங் கரையின் –
அணிமையில்...
தனக்கென – ஒரு
தவப்பள்ளி யெழுப்பி...

யாண்டும் –
யாகங்கள் புரிந்தான்;
அக்கினியில் –
அவிகளைச் சொரிந்தான்!
உண்டியும் –
உறக்கமும் இன்றி...
தன்னைச் சுருக்கினான்;
தவத்தைப் பெருக்கினான்!
ஒழுக்க –
உஷ்ணத்தால் –
வியனுலகை –
உருக்கினான்!

வாசவன் –
ஆசனத்தை –
நாளாக நாளாக –
நெருக்கினான்;
புரந்தரனின் –
புகழ்ப் பதாகையை –
கொஞ்சம் கொஞ்சமாய் –
கருக்கினான்!

தன் –
அரியாசனத்திற்கு –
ஆபத்து வந்தது என்று –
அரண்டான் –
ஆயிரம் கண்ணன்;
இந்திராணியின் –
இடையைக் காட்டிலும் –
இளைத்துப் போனான் –
இமையார் மன்னன்!

வேர்க்காத தேகம் –
வேர்த்தது; என்றும் –
நீர்க்காத மோகம் –
நீர்த்தது!
சோமச்சாறு –
சுண்டையாய்க் கைத்தது;
சப்பிர மஞ்சம் –
சப்பாத்தியாய்த் தைத்தது!

அரம்பையின் அலாரிப்பு –
அலட்டியது;
திலோத்தமையின் தில்லானா –
திகட்டியது;
உருப்பசியின் வர்ணம் –
உறுத்தியது;
மேனகையின் ஜதிஸ்வரம் –
வருத்தியது!

இந்திரன் –
இராகு விழுங்கிய –
சந்திரன் ஆனான்;
சரத்வானை எண்ணி –
சிறிது சிறிதாக –

சிதறிப் போனான்!

அயிராவதம்;
அழகிய தேவதரு;
அமராவதிப் பட்டணம்...
அனைத்தையும் இழந்து -
ஐயம் ஏற்கும் -
அவலம் வருமோ - எனும்
ஐயம் வந்தது;
அருந்தவசி சரத்வான் -
ஆற்றும் தவம் - அந்த அளவு
அமரேசனுக்கு -
அச்சம் தந்தது!

முனிவன் தவம் - தன்
முடியைப் பறிக்குமுன்...
புனிதன் பேணும் -
பிரமசரியத்தை -
புரந்தரன் -
பேர்க்க எண்ணினான்; ஓர் -
அப்சரசை அனுப்பி -
அந்தப் பணியை -
முடிக்க முடியும் - என
முடிவு பண்ணினான்!

தேவ வனத்தில் -
தேன் பிலிற்றும்...
ஜாதிப் பூக்களில் -
ஜகத்ஜோதியாய் -
ஜ்வலிக்கும் ஒரே பூ -
ஜாலவதி!
ஜாடைகள் -
ஜாலரா தட்ட...
சதங்கைகள் -
ஜதிகள் சொல்ல...
நாணம் -
நட்டுவாங்கம் செய்ய...
நளின -
நடைபயிலும் - ஒரு
நீல நதி; நீண்ட -
சடைபுரளும் - அந்த
ஜாலவதி!
ஜாலவதியின் -
ஜாலத்தில் அவதியுறா - ஆண்
ஜாதியென்பது - எந்த
ஜகத்திலும் இல்லை; மனத்தை -
மோகிக்க வைக்கும் -
மோக்கத்தில் சேர்க்கும் - அந்த
மோகன முறுவல் - எந்த
முகத்திலும் இல்லை!

கச்சுக்குள் இருப்பினும் -
கரகங்கள் - வானோரைப்
பிச்சுக்குள் இருத்தும் -
பேராற்றல் பெற்றவை; பட்டுக்
கலைக்குள் இருப்பினும் -
கதலிகள் - இமையாரை
வலைக்குள் இருத்தும் -
வசீகரம் உற்றவை!

சரத்வானின் -
சித்தத்தை -
சரசத்திற்கு -
சித்தப் படுத்தி...
அதை -
அசுத்தப் படுத்தி...
ஆற்றும் -
அருந் தவத்தை -
தகர்த்துத்
தரைமட்ட மாக்க...

இன்னொரு விசுவாமித்திரன் -
எனக் கணக்கிட்டு - நூறு
விழுக்காடு - விரகத்தில்
விழுக்காட்ட...
அடங்கா -
ஆசையெனும் -
அழுக்காற்றில் -
முழுக்காட்ட...
ஜாலவதி - எனும்

கோல மதி -
வானிலிருந்து -
வையம் இறங்கியது;
வையமே - அதன்
வனப்பு வெளிச்சத்தில் -
ஒளிமயமாய்ப் பிறங்கியது!

உக்கிரம் மிகுந்த -
ஒரு நோன்புக்கு - ஊறுசெய்ய
வக்கிரம் முயன்றது; சரத்வான் -
முன்நின்று - அது

முயற்கூடொத்த முகங்காட்டி -
மோக நடம் பயின்றது!

உள்தொண்டையில் -
ஓராயிரம் கோகிலங்களை -
உட்கார்ந்து பாடச் சொல்லி...
சிங்கார சங்கீதத்தை -
சரத்வான் செவிகளில் - தன்
குரல் வழியே துப்பினாள் -
கோதை! கால் நடக்கும் -
ஊதை!

ஈரமான இசை -
இருசெவி வழி - அவனது
இதயத்தில் வழிந்து - இழிந்த
இல்லற இச்சையைத்
தூண்டியது;



துரிய நிலையெனும் -
அரிய நிலை நீங்கி - அவனை
உரிய நிலையெனும் -
உறவு நிலைக்கு வர வேண்டியது!

அவம் செய்த -
ஆலாபனையில் -
தவம் மெல்ல -
திருக்கண் மலர்ந்தது;
அழகு வெப்பம் -
அதன்மேல் அடித்ததும் -
அதிலிருந்த -
அருள் ஈரம் உலர்ந்தது!

வெற்பையும் - தன்
விழிச்சூட்டில் உருக வைக்கும் -
பொற்பை...
முத்துச் சலாபம் நடத்த -
முன்வுந்து நின்று -
கத்துங் கவின் கடலை...
கைக்கெட்டும் தூரத்தில் -
கண்டதும்...

சரத்வான் -
சித்தம் தளர்ந்து -
சபலம் வளர்ந்து -
சஞ்சல மானான்; பின் -



'சட்'டென்று - தன்
சுயம் உணர்ந்து -
சிந்தை தெளிந்து - தவச்
சாலை நீங்கிப் போனான்!

எனினும் -
இடைப்பட்ட நொடியில்...
வெளிப்போந்த -
வீரியம் -
தீர்த்தக்கரை - நாணல்
தண்டின்மேல் விழுந்தது;
பின் - இரு
பெரும் பிரிவுகளாகி...
ஓர் -
ஆண்மகவாகவும் - ஓர்
பெண் மகவாகவும் விளைந்தது!

அவ்வமயம் -
அவ்விடத்திற்கு சமீபமாய்...
வில்லும் -
வாளியும் ஏந்தி -
வெண்புரவி ஏறி -
வேட்டையாட வந்திருந்தான் -
அத்தினபுரத்தில் -
அமர்ந்து கோலோச்சும் -
அரசு; அவன்தான் -
சந்தனு என்னும் -
சந்திர குலத்தின் -
சிரசு!
உடன்வந்த படைவீரரில் -
ஒருவன்...
அணிமையில் - சிறு
அரும்புகளின் -
அழுகுரல் கேட்டு -
விழிகளை -
நாலாபுறமும் -
ஓடவிட...
நாணல் தண்டின் -
நிழலில்...
இரு -
கொழுந்து நிலாக்கள் -
விழுந்து கிடப்பதைக் கண்டான்;
அடுத்த கணம் - அந்த
அழுத நிலாக்களை - அவன்
அள்ளியெடுத்து வந்து -
அரசன் முன் நின்றான்!

எவரோ எழுதி - பின்
எழுதியது -
தவறோ என்றெண்ணி -
தரையில் எறிந்துவிட்ட -
கவிதைகள் இரண்டையும் -
காவலன் - தன்
அரண்மனைக்கு -
அள்ளிப் போனான்;
அவற்றிற்கு - அவனே
அம்மை; அப்பன் ஆனான்!
நாள் பார்த்து - நல்ல
கோள் பார்த்து...
அந்தணர் கொண்டு -
செந்தழல் ஓம்பி -
வான்வரை கேட்க -
நான்மறை ஓதி...
வெகுவிமரிசையாக -
வேந்தன் சந்தனு...

'கிருபன்' என்றும் -
'கிருபி' என்றும் -
சின்ன -
உயிர்கள் இரண்டிற்கும் -
பெயர்கள் சூட்டினான்; தன் -
பொற்கரத் தாலேயே -
பாலும் பழமும் ஊட்டினான்!

தனது -
பிள்ளை வழி -
பிறப்பெய்திய -
பெயரனும் -
பெயர்த்தியும்...

புரவலன் சந்தனுவின்
பராமரிப்பில் இருப்பதை -
கௌதம முனிவர் - ஒரு நாள்
கண்டு களித்தார்;
அரண்மனையில் - சில
ஆண்டுகள் தங்கி -
காளைப் பருவம் எய்திய -
கிருபனுக்கு...
வில்;
மல் முதலான -
பல் வித்தையிலும் - கௌதமர்
பயிற்சி அளித்தார்!

மன்னன் சந்தனுவின் -
மறைவிற்குப் பின்...
கிருபாசாரியனை - மிகுந்த
கிருபையோடு -
பிதாமகன் பீஷ்மன் -
பேணிக் காத்தான்;
கௌரவர்களையும் -
பாண்டவர்களையும் -
கிருபாசாரியனின் -
குருகுலத்தில் சேர்த்தான்!

கிருபனின் சகோதரி -
கிருபியை...
பின்னாளில் - மணம்
புரிந்து கொண்டவன் -
வில்லாண்மை மிக்கவன்;
வணங்கத் தக்கவன்!
அவன்போல் -
ஆருமில்லை...
பாணம் எய்வதில் -
வாணன்! அவன்முன் -
வில்லெடுப்பவன் -
வீணன்!

வில்புகழ் வீரருள் - அத்தகு
தொல்புகழ் வாய்த்த - அந்தத்
தூயவன் திருநாமம் -
துரோணன்!

---

# துரோணன் தோன்றினான்!

காடு சுற்றும் -
காற்றுக்கு -
கால் கடுத்தால்...

அந்தக்
குடிலின் - சிறிய
குறட்டில்தான்...

சிறிது -
சிரம பரிகாரம் -
செய்து கொள்ளும்;
அந்த இடத்தின் -
அமைதி -
ஆர்நெஞ்சையும் அள்ளும்!

கங்கைக் கரையில் -
கொலுவிருந்தது - அந்தக்
குடில்! - அந்தக்
குடில் - தோற்றத்தில்
குறில்; ஏற்றத்தில் -
நெடில்!

ஏற்றம் அதற்கு -
ஏற்பட்டதற்கு -
என்ன காரணமெனில்...
குடிலில் -
குடியிருந்தவர்...

ஒரு -

புண்ணியர்;
பூச்சியர்;
கண்ணியர்;
காட்சியர்!

பெயர்...
பரத்துவாசர்! நதிப்
புறத்து வாசர்!

நாளும் தேயம் -
நமஸ்கரிப்பது - அவரது
நாமதேயம்!

அவர்...
தவசிகளிலே - ஒரு
தனி; சுய -
முனிவைக் கொண்டு -
முனிவை முறித்த -
முனி!

அருமறை நான்கும் -
அட்டணைக்கால் போட்டு -
அமர்ந்திருக்கும் ஆசனம்...
அந்த
மாமுனி -
நாநுனி!

அவர் -
அந்தியும் சந்தியும்...
ஓய்வு -
ஒழிவு இன்றி -
ஓமம் வளர்ப்பவர்;
ஓமம் வளர்த்து - உலக
சேமம் வளர்ப்பவர்!

இங்ஙனம் -
இடையறாது...
ஓமம் வளர்ப்பவர்; உலக -
சேமம் வளர்ப்பவர்;
கணப்பொழுது - ஒருநாள்
காமம் வளர்த்தார்!

ஒரு -
காரண காரியமின்றி - எந்தக்
கணக்கையும் - இங்கு
காலம் போடுவதில்லை; அந்தக்
கணக்குப் புரிந்தாலும் - அதன்
காரண காரியம் - எவரது
கருத்துக்கும் கூடுவதில்லை!

இது -
இயற்கை -
இயற்றிய பொதுவிதி!
இது...
பெருந்தவசியாக -
இருந்தும் -
பரத்துவாசருக்கும் -
பொருந்தும்!

'கவிர்த்தானம்' என்று -
கங்கைக் கரையில் - ஒரு
கட்டம் உண்டு; அங்குதான் -
தினமும் பரத்துவாசர் -
தீர்த்தமாடப் போவார் -
மடிசஞ்சியில் -,
மடி எடுத்துக் கொண்டு!

அன்றும் -
அப்படித்தான் போனார்;
ஆனால்...

'கிருதாசி' என்னும் -
குமரியொருத்தி -
குளிப்பது கண்டு - மனம்
குப்பையாக ஆனார்!

அவள் - ஓர்
அநியாய அழகு! அந்த -
அழகைப் பார்த்த பிறகு -
ஆராயிருப்பினும் - அவன்
அடுப்பில் வைத்த விறகு!

அவள் -

ஆடவர்க்கு...
ஆக்கும் அன்னம் - உண்ண
ஆகாதபடி -
ஆக்கும் அன்னம்! அவளது -
மைவிழியில் - சதா
மையம் கொண்டிருக்கும் -
மன்மதப் புயலின் சின்னம்!

கன்னம் - ஆடகச்
சொன்னம்; அதில் விழும் -
சிரித்தால் - இரண்டு
சுன்னம்; நன்னுதல் -
பவுர்ணமியின் -
பின்னம்; கொடிமருங்கு -
சம்சயிக்கும்படி -
சன்னம்! இன்னபிற...
இருக்கையில் - அவளுக்கு
இதயங்களைத் துளைக்க -
கைவசம் எதற்கொரு -
கன்னம்?

நீரில் -
நின்றுகொண் டிருந்தவளின் -
நூலாடையை - காற்று
நீக்க...

பரத்துவாசர் - பெண்ணமுதைப்
பார்வையால் மாந்தினார்;

சொல்லாமல் -
சுக்கிலம் நழுவ...
பத்திரமாய் - அதையொரு
பாத்திரத்தில் ஏந்தினார்!

அந்த சுக்கிலம் -
ஆண் சேயானது;
அந்தப் பாத்திரம் -
அதற்குத் தாயானது!

தாதுவைத்
தாங்கிய பாத்திரத்திற்கு -
துரோணம் என்று பெயர்;
ஆதலால்...
அந்த -
துரோணத்தில் -
தோன்றிய பிள்ளைக்கு -
துரோணன் என்று பெயர்!

பரத்துவாசர் -
பிதா வானார்;
குடத்தில் பிறந்து - தவ
மடத்தில் வளர்ந்த - தன்
குலக் கொழுந்திற்கு...

பின்னாளில் - அவரே
பிரகஸ்பதி ஆனார்!

காசிப முனியிடம் - தான்
கற்றறிந்த...
மனு தர்மத்தை -
தனு தர்மத்தை -
ஆகும் -
அறவழியை -
ஆகாத -
பிறவழியை -
தன் கன்றுக்கு - அவர்
கற்பித்தார்; மகனின்
புத்திகூர்மை கண்டு - மனம்
புஷ்பித்தார்!

வட பாஞ்சாலத்தின் -
வேந்தன் பெயர் -
பிருஷதன்! அந்த -
பிருஷதனின் -
பிரியசுதன் -
துருபதன்!

பிருஷதனும் -
பரத்துவாசரும் -

பிராதாக்கள் போல் –
பழகினர்;

தம்
தாதைகளைத் தொடர்ந்து...
துரோணனும் –
துருபதனும் –
உடன்பிறப்புக்களாய் –
ஒழுகினர்!

அப்போது – தன்
அளப்பரிய –
அன்பின் வெளிப்பாடாய்...
துரோணனுக்கு –
துருபதன் –
ஒரு
வாக்குத்தத்தம்
செய்தான்; பெரு –
விருட்டியாய் – வாஞ்சையைப்
பெய்தான்!

'துரோணனே! உயிர்த்
தோழனே!

சாதியை;
சம்பத்தை;
மேல் கீழ் –
வர்க்கத்தை;
பஞ்சத்தை;
படாடோபத்தை;
மண்குடிலை;
மாளிகையை;
இன்னும் –
இடைப்பட்ட –
பல்லாயிரம் –
பேதத்தை...

தகர்த்தும் –
தாண்டியும் –
பெயர்த்தும் –
பிடுங்கியும் –
தூர எறிந்துவிட்டு –
தோளொடு தோள்தழுவித்
துய்ப்பதுதான் –
தூய நட்பு!

அங்ஙனம் –
அமைந்திடாத –
நட்பு; நட்பல்ல!
ஒப்பு!

நம்முடைய –
நீளம் அகலம் ஆழம்மிக்க –
நட்பு – நம்முள்
பரஸ்பரம் –
பரவிப் படர்ந்திருக்கும் –
பெட்பு!

உண்மையைச் சொல்வதாயின் –
உன் உணவுக்கு நானும் –
என் உணவுக்கு நீயும் –
உப்பு!

நண்பா!
நான் –
ஒன்றுரைப்பேன்; கேள்! இது –
உலகறிய நானேற்கும் சூள்!

என் தந்தைக்குப் பிறகு –
தேசம்...
என் கைக்கு வரும்;
என் கைக்கு வந்தபின் –
தேசத்தில் –
செம்பாதி...

உன் கைக்கு வரும்;
உனக்கதை – என் மனம்
உவகையோடு தரும்!'

இங்ஙனம் -
இதயமார -
இயம்பிவிட்டு...

துருபதன் -
துரோணனை -
மார்போடு மார்பாய் -
மருவினான்; அந்தத்
தழுவலில் -
துரோணனும் -
ஒவ்வோர் அங்கமாய் -
உருகினான்; உயரிய -
நட்பெனும் -
நறவத்தை -
பானை பானையாய்ப்
பருகினான்; விழிகள் -
செருகினான்!

வருஷங்கள் ஆயின; ருதுக்கள் -
வந்து வந்து போயின!

பரத்துவாசர் -
பரமபதம் சேர்ந்தார்;
பிருஷதனும் -
புவிவாழ்வு தீர்ந்தான்!

துருபதன் -
திருமுடி தரித்து -
தேயத்தை ஆண்டான்;
துரோணன் -
தருப்பையைப் பிடித்து -
தவநெறி பூண்டான்!

அவரவர் வழியில் -
அவரவர் சென்றதால்...

சந்திப்பதும் நின்றது;
சினேகித்திருந்த -
சந்தோஷ நாள்களை -
சிந்திப்பதும் நின்றது!

நல்லதொரு -
நாள் கிழமையில்...

கிருபனின் தங்கை -
கிருபியை -
துரோணன் - வாழ்க்கைத்
துணையாய் ஏற்றான்;
இல்லற நோன்பை -
வனத்திலேயே
இல்லாளோடு நோற்றான்!

தலையெடுத்தது -
தாம்பத்தியம்;
தீர்ந்தது துரோணனின் -
தனிமைப் பத்தியம்!

கிருபி -
கருவுற்றாள்;
ஒரு -
பவித்திரப் பொழுதில் -
பனிக்குடம் உடைந்து...

பையில் இருந்ததை -
கையில் பெற்றாள்!

அமரேசன் ஏறிவரும் -
அசுவத்தின் பெயர் -
'உச்சைச்சிரவம்!' - மிக
காம்பீர்யமாயும் -
கௌரவமாயும் இருக்கும் - அது
கனைக்கும் அரவம்!

துரோணனின் பிள்ளை -
தோன்றியவுடனே...

அந்த -
அமரேசனின் -
அசுவம்போல் -
கனைத்தான்; பெற்றோர் -
காதுகளை - குடந்தேனில்

நனைத்தான்!

ஓர்
அசரீரி
அறிவித்தபடி...

தன்
அன்புமகனுக்கு - துரோணன்
'அசுவத்தாமன்' என்று -
பெயரிட்டான்; பெரிதும் -
பெருமைப் பட்டான்!

கிருபி - தன்மடி
கீண்டுவந்த - நிலாக்
கீற்றை...
கீழே விடாமல் -
கொஞ்சினாள்;
கண்ணுக்குள்
வைத்துக்கொண்டே -
துஞ்சினாள்!

நாளாக...
நாளாக...
அசுவத்தாமனின் -
அழகும் அறிவும் - 'இந்த
விசுவத்தை அவன் -
விரும்பிக் கேட்டாலும் -
வாங்கித் தரவேண்டும்!' எனும் -
வெறியை...
துரோணனின் சிந்தையில் -
தூவின; அவனைப்
பொருள்கொண்டு வருமாறு -
பல திசைகளுக்கும் ஏவின!

அருளுக்கு அலைபவன் -
அதீதமான பிள்ளைப் பற்றால் -
பொருளுக்கு அலைந்தான்;
பாவம்!
பொருள்கிட்டாது உலைந்தான்!

திடீரென்று -
துரோணனை -
வறுமை பீடித்தது; அதன் -
வலி நீடித்தது!

அசுவத்தாமன் -
அசுரப்பசியில் அழுதால்...

ஆவின் பால் தராது - அரிசி
மாவின் பால் தந்தான்; 'இதுவா -
பசுவின் பால்?' எனக் கேட்கும் -
சிசுவின் பால்...
பதில்சொல்ல
முடியாது - கொல்லன்
பட்டறைபோல் வெந்தான்!

ஒரு நாள்...
துருபதன் நினைவு -
தட்டியது பொறியில்; உடனே -
மனைவி மகனோடு - வட
பாஞ்சாலம் புறப்பட்டான் -
மகிழ்ச்சி வெறியில்!

துரோணனைத்
தொடர்ந்து...

அவன் -
விதியும் நடந்தது -
வேர்க்க வேர்க்க; அங்கு -
விளையப் போவதை -
வேடிக்கை பார்க்க!

# வாக்குத் தத்தம்

'இதோ! இதோ!'
என்று -
இழுத்துக்கொண்டே போனது...

பாஞ்சாலம் -
போய்ச் சேரும் -
பாட்டை! துரோணன் -
பொறுத்துக் கொண்டான் -
பாட்டை படுத்துகின்ற -
பாட்டை!

அது -
வாழ்வை நோக்கி -
வறுமை தொடங்கிய -
வழிநடை! அவனுக்கு -
வலிக்குமா கால்?

உப்பு வியர்வையை -
உடனுக்குடன் -
ஒற்றியெடுத்தது - தூர
வெற்பி லிருந்து -
வனத்திற்கு -
விளையாட வந்த இளங்கால்!

காதங்களை -
கொஞ்சம் கொஞ்சமாக -
அவன்
பாதங்கள் -
பட்சித்தன; அவற்றை -
கல்லும் முள்ளும் -
காயப்படுத்தாமல் - பாதக்
குறடுகள் -
ரட்சித்தன!

ஏழமை தீர்க்கும் -
தோழமை தேடி -
துரோணன் -
துரிதமாக நடந்தான்;
'அப்போது அரும்பிய -
சக்கியம்! அது -
இப்போது எத்துணை -
முக்கியம்!' என்று -
கருதிய வாறே-
காடு மேடு கடந்தான்!

இளையராய் -
இருந்த காலத்தில் -
இருவர்க் கிடையே -
இயல்பாய் எழுந்த நண்பை -
இந்நாளில் எண்ணி எண்ணி -
இளகினான்; தனது -
மன வீட்டின் -
புழைக் கடையில் -
மண்டிக் கிடக்கும் -
குப்பை நினைவுகளை -
குக்குடம் போல் -
கிளறினான்!

அன்றாடம் -
அக்கினி கோத்திரத்திற்காக -
ஒன்றாகவே -
வனம் சுற்றி -
விருட்சங்கள் -
விசர்ச்சனம் செய்துவிட்ட -
சமித்துகளை -
சேகரித்ததும்...

சுருதிகளையும் -
சூக்தங்களையும் -

கரைதலைப் பாடமாய் -
குருவிடம் -
'நான் முந்தி;
நீ முந்தி!' என்று -
ஒருவரோடொருவர்
போட்டியிட்டு -
ஒப்பித்துக் காட்டியதும்...
ஒரு
மாலைப் பொழுதில் -
மந்தாகினியில் -
மல்லாந்து நீச்சலிட்டவாறே -
இருவரும் -
ஈசான்ய மூலையில் தென்பட்ட
-
ஒரு -
நட்சத்திரத்தைப் பற்றி -
நெடுநேரம் -
'சுக்கிரனா?
துருவனா?' என்று -
சம்வாதம் செய்ததும்...

'அரசன் மகன்!
அந்தணன் மகன்!' எனும் -
பேதங்களால் -
பேதலிக்காமல் -
கூடுவிட்டுக்
கூடுபாய்ந்தாற் போல் -
ஒருவர்க்குள் ஒருவர் -
உள்ளோடி உறைந்ததும்...

ஒன்றன் பின்
ஒன்றாக -
தொடர்ந்து வந்து -
துரோணனின் -
நெஞ்சத் திரையில் -
நிழல் நாடகம் நடத்த...

அரசன் துருபதன்பால் -
அவனது அன்பு -
அதிகரித்தது; 'இன்றொடு -
அகன்றது மிடிமை!' என்று -
அவன் மனம் மகிழ்வெய்தி -
ஆர்ப்பரித்தது!

அப்போது -
ஆறுகல் தொலைவில்...
துருபதனின் -
திருமாளிகை -

காற்று வெளியில்
ஏற்றி வைத்த -
காடா விளக்கின் - திரி
நாடா போல்...

கானலில் நடுங்கியது -
கண்ணுக்குத் தெரிந்தது;
துரோணனின் -
திருமுகம் -
'மொக்கவிழ்ந்த முண்டகம்
போல் -
'பொக்'கென விரிந்தது!

நடையின் -
வேகம் கூடியது; வெளிச்சரேகை
-
விழிகளில் ஓடியது!

இடமும் வலமும் -
இரு -

கவரிகள் நின்று -
கவரிகள் வீச...

கவிகை நிழலில் -
கனகா சனத்தில்...

மெல்லிய -
வெண் பட்டில் -
கஞ்சுகமும் - மூலைக்
கச்சமும் அணிந்து...

சிரசு முதல் -

சேவடி வரை - ஓர்
அரசுக் குரிய -
ஆபரணங்கள் புனைந்து...

திவ்விய கோலத்தில் - தன்
திருவோலக்கத்தில் - சிம்ம
ஏறுபோல் -
எழுந்தருளியிருந்தான்...

பாஞ்சால தேசத்தை -
பரிபாலனம் செய்யும் -
துருபதன் என்னும்
திருமகன்; புகழ் -
உச்சமா யிருந்த - பிருஷதன்
எச்சமா யிருக்கும் -
ஒரு மகன்!

தன் -
அமாத்தியரோடும் -
அறவோரோடும் - அரசன்
ஆறஅமர -
ஆலோசித்து...
தான் -
இட்ட சட்டங்களில் -
எவை - மக்களுக்கு
ஏற்புடையவை அல்லவோ -
அவை களைய
ஆணையிட்டான்; பின் -
அவை கலைய
ஆணையிட்டான்!
அதன்பிறகு...
துருபதனைக் காண -
துரோணன் -
அத்தாணி மண்டபத்திற்குள் -
அனுமதிக்கப் பட்டான்!

முனிவன் மகன் -
மன்னன் மகனிடம் - மெல்லப்
பேசலானான்; பேசும்போதே -
கூசலானான்!

'மன்னா! உனக்கு -
மங்களம் உண்டாகட்டும்;
உன் மனையைத்
தன் மனையாய் -
மங்களாதேவி கொண்டாடட்டும்!

நினைவிருக்கிறதா என்னை?
நெடுநாள்கள் முன்னமேயே -
நீயாகவே வந்து - என்னுள்
நிரப்பவில்லையா உன்னை?

நானுன் தோழன்;
நாமம் துரோணன்!

எடுத்த பிறப்பால் - நாம்
இருகுலம்;
எனினும் நம்மை...

ஒருகுலம் - என
ஒட்டி வைத்தது - நாம் கற்ற
குருகுலம்!

பிறகு - நாம்
பரகாயப் பிரவேசம் -
புரிந்தோம்;
உன்னுள் நானும் -
என்னுள் நீயும் -
ஒளிந்தோம்!

தடுமன் வந்து - நான்
தும்மும் போதெல்லாம் -
உன்னைக் கேட்பேன்...

'ஏன் -
தண்ணீரில் அளைந்தாய்?'
என்று;

காய்ச்சல் வந்து - நீ
காயும் போதெல்லாம் -
என்னைக் கேட்பாய்...

'ஏன் -

கத்திரியில் அலைந்தாய்?'
என்று!
இங்ஙனம் - நம்
இருவருக்குள் -
சிறுபிராயத்தில் -
சூல்கொண்ட -
சினேகிதத்தை...

'உபமான -
உபமேயத்திற்கு -
அப்பாற்பட்ட - ஓர்
அபூர்வ நட்பு!'
என்று நீ -
எத்துணையோ தடவை -
சிலாகித்திருக்கிறாய்; அப்படி -
சிலாகித்ததை - ஒரு
சிலாசாசனம் போல்...
ஆசிரமத்து -
வாசலில் உள்ள -
செங்காலியில் -
செதுக்கி வைத்திருக்கிறாய்!

இன்னொன்றும் சொல்லவா?
இந்த எளியேனை...

நீ - உனக்கு
நிகராக்க எண்ணினாய்! கங்கை -
நீரறிய; நிலமறிய; நீலநிற -
விசும்பறிய; வளியறிய - ஒரு
வாக்குத் தத்தம் பண்ணினாய்!

உன் தேசம் - என்று
உன் கைக்கு வந்திடுமோ -
அன்றே
உன் தேசத்தில் பாதி...
என் தேசம் என்று -
என்கைக்கு வந்திடும் - என்று நீ
என்னிடம் சொன்ன சேதி...

நினைவில் நிற்கிறதா -
நண்பா? - நான் கூட
உனைவாழ்த்திப் பாடினேனே -
ஒரு
வெண்பா?
துருபதா! என்னுயிர்த்
தோழா!

எனக்குப்
பெரிதல்ல தேசம்;
பெரிதினும் பெரிது - நீ
பாராட்டும் நேசம்!

நாடோறும் -
நான்...

வறுமையில் -
வாடுகிறேன்; பசிப்
பிணியால் வேகும் வயிறை -
ஈரத்
துணியால் மூடுகிறேன்!

என் -
மனைவியும் -
மகனும் -
ஒரு பிடி சோறுக்கும் -
ஒரு முழ ஆடைக்கும்...

வக்கற்றுப் போயினர்;
திக்கற்றோர் ஆயினர்!

நின் தேசத்தை - நண்பனே!
நீ தந்த வாக்குப்படி...

'கூறு போடு!' என்று நான் -
கூறவில்லை; 'பசிக்கின்றது;
சோறு போடு!' என்றுதான் -
சொல்ல வந்தேன்! எனைக்
கொல்லும் வறுமையை - உன்
கொடையை - ஒரு
படையாய்க் கொண்டு -

கொல்ல வந்தேன்!
உத்தமனே! – எனக்கு
உற்றவனே!

ஓரளவு பொன் பொருளும் –
ஒரு பசுமாடும் –
உதவு போதும்; உலகில் –
உளநாள் பரியந்தம் –
உன் பெயரை – என்
உதடு ஓதும்!'

துரோணனின் –
துன்பை துவளலை –
துருபதன் கேட்டான்;
கேட்டபின் –
தணல் வார்த்தைகளை –
தகிக்க தகிக்க –
துரோணன்மேல் –
தூக்கிப் போட்டான்!

'பார்ப்பனனே! – நான்
புரவலன்; நீ –
புரோகிதன்! – ஒரு
புரோகிதனா –
புரவலனின் –
சினேகிதன்?

நீ –
ஆள்வது பஞ்சாங்கம்;
நான் –
ஆள்வது பாஞ்சாலம்!
எனக்கும் உனக்குமா நட்பு?
ஈதென்ன வாய்சாலம்?
மாய்மாலம்?

காக்காய்ப் பொன்னும் –
கிளிச்சிறையும் –
மூக்காய் மூச்சாய் –
முன்னம் பழகியதாய்...

மெல்ல – என்
மன்றம் வந்து –
முடிச்சை அவிழ்க்கிறாய்; உன் –
மூட்டையில் உள்ள –
ஓட்டை உடைசல்களை – என்
முன்னால் கவிழ்க்கிறாய்!

மூடனே!
மகாமேதையும் –
மௌட்டிகமும் –
சகா ஆகுதல் –
சாத்தியமா?

துக்கியும் –
சுகியும் –
சக்கியம் செய்தல் –
சரிப்படுமா?

கத்தபமும் – பஞ்ச
கலியாணியும் – ஒன்றாய்
வித்தை பயின்றதாயும்...
விளையாடித் துயின்றதாயும்...

ஆரிடம் –
அளக்கிறாய்?
வெற்றுக் கதைகளை – ஏன்
வளர்க்கிறாய்?

வேண்டுமானால்...
ஒருநாள் தங்கி –
உண்டுவிட்டுப் போ! – என்
கனக மாளிகையை –
கண்ணாடி அறைகளை –
கண்டுவிட்டுப் போ!'

தகாது பேசிய –
துருபதன் சொற்கள் – உட்
புகாது செவிகளை – துரோணன்
பொத்திக் கொண்டான்; திரு –
ஓலக்கத்தை விட்டு – உடனே
ஓத்திச் சென்றான்!

# கணையாழியும்-கைப்பந்தும்.

அது
பூக்கள் அதிகம் -
புஷ்பிக்காத பூங்கா; ஆதலால் -
அளியோ வளியோ -
ஆசைப்பட்டு
அங்கு வந்து தூங்கா!

ஆரும் -
அதற்கு -
வேலிகள் வேய்ந்ததில்லை; ஆயினும் -
வெற்றிலை பாக்குவைத்து
வருந்தி யழைத்தாலும் - வந்து
காலிகள் மேய்ந்ததில்லை!

அதற்குக் காரணம் -
அங்கிருக்கும் புல்பூண்டில் -
'அஞ்சுக்கு மூணு' -
நஞ்சு; எப்படி -
மறியும் மாடும் -
வாய்வைக்கும்? - மீறி
வைத்தால் - வயிற்றில்
நோய் வைக்கும்!

கிருபரின் -
குருகுலத்தை ஒட்டி...
இருந்தது - அந்த
இளமரச் சோலை;
பொதுவாக - அந்தப்
பொதும்பரில்தான்...

பாண்டவரும் கௌரவரும் -
பந்துவிளை யாடுவர் - பாடம்
பயின்றது போக -
பாக்கியிருக்கும் வேளை!

அப்படியொருநாள் -
அவர்கள் பந்தாடுகையில்...

ஆடிய பந்தும் -
அங்குலிவிரலில் - தருமன்
சூடிய மோதிரமும்...

கிட்டத்தில் இருந்த - ஒரு
கிணற்றுக்குள் விழுந்தன;

'எப்படி அவற்றை -
எடுப்பது?' என்று -
வினாவும் வியப்பும் - அவர்கள்
விழிகளில் எழுந்தன!

அது -
பேழ்வாய் படைத்த - ஒரு
பாழுங் கிணறு; கொடிய -
விஷ ஜந்துக்கள் -
வாழுங் கிணறு!

அரசகுமாரர்கள் -
அதனுள் இறங்க -
அச்சப் பட்டனர்; வேறு -
உபாயங்களை -
உபயோகித்தும் - அவை
உதவாது விட்டனர்!

கைபிசைந்து நிற்கையில் -
கண்ணில் தென்பட்டார் -
சற்றுத் தொலைவில் - ஒரு
சாது;
சாதுவின் -
சமீபமாய் - அம்பறாத்

தூணியும் தனுவும் இருந்தன -
தரை மீது!

அவர் -
அப்போதுதான்...
சிக்கிமுக்கிகளால் -
சுள்ளிகளைப் பற்றவைத்து -
அக்கினிகோத்திரத்தை -
ஆரம்பிக்க இருந்தார்; அவர் -
அனுஷ்டானத்தை -
ஆரம்பித்து விட்டால் - அது
பூர்த்தியாகும் வரை -
புறஉலகோடு பொருந்தார்!

சதா - அவரது
செந்நா -
சந்தை சொல்லும்;
சந்தை சொல்பவர் -
க்ஷீண நிலையை - கட்டிய
கந்தை சொல்லும்!

போதுமான அளவு -
போஜனமும் போஷாக்கும்
இன்றி...
தேக மெங்கும் -
சுருங்கிக் கிடந்தது -
தசை; அதில் -
தெரிந்தது - அவர்
ஜாதகத்தில் நடக்கும் -
தசை!

தவசிக்கு -
தின்னச் சோறில்லை;
தவசியை - தாரித்திரியம்
தின்னாத நாளில்லை!

அவரது -
ஆக்கையில் மெலிவு;
ஆடையில் நலிவு;
ஆயினும் திருமுகத்தில் -
அசாத்தியப் பொலிவு!

மனக்கேணியில் -
தினந்தோறும் தூர்வாரும் -
முனிவரிடம் - தூர்வாரா
வனக்கேணியில் -
விழுந்துவிட்ட பந்தையும்;
விரல் மோதிரத்தையும்...

மீட்டுத் தருமாறு -
கேட்டுக் கொண்டனர் -
மன்னர்குல மக்கள்;
கேட்டவர் மேலே -
வந்து விழுந்தன - முனிவரின்
கேலியான சொற்கள்!

'அரச குமாரர்களே!
அரைகுறையா - உங்கள்
அஸ்திர அப்பியாசம்?
வேந்தர் குலத்தார்க்கு -
வேண்டற்பாடன்றோ -
விற்றொழில் வின்னியாசம்!

போதாது பயின்றது;
போதும் துயின்றது!

ஆசிரியரை -
அதிகமாய் இன்னும் -
ஆசிரயித்து - நீங்கள்
அஸ்திர வித்தையில் -
ஆழங்காற்படுதல் -
அவசியம்; அதன்பின் -
அம்புவியே - நீங்கள்
அம்புவிட்டால் -
ஆகும் வசியம்!

இளையோரே!
இப்போது உங்களுக்கு -

உதவுவேன்; இனிவந்தால் -
உதவாது உதறுவேன்!

நான் -
கணையை ஏவி -
கணையாழியை கைப்பந்தை -
கரை சேர்ப்பேன்; அங்ஙனம் -
கரை சேர்த்தால் - என்
காயும் வயிறுக்கு -
இரை சேர்ப்பீரா?'

ஓர்
இரவலன் போல் - முனிவர்
இயம்பியது கேட்டு...
வேந்தர் வாரிசுகள் -
வியப்பெய்தி நின்றனர்; பின் -

'ஆசாரியர் கிருபரின் -
அனுமதி பெற்று - தங்களுக்கு
அன்னம் கிடைக்க -
ஆவன செய்கிறோம்!' என்றனர்!

ஏந்திய வில்லொடு - முனிவர்
எழுந்து வந்தார்; மந்திரித்த
ஈர்க்குகளை ஏவி - பந்தை
எடுத்துத் தந்தார்!

பிறகு...
பகழியொன்றைப் பாய்ச்சி -
ஆழ
அகழியில் இருந்த - கணை
ஆழியைப் பேர்த்தார்; தருமன் -
அகங்கையில் சேர்த்தார்!

வாயகண்ட கேணிக்குள் - ஒரு
வாளியைப் போல் -
வாளியை அனுப்பி -

மோதிரத்தை -
மொண்டுவந்த -
முனிபுங்கவரின் -
ஆற்றல் கண்டு -
அயர்ந்தனர் பிள்ளைகள்;
அம்புலி வமிசத்தில் -
அரும்பிய கிள்ளைகள்!

'முனிவரே! ஈர -
முளரிகளை நிகர்த்த -
தங்கள் -
திருவடிகளில் - எங்கள்
தலைகளை -
தாழ்த்துகிறோம்; இத்தகு -
தனுர் வித்தையை -
திசையெங்கும் காணாததால் -
வியந்து - தங்களை
வாழ்த்துகிறோம்!

ஏவிவிடும் - எளிய
ஈர்க்கும் - தாங்கள்
இட்டபணி யாற்றி - எங்களை
ஈர்க்கும்...
என்பதை -
இன்றுதான் கண்டோம்; தங்கள்
-
வித்தகத்தை விருந்துபோல் -
விழிகளால் உண்டோம்!

மறையோர்க்கு -
மனனமா யிருப்பதுண்டு -
மனு தருமம்; மனுதருமத்தோடு -
தங்களுக்கு -
தலைகீழ்ப் பாடமா யிருக்கிறது -
தனு தருமம்!

'விலகக் கூடாது குறி!' எனும் -
வேதம்தான் - ஒரு
வில்காக்கும் நெறி! அந்த -
நெறியைக் காப்பதில் - தங்கள்

நீள்சிலைக்கு – அச்சோ!
நீங்காத வெறி!

வில்லுக்கும் – தங்கள்
விரலுக்கும் – ஒரு
விவாகம் செய்து –
வைத்தாற் போல்...

அத்துணை
அனுசரணை;
ஒன்றுக் கொன்று –
உபசரணை!

இதுகாறும் –
இம்பரில் எங்களது –
விழிகள் கண்டதில்லை – ஒரு
வில்லியின் சொல்லை – ஏற்று
வினைமுடிக்கும் வில்லை!

தபோதனரே!
தாங்கள் யார்?
தெரிந்து கொள்ளலாமா –
தங்கள்
திருநாமம்; ஊர்?'

பிள்ளைகள் – மெச்சிப்
பேசியதைக் கேட்டு...
முனிவர் – மெல்ல
முறுவலித்தார்; ஆனால் –
மற்ற விவரங்களைக் கூற –
மறுதலித்தார்!

'இளவரசுகளே!
இந்து குலத்து இசை முழக்கும்
இனமுரசுகளே!
என்பால் – உங்களுக்குத்
தென்பட்ட...
குணத்தையும் –
கோலத்தையும் –
செயலையும் –
சீலத்தையும்...

உங்கள் –
வணக்கத்திற்குரிய –
பிதாமகர் –
பீஷ்மரிடம் சொல்லுங்கள்;
சொல்லிவிட்டு –
சும்மா நில்லுங்கள்!

அறிவிக்கும் –
அங்க அடையாளங்களை
வைத்தே...
அவர் –
அறிந்து கொள்வார் –
அடியேனை –
ஆரென்று! இந்தப்
பார்ப்பனனை –
புரிந்துகொள்வார் –
அறத்தின்
ஆறென்று!'

முனிவர் – ஒரு
மூடுமந்திரம் போல் –
விளம்பினார்; பின் –
கிளம்பினார்!

அரண்மனையை நோக்கி –
அனைவரும் புறப்பட....

முனிவர் நினைவில் - தருமன்
முங்கினான்; தம்பியரைத்
தொடராது – தனித்துத்
தங்கினான்!

தனக்குத் தானே –
வினாக்களைத்
தொடுத்தான்; விடைகளைக்
கண்டறிய மாட்டாது – முகம்

கடுத்தான்!

மண்ணில் வாழும் -
மன்பதையில்...
நல்லான் என்பவனும் - தொழில்
வல்லான் என்பவனும் - வளம்
இல்லான் என்பவனாய் -
இருப்பது ஏன்?

அஸ்திரத்திற்கு -
அதிபதியா யிருப்பவன் - முழ
வஸ்திரத்திற்கு -
வாடுவது ஏன்?
வேதம் வாய்க்கும் -
வாய்க்கு - ஒருவேளை
சாதம் வாய்க்காதது ஏன்?

வாய்மையில் மனமுடையார்க்கு -
வாழ்வு ஏன் -
சேய்மையில் இருக்கிறது?

'உண்மை
மனமுடையார் - இன்னல்
உற்றபோதும் மனமுடையார்!'
என்பதாலா? அல்லது -
மெய்ம்மையைப் பொய்ம்மை -
தின்பதாலா?
ஆழிசூழ் உலகில் -
அறத்தின்...
வலி வற்றியதா?
கலி முற்றியதா?

மூட்டையாய்க்
கேள்விகளை - தன்
முதுகில் சுமந்துகொண்டே...
வீட்டை அடைந்தான் -
வித்தகன் தருமன்; அறப்
பாட்டை நீங்கி - பாதம்
போகாத ஒருவன்!

பௌத்திரர்களான -
கௌரவர் பாண்டவர் -
கூறியவற்றை - பீஷ்மன்
காதுகளால் உண்டான்;
தனுர்வித்தை காட்டிய -
தவசி - புகழ்சால்
துரோணன்தான் என்று -
தெரிந்து கொண்டான்!

பீஷ்மன் - உடனே
பிரதானிகளை அனுப்பி...
தக்க மரியாதையோடு - கனக
தண்டிகையில் -
துரோணனை - தனது
திருமாளிகை அழைத்து வந்தான்;

பாண்டவர்களை -
கௌரவர்களை - நெஞ்சில்
பொய்யடையா துரோணனிடம்
-
கையடையாய்த் தந்தான்!

மைத்துனன் கிருபாசாரியனும் -
மனம் ஒப்பினான்; குருகுலத்
தலைமையை ஏற்று - துரோணன்
தனுர்நூலைச் செப்பினான்!

அயல்நாட்டு -
அரசகுமாரரும் - இன்னும்
அனேகரும்...
துரோணனின் -
தவப் பள்ளியில் கற்றனர்;
தனுர் ஞானத்தைப் பெற்றனர்!

அவர்களில் ஒருவன்; அவன் -
ஆர் எதுகேட்பினும் தருவன்!
அவன் -
தகதகக்கும் வர்ணன்;
திருநாமம் கர்ணன்!

# கர்ணன்

ஒரு -
மங்கையில் உதித்து - அவளால்
சங்கையில் உடனே - அகல
கங்கையில் விடப்பட்டவன்;
அந்த -
கங்கையில் - ஒருவன்
முங்கையில் - அவனது



அங்கையில் அகப்பட்டவன்!

அவன்தான் -
அருள்மிகு -
கர்ணன்! அழகிய -
கவசாபரணன்!

அவன் -
கன்னி வயலில் -
கதிர் விளைத்த -
கதிர்:
குணநலன்கள் -
கொட்டிக் கிடக்கும் -
குதிர்;
அவன் பிறப்பு -
அவனுக்கே ஒரு -
புதிர்;

ஆயினும்-
ஆர் அவனுக்கு -
எதிர்?

அவன் -
உடை உடுத்திய -

கொடை!
இருகை பொருத்திய -
ஈகை!

சருமம் என்பொடு -
சஞ்சரிக் கின்ற -
தருமம்!

தானம் தருவதற்கே -
தேக மெடுத்து -
வானம் நீங்கி - இந்த
வையம் இறங்கிய - அட்சய

ஏனம்!

வள்ளன்மை எனும் -
வாழ்வு நூலுக்கு -
வியாக்கியானம்; அவன் -
வழங்கல் எனும் -
வண்மை மொழிக்கு -
வியாகரணம்!

'இல்லை' என்பது - அவன்
கல்லாத சொல்; அவன் -
எடுத்தாளும் நிகண்டில் - அது



இல்லாத சொல்!

ஈதல் - அவன்
இதயம் ஓம்பும் - முதற்
காதல்!

உதாரம் - அவன்
உவந்து மணந்த -
முதல் தாரம்!

ஈயென - நுரை
ஈரலைக் கேட்பினும் - ஈர்த்து
ஈவான்; ஈவதற்காகவே -
சாவான்!

ஔதாரியம் எனும் -
ஔஷதம் கொண்டு...

தீனர்களின் -
தரித்திர நோயை -
தீர்த்து வைக்கும் -
தன்வந்திரி!

சகலரும் அணுக -
சாத்திய மாகும்படி -
சௌலப்பியம் மிக்க -
தயாநிதி!

ஒவ்வொரு நாளும் - அவன்
உள்ளங்கை அரிக்கும்;

ஒருவருக்காவது -
ஒரு துளியாவது -
உபகரித்தால்தான் - அவன்
உண்ட சோறு செரிக்கும்!

இன்னும் -
எத்துணையோ சொல்லலாம் -
கன்னன் சிறப்பு; எனினும் -
ஈ காக்காய் தவிர -
எவருக்குத் தெரியும் - அத்தகு
ஈகையன் பிறப்பு?

'மந்திரக் கல்லால் - சூரிய
மாங்காய் விழுமா?'
விட்டெறிந்து பார்த்தாள் -
விவாகமாகாதவள் -
சுட்டெரிந்த -
சூரியனை நோக்கி!

விழுந்தது - அந்த
வெளிச்ச மாங்காய்! அவள் -
கையில் அல்ல; கருப்
பையில்!

பையில் விழுந்தது - உடனே
பிள்ளையென்றாகி - அவளது
கையில் விழுந்தது!

கன்னி -
கையில் ஏந்திய - கொழுந்து
வெய்யில்...

பீச்சியடித்தது - வெளிச்சப்
பிரவாகத்தை; வனமே -
பிரதிபலித்தது - அதன்
பிரகாசத்தை!

மார்பில் கவசம்;
மணிச்செவியில் குண்டலம்;
அவை -
சிதறிய ஒளியோ - இன்னொரு
சப்தரிஷி மண்டலம்!

கண்களில் கோடி காண்பித்தது -
கருணை மனம்; அந்தக்
கருணையில்
கொப்பி கொட்டியது -
கொடை மடம்!

கட்டை விரல் சூப்பும் -
குட்டைச் சூரியனை...
கைகால் முளைத்திருக்கும் -
வைகாசி வெய்யிலை...

அழகைக்
கக்கிச் சிரிக்கும் -
அக்கிப் பிஞ்சை...
இன்னும் -
ரெக்கை முளைக்காத -
வெக்கைக் குஞ்சை...

கொஞ்சிக் கொஞ்சி -
குனிந்து குனிந்து -
'இச்சு இச்சு!' என்று -
எச்சில் முத்தங்களால்...

ஆதி அந்தம் -
ஆசை ஆசையாய் -
அலம்பிவிட்டாள் குந்தி;
அடுத்த கணம் - ஊர்
அபவாதம் வந்து நின்றது -
அவள் கண்களுக்கு முந்தி!

'குந்திபோஜன் மகள் -
குமரியா யிருக்கையிலேயே -
ஒரு
குழந்தைக்குத் தாய்!' என்று -
கேள்விப் பட்டால் -
காறித் துப்பியே கொன்று
விடும் -
கோபாலர் வாய்!

'இவள் -
யது மங்கையா? - இல்லை
பொது மங்கையா?'
என்று -
வினாயெழுப்பியே -
விலா எலும்பை முறித்துவிடும் -
ஊர்;
ஊர் நாக்கு - அவ்வளவு
கூர்!

கைக் குழந்தை என்ன -
காலில் ஒட்டிய மலமா -
உடனே -
உதறிவிட? இல்லை...
கண்ணில் அப்பிய புளிச்சையா -
உடனே -
வழித்தெறிய?

சேயைப் பார்ப்பதா? அல்லது -
சேற்றை வாரி
இறைக்கும் - ஊரார்
வாயைப் பார்ப்பதா?

குழந்தையைப் பற்றிய -
குழப்பத்தில் -
குந்தியிருந்தாள்; மனம் -
குழைந்த சோறாகி - ஒரு
குருந்த மரத்தடியில் -
குந்தியிருந்தாள்!

அப்போது பசியால் -
அழுதது பிள்ளை; அவள் -
முலைக்காம்பை மூக்கால்
முட்டியது கிள்ளை!
சூல்கொள்ளாத -
கன்னிமுலை! அது -
பால் கொள்ளுமா?

அவள் -
மாதாவாகி -
மறுபடியும் கன்னி ஆனவள்;
கறவை -
மாடாகி -
மறுபடியும் கன்று ஆனவள்!

முடிவில் - ஒரு
முடிவுக்கு வந்தாள் குந்தி;
சற்றே விலகியது -
சஞ்சலம் என்னும் நந்தி!

தொட்டிலில் இடவேண்டிய -
துண்டு சூரியனை - ஒரு
பெட்டியில் இட்டாள்; கங்கைப்

பேராற்றில் விட்டாள்!

நீரோட்டி வந்த
பெட்டியை - ஒரு
தேரோட்டி எடுத்தான்;
பெட்டியில் கிடந்த -
குட்டி சூரியனை எடுத்து - தன்
பெண்டாட்டி கையில்
கொடுத்தான்!

அதிரதன் என்பது -
அவனது பேர்;
அவன் ஓட்டுவது
அதிரதம் என்னும் தேர்!

அதன் -
சாரத்தியம் - அவ்வளவு
சுலபமானது -
அன்று; அதில்
அதிபராக்கிரமனாய்
அதிரதன் விளங்கினான் -
அன்று!

பருதியின் மகன் - தேர்ப்
பாகனின் மகனானான்; இது -
கருதியது விதி; பெட்டியைக்
கரையில் சேர்த்தது நதி!

தலைவன் -
தலை முழுகும்போது
கிடைத்ததை -
தலை முழுகி விடாமல் - தான்
தலை முழுகா திருந்து - தாங்கிய
தலைச்சனா யேற்றாள் - அந்தத்
தலைவி!

வாஞ்சை பாராட்டி -
வளர்த்தாள் -
அந்தக் கோதை;
அவள் பேர் ராதை!

நீரில் வந்த பிள்ளையை -

அவள்
நிலத்தில் விடாது - நெஞ்சத்
தேரில் வைத்து
ஆட்டினாள்; திரு -
நாள் பார்த்து நாலும் பார்த்து -
'கர்ணன்' என்று - நல்ல
நாமதேயம் சூட்டினாள்!

சாரதியின் புதல்வன் -
சகல கலைகளிலும் -
பாரதியின் புதல்வனாய் -
பிறங்கினான்;
ஒவ்வொரு நாளும் -
ஓயா துழைத்து -
ஒருசில நாழிகளே -
உறங்கினான்!

அது அதற்கு உரிய -
அதி தேவதைகளை -
ஆராதித்து -
ஆவாகனம் செய்து...

அத்திரம் விடுதல்;
சத்திரம் வீசுதல்;
தோமரம் எறிதல்;
துரகதம் ஏறுதல்...

ஆகிய -
அனைத்து வித்தைகளையும் -
அவை அவைக்கு உரிய -
ஆசான்களை அண்டி -
நவையறக் கற்றான்;
நற்சான்று பெற்றான்!

ராதை - மகனுக்கு
ரட்சை கட்டினாள்;

உப்பு மிளகாய் சுற்றி - தனது
உள்ளங்கையில் வைத்து - அதில்
துப்பு என்று சொல்லி - அந்தக்
கையெச்சிலை - கர்ணனுக்குக்

கண்ணெச்சில் படாதிருக்கக்
கனலில் கொட்டினாள்!

வித்து வளர்வது போல் -
வித்தன் கர்ணனிடம் -
வீரம் வளர்ந்தது;
அதனிலும் அதிகமாய் -
அவன் நெஞ்சத்தில் -
ஈரம் வளர்ந்தது!

கொடுக்கப் பிறந்தவன் -
தன்னால்
கொடுக்க முடிந்ததை -
பிறர்க்குக்
கொடுத்துக் கொண்டிருந்தான்;
கொடுத்துக் கொடுத்து -
கொடையில் சிறந்த மழையின்
புகழை -
கெடுத்துக் கொண்டிருந்தான்!

இங்ஙனம்...
வீரமும் ஈரமும் -
ஒருசேரத் திகழும் -
வியத்தகு கன்னன் - ஒரு
விற்பன்னன்; எதிர்
நிற்போர் சிரங்கொய்யும் -
விற்போர் மன்னன்!

இவனால் -
இனிவரும் காலத்தில்...

தன்
அன்பு மகன் அர்ச்சுனனுக்கு -
ஆபத்து வரும் என்று
அஞ்சினான் இந்திரன்;
அதனைத் தவிர்க்க - ஓர்
அசிங்கமான சூழ்ச்சியை -
ஆற்றினான் தந்திரன்!

கர்ணனை -
காத்து நிற்பவை...

அவன் -
காதோடு பிறந்த -
குண்டலமும் -
மார்போடு பிறந்த -
மணிக் கவசமும் ஆகும்;

இவை -
இரண்டையும்...
'தா'வென்று கேட்டு -
தானமாகப் பெற்றால் - பின்
'சா'வென்று சொல்லாமலே -
அவன்
சக்திகள் செத்துப் போகும்!

வலியன் - ஒரு
மெலியன் ஆவான்; நிமிர்ந்து -
நிற்கவும் - ஒரு
வக்கற்றுப் போவான்!

குன்றும் -
குன்றிமணியாய்க்
குன்றும்; வெய்யிலின் -
கன்றும் -
மின்மினியாகிக்
கன்றும்!

இப்படியெல்லாம் -
எண்ணமிட்டவாறே...

விண்ணில் இருந்து -
விண்ணவர் கோன் -
மண்ணில் இறங்கினான்;

உறக்கத்தில் இருந்த - தன்
உத்தம புத்திரனிடம் -
இதுபற்றி -
எச்சரிக்க...

விண்ணில் இருந்து -
வெய்யவன் - கர்ணனின்
கண்ணில் இறங்கினான்!

# கனவும் - நனவும்

தூய்யன்! உஷை தழுவும் -
மெய்யன்! ஓராயிரம் -
கையன்! ஒளி உமிழும் -
வெய்யன்!

கர்ணனின் -
கண்ணில் இறங்கினான்; பிறகு -
கண்வழியே - அவனது
எண்ணில் இறங்கினான்!

எழுந்தது சொப்பனம்;
எதிர் நின்றது -
எழுபரிச் சப்பரம்!

உள்ளே -
உட்கார்ந்திருந்தான்...
உயிர்க்கும் -
பயிர்க்கும் -
நாளும் நலந்தரு -
நாயகன் நாயிறு!

கர்ணன் - தனது
கனவில்...
தரிசித்தான் அச்சனை; உடனே -
தொடங்கினான் அர்ச்சனை!

'எந்தையே!
முந்தைக் கெல்லாம் -
முந்தையே!
தீயின் -
தாயே!
சோதி நதியின் -
தோற்றுவாயே!

வான வாவியில் -
விடியலில் விகசித்து -
பிரகாசத் தேனைப்
பிலிற்றுகின்ற -
நெருப்பு -
நீரஜமே!

விசும்பில் -
வீற்றிருந்தபடியே -
பசும்புல் -
பனியைத் துடைக்க -
நாளும் -
நீளும்கரமே!

எண்ணெயூற் றாமல் -
எரியூட் டாமல் -
விண்ணில் எரியும் -
மாயத் திரியே!
ஔபாசனத்தை -
அனுதினம் பேணும் -
சிரௌதிகள் ஓதும் -
காயத்திரியே!

உன் -
தேஜோமயமான -
தரிசனம் பெற்றேன்;
இருவிழி இருக்கும் பயனை -
இன்றே நான் உற்றேன்!
அத்தனே! - பரி
சுத்தனே! - நீ
அந்தம் ஆதி -
அள்ளியிறைக்கின்றாயே...
அந்தம் மிகு -
அந்தக் கிரணத்தால் - என்

அந்தக்கரணத்தில் - உள்ள
அந்தகாரம் அற்றேன்!'

என்று -
இரவியின் திருவடிகளில்...

விழுந்து வணங்கினான் -
வள்ளல்; அவனை -
வாரியெடுத்து -
வாஞ்சையோடு பேசினான் -
வெய்யில்!

'கர்ணனே! - குண்டலக்
கர்ணனே!
கர்ண பரம்பரையாய் -
காலம் பேசப் போகும் -
கொடைக்
கையனே! - என்
பையனே!

நான் -
பகல்; நீயென் -
நகல்;
எவன் உனக்கு -
இகலோ -
எனக்கும் அவன் -
இகல்!

இடுக்கண் வரின் -
என்னிடம் நீ -
புகல்;
என்றும் உனக்கு -
நானிருக்கிறேன் -
புகல்!

ஏனெனில் - நீ
என் சுடர் -
ஏந்தி நிற்கும் -
அகல்; உனக்கு வரும் -
ஆபத்தை - இப்போதே
அறிவிக்கிறேன்;

அதில் சிக்காமல் - நீ
அகல்!

உன்னால் தன் மகனுக்கு -
உபத்திரவம் வாராதிருக்க...

வாசவன் -
வர இருக்கிறான் - உன்னிடம்
யாசிக்க;
வேண்டுவார்க்கு - நீ
வேண்டுவதைத் தருவாயேயன்றி -
யாண்டும் முயன்றதில்லை -
சிறிது
யோசிக்க!

இதையறிந்துதான் -
இந்திரன் வருகிறான்...
உன் -
கவசத்தையும் -
குண்டலத்தையும் -
பிச்சையாய்ப்
பெற!

இடாதே பிச்சை;
ஈதல் என்பதையே -
மகனே! நீ -
மற!

போகாதே மோசம்!
பேசுவது நானல்ல;
பிள்ளைப் பாசம்!'

புத்திரனுக்கு -
புத்திமதி சொல்லிவிட்டு -
புறப்பட்டான் தேரேறி -
புகையில்லா நெருப்பு;
உடனே -
கனவு கலைந்து -
கர்ணனுக்கு -
உண்டானது விழிப்பு!

'சே!
என்ன வேடிக்கையான -
கனவு!'
என்று...

தலையும் புரியாமல் -
வாலும் புரியாமல் -
தம்பித்து நின்றான்; ஒரு -
கேள்வியையும் -
தனக்குத் தானே -
கேட்டுக் கொண்டான்!

'எந்தை -
என்பது -
யார்?
விண்ணில் தேரோட்டுபவனா?
மண்ணில் தேரோட்டுபவனா?'

இப்படிக்
கேள்வி கேட்பதே - அவனுக்கு
கேலியாகப் பட்டது; பின் -
'கனவுதானே!' என்று -
கேள்வியை - மனம்
கைகழுவி விட்டது!

இன்னும் விடியவில்லை;
இருள் வெள்ளம் வடியவில்லை;
இருப்பினும்...
ஒரு -
வித்தியாசமான கனவு வந்து -
விழிப்பும் வந்தபின் -
திரும்பவும் அவனால் -
துயில் கொள்ள முடியவில்லை!

சில சமயம் -
சிலருக்கு...

கனவு -
நனவாவ துண்டு;
நனவு -
கனவாவ துண்டு!

இதில் -

விசித்திரமான -
வேதனை என்னவெனில்...
எது கனவு?
எது நனவு? - எனத்
தீர்மானிப்பதில் -
திக்குமுக்காடும் மனது!

கர்ணன் -
கதிரவனோடு பேசியது -
கனவு; ஆனால் -
நனவு போல் தொனித்தது!

அவன் -
அங்க தேசத்து -
அதிபதி ஆகியது -
நனவு; ஆனால் -
கனவு போல் தோற்றியது!

இப்போது - அவன்
எழுந்து உட்கார்ந்திருப்பது...

ஆணிப்பொன் கட்டில்;
அன்னத் தூவி!

அவன் -
வசிப்பது வண்ணமாடம்;
புசிப்பது பரமான்னம்;

பருகுவது பழந்தேறல்;
பூசுவது புனுகுசந்தனம்!

ஏந்துவது செங்கோல்;
எழுந்தருள்வது சிங்காதனம்;
தாங்குவது மாணிக்கமகுடம்;
தரிப்பது பீதக வஸ்திரம்!

ஒரே நாளில் -
ஒரே கணத்தில்...

தான் -
அங்க தேசத்து -

அரசாக -
ஆக்கப்பட்டதை...
இப்போது கர்ணன் -
எண்ணிப் பார்த்தான்;
இங்கொன்றும் -
அங்கொன்றுமாக -
இறைந்து கிடந்த -
எண்ணங்களை...
ஒழுங்கு படுத்தி -
ஒன்று சேர்த்தான்!

தன் -
குருகுலத்தில் -
கல்வி பயின்ற -
அனைவர்க்கும் - துரோணர்
அன்றொரு நாள்...

பரிட்சையும் -
போட்டியும் வைத்தார்;
வேடிக்கை பார்க்க -
'வேகு வே'கென்று வந்து -
அங்கு
ஊர்மக்கள் மொய்த்தார்!

திருதராஷ்டிரன்;
விதுரன்;
பீஷ்மன்;
கிருபன்;
மற்றும் -
குந்தி;
காந்தாரி...
என்று -
அரசகுடும்பமே - அந்த
அழகிய மண்டபத்தை -
ஆக்கிரமித் திருந்தது;
காரணம் -
காணக் கிடைக்காத விருந்தது!

தருமனும் தம்பியரும் -
துரியோத னாதியரும் -
அவரவர் கற்ற -
ஆயுதப் பயிற்சியை -
அரங்கேற்றினர்;
பார்வையாளர்கள் -
பிரமித்துப் போய் -
பெரிதும் போற்றினர்!

இறுதியில் -
எல்லாவற்றிற்கும் சிகரம் போல்...
அர்ச்சுனன் ஆற்றிய -
அம்பு வித்தைகள் -
ஆரையும் -
அதிசயிக்க வைத்தன;
அவன் அனுப்பிய சரங்கள் -
அவன் குறித்த இலக்குகளில் -
அட்டியின்றி சென்று தைத்தன!

பல்லாண்டு - குருவிடம்
பிச்சாடனம் செய்து -
பெற்ற மந்திரங்களை -
உச்சாடனம் செய்து...

ஓரம்பால் -
கனல் வார்த்தான்;

ஓரம்பால் -
புனல் வார்த்தான்;

ஓரம்பால் -
சூறையை உண்டாக்கினான்;

ஓரம்பால் -
பாறையைத் துண்டாக்கினான்!

அர்ச்சுனனின் ஆற்றல் -
அனைவர்க்கும் -
ஆச்சரியத்தைத் தந்தது;
மதமதத்த துரியோதனனின் -
மனத்திற்கு மட்டும் -
மாச்சரியத்தைத் தந்தது!

அவன் -

மூக்கு உமிழ்ந்த -
மூச்சில் -
மூலச்சூடு தெரிந்தது;
வயிறு -
வெளியே தெரியாமல் -
உள்ளுக்குள் எரிந்தது;
அந்த -
வெப்புள் சிக்கி - அவன்
தொப்புள் கரிந்தது;
ஒருசிலருக்கு மட்டுமே - அவன்
உபாதை புரிந்தது!

அவ்வமயம் -
அவையே அஞ்சுமாறு...

முனிவர் துரோணரின் -
மாணாக்கரில் ஒருவன் -
முண்டா தட்டினான்;
முண்டாவில் -
முன்கை மணிக்கட்டால் -
முரசு கொட்டினான்!

அந்த
சப்தத்தில் -
சபையோரின் -
சப்த நாடியும் ஒடுங்கியது;

நிலம்கூட - சில
நொடிகள் நடுங்கியது!

வாளியும் -
வரிவில்லும் ஏந்தியதோர்-
யாளிபோல் தோற்றம் தந்தான்;
மத்தவாரணத்தை -
ஒத்த நடைபோட்டு - அவன்
மைய மண்டபம் வந்தான்!

தனக்கு
தனுர்வேதத்தின் -
சூட்சுமங்களை -
சொல்லிக் கொடுத்த...

துரோணாசாரியரின் -
திருவடி மலர்களை - தொட்டுத்
தோத்தரித்தான்; அவர் -
'வாழிய! மைந்தா!' என -

வாழ்த்தியதும் -
தோள்கள் புடைத்தான்!

பளபளத்தது குண்டலம்;
தகதகத்தது கவசம்;
படபடத்தது உக்கிரம்;
வெடவெடத்தது உடலம்!
அவ்வளவுதான்!
அக்கணமே...

கன்றை அறிந்தது -
கறவை! தனது -
குஞ்சை அறிந்தது -
பறவை!

குந்திதேவி - ஒரு
குற்ற உணர்வில் -
மூழ்கிப் போனாள்;
மூர்ச்சை யானாள்!

துணுக்குற்றது -
சபை! தன்னிச்சையாய் -
துடித்தது கர்ணனின் -
தசை!

சேடியர் -
சிசுருஷையால்...

மாதரசி குந்தி -
மெல்லத் தெளிந்தாள் -
மூர்ச்சை; உடனே -
கர்ணனைக் காக்க -
கடவுளிடம்
செய்து கொண்டாள் -
நேர்ச்சை!

# பாகன் மகன் - பார்த்திபனானான்!

சிட்சை கற்கவந்த - சகல
சீடரிடத்தும் - துரோணருக்கு
சம திருஷ்டி இருந்ததாக -
சொல்லத் தகாது;
மகன் அசுவத்தாமனையும் -
மாணவன் அர்ச்சுனனையும் -
மட்டும் -



ஒரே எடையென்று -
ஒப்புக்கொண்டது - அவரது
உள்ளத் தராசு!

அத்தகு -
பட்சபாதம் - கர்ணனின்
பார்வைக்குப் பட்டது;
அவன் நெஞ்சத்தை - அது
அடிக்கடி சுட்டது!
அதை - அவன்
ஆட்சேபிக்க
நினைத்தபோதெலாம்...

'அவர் குரு;
ஆண்டவன் உரு;
குருவை விமர்சித்தல் -

குற்றமென்று இரு!'
என்று -
உரைத்தது - அவன்
உள்மனம்; அதற்கு -
ஒப்பியது - அவனது
வெளிமனம்!

துரோணரின் -
தவப் பள்ளியில் -
வில்வித்தை கற்ற -
வித்தியார்த்திகளில்...

அர்ச்சுனன் மிகவும் -
ஆணவம் மிக்கவன் என்று -
கர்ணன் -
குருட்டாம்போக்காய் -
கணித்திருந்தான்; அந்த -
கணிப்பின் -
காரணமாகவே - தன்னைப்
பெரிதும் துரியோதனனோடு -



பிணித்திருந்தான்!

தான் மட்டும் –
தனிச்சலுகையாய்...
சிட்சை பெற்ற –
செருக்கில் இருந்தவனுக்கு –
சிட்சை தர – ஓர்
அமயம் பார்த்திருந்தான்;
அமையும் என்று –
அதற்கெனக் காத்திருந்தான்!

அர்ச்சுனன் நிகழ்த்திய –
அற்புதங்களைக் கண்டு –
அவையெலாம் –
'ஆஹா!' என்று –
அவையெலாம்...

சிரக்கம்பம் செய்ததை –
சூரியன் மகனால் –
சீரணிக்க முடியவில்லை;
எனவேதான் –
ஏட்டிக்குப் போட்டியாய் –
ஏந்தினான் நெடியவில்லை!

'அர்ச்சுனனே!
தானெனும் –
தருக்கு –
தலைக்கேறி நிற்கும் –
துர்ச்சனனே!

விஜயன்; தனஞ்சயன்;
பார்த்தன்; பல்குணன் – என
வேண பெயர்களில் –
விளிக்கப் படுபவனே;
வாண வேடிக்கை போல் –
வாளிகள் விடுபவனே!

நீ –
தோளின்மேல் –
தொங்கும் – அம்புத்
தூக்கின்மேல் கைவைத்தால் –
ஊர்
மூக்கின்மேல் விரல்வைக்கும் –
என
தன் முதுகில் –
தானே தட்டிக்கொள்ளும் –
தற்குறியே! உன்னை
வியக்கவைக்கும் – என்னுடைய
விற்குறியே!

நீ –
ஆற்றிய வித்தைகள் –
அத்துணையும் – நான்
ஆற்றுவேன்; அல்லது –
என்னுடன் பொருதல் உனக்கு –
ஏற்புடையதாயின், சொல்!
நாண் –
ஏற்றுவேன்!'

இங்ஙனம்...
அர்ச்சுனனுக்குக் கர்ணன் –
அறைகூவல் விட்டதும் –
அவையில் – ஒரே
அட்டகாசமான கரகோஷம்;

'கர்ணனின் –
கையில் முன் –
விஜயன் –
விழுந்துவிடுவான்!' என்று –
சுயோதனன் விழிகளில் – கோடி
சூரியப் பிரகாசம்!

தனஞ்சயன் கர்ணன் –
துவந்தயுத்தத்தை – அது
தொடங்கு முன்பாகவே –
கிருபர்
தடுத்தார்; ஒரு –
வர்ணனைக்குள் –
உட்கார்த்த முடியாத வீரன் –
கர்ணனைப் பார்த்து – சில
கேள்விகள் தொடுத்தார்!

'கர்ணா! நீ –
கெட்டிக்காரனாயிருக்கலாம்;
கெட்டிக்காரனா யிருப்பதால் –
கொஞ்சம் தருக்கலாம்!

உன்
வில்லுக்கு பதில்சொல்ல –
விஜயனை நீ –
மல்லுக்கு அழைக்கிறாய்; அரச –
மரபுக்கு மாசு இழைக்கிறாய்!

இங்கு –
எவரும் எவரோடும் –
போட்டியிடவும் –
போரிடவும்...
போதாது – புஜ
பலம் மாத்திரம்; பிரதானமாய் –
கருதப்படுவது – அவரவர்
குலம் கோத்திரம்!

அர்ச்சுனன் –
அன்னையார் குந்திதேவியின் –
மடியில் பிறந்தவன்; அரச –
குடியில் பிறந்தவன்!
நீ –
எக்குலம்?
யாவர் உன் யாயும் தந்தையும்?
அவையெலாம் ஓது; அதன்பின் –
அர்ச்சுனனோடு மோது!'

கிருபையே இல்லாமல் –
கிருபாசாரியர் – இப்படிக்
கேட்டதும்...
கர்ணன் –
கூனிக் குறுகிக்
கூசிப் போனான்; முகத்தில் –
கரும்புள்ளி செம்புள்ளி –
குத்தினாற்போ லானான்!

கவிழ்ந்தது தலை; கை நழுவிக் –
கழன்றது சிலை; அவை முன்னே
–
அவிழ்ந்தது அவனது –
அவல நிலை!

உடனே –
துடித் தெழுந்தான் –
துரியோதனன்; தழல் –
துப்பும் வதனன்!

'குருவே! – தங்கள்
கூற்று நீதியல்ல; ஒருவனின் –
கல்வியை வீரத்தை –
கணிப்பது சாதியல்ல!

சாதிக்கும் ஆற்றல் – எந்த
சாதிக்கும் உண்டு; ஒரு சில –
சாதிக்கே அது சாத்தியமென்று –
சாதிப்பதா நன்று?

வேதம் –
பயின்றிட ஒருசாதி; வாணிபம் –
புரிந்திட ஒருசாதி;
வாள்கொண்டு–
போரிட ஒருசாதி; உழைத்துச்
சோறிட ஒருசாதி...
என வகுத்தால் –
எங்ஙனம் நாம் உய்வம்?
நாலில் எக்குலம் என்று –
நானிலத்தார் ஒவ்வொருவரின் –
தோலில் எழுதியிருக்கிறதா –
தோற்றுவித்த தெய்வம்?

எவ்வுயிர்க்கும் –
இவ்வுலகு இட்ட பெயர்...

பிறப்பில் சிசு;
இறப்பில் சவம்;
இடைப்பட்ட பெயரெல்லாம் –
கடைப்பட்ட அவம்!

எவர் எங்கே -
எவ்வகையில் -
எய்தினாலென்ன தோற்றம்?
ஆற்றும் பணியினாலன்றோ -
அமைகின்றது -
அவரவர்தம் ஏற்றம்!

முன்னம்...
மூங்கிலில் தோன்றினான் -
முக்கண்ணன்; தூணைப்
பிளந்து தோன்றினான் - காயாம்
பூவண்ணன்;
அகத்தியரும் -
ஆசாரியர் துரோணரும் -
குழந்தையாய் விளைந்தது -
குடத்தில்;
தாங்களும் -
தேவசேனாபதி முருகனும் -
நயனங்கள் மலர்ந்தது -
நாணலில்!

பிறப்புக்கும் -
பெறும் பெரும் -
சிறப்புக்கும்...
உறவோ -
ஒட்டுதலோ -
ஒரு துளியும் இல்லை; பின்பு -
எதற்காகக் கர்ணன் - தான்
இன்னான் எனச் சொல்லி -
ஏந்த வேண்டும் வில்லை?

இன்னான்தான் -
இன்னது செய்யலாமென -
எவன்
சொன்னான்?
சொன்னால் -
சூதுமதி படைத்தவன் ஆவான் -
அன்னான்!

வனம் பார்த்தா மேய்கிறது -
வளி?
இனம் பார்த்தா காய்கிறது -
ஒளி?
நிலம் பார்த்தா பாய்கிறது -
நீர்?
குலம் பார்த்தா பெய்கிறது -
கார்?

குருவே!
கற்பிப்போனுக்கு -
கூடாது பாரபட்சம்;
பாரபட்சம்தான் -
பாவங்களில் உச்சம்!
எனினும்...
என் ஆசானே!
இக்கணமே - எனது
இனிய நண்பன் கர்ணனை...
அங்க தேசத்தின் -
அதிபதி ஆக்குகிறேன்; அவன் -
பிறப்பால் எய்திய -
பழியைப் போக்குகிறேன்!'
இவ்வாறு -
எவரும் எதிர்பாரா வண்ணம்...
சபையில் -
சுயோதனன் அறிவித்தான்!

பிதா;
பிதாமகன்;
பிற -
பந்துக்கள்...
ஆகியோரின் -
அனுமதி பெற்று -
அந்தணர்களை -
அங்கேயே வருவித்தான்!

கர்ணனை -
கனக சிங்காதனத்தில் -
ஆடை அணிகளோடு -
அமர வைத்து...

சாஸ்திர -
சம்மதமான -
சகல -
சாங்கியங்களோடு...
குடை;
கட்கம்;
செங்கோல்;
சாமரம்...
ஆகிய -
அனைத்தும் அருளி...
புஷ்பம் தூவி - நெற்
பொறி தூவி -
மஞ்சளில் தோய்த்த -
மந்திராட்சதை தூவி...
பாரறிய -
பகலறிய -
ஊரறிய -
உலகறிய -
கர்ணன் திருமுடியில் -
கிரீடம் சூட்டினான்;
சாரதி மகனை - ஒரு
சிற்றரசாக்கிக் காட்டினான்!

சபை -
சந்தோஷத்தில் பாடியது;
'நட்புக்கு அர்த்தம் -
கற்பித்தவன்!' என்று -
துரியோதனனை - தனது
தோளில் வைத்து ஆடியது!

துரியோதனனும் கர்ணனும் -
தழுவிக் கொண்டனர்;
கண்ணீரால் பரஸ்பரம் -
கழுவிக் கொண்டனர்!

அதனைக் கண்டு -
ஆங்கிருந்த அதிரதன் -
அதிர்ந்து போனான்;
உற்ற அச்சத்தால் -
உள்வலி மொத்தமும் -
உதிர்ந்து போனான்!

ஓர் -
ஓரமாய் - தனது
தாதை நிற்பதை - கர்ணன்
தெரிந்து கொண்டான்;
உடனே -
ஓடோடிச் சென்று...
தகப்பன் திருவடியை -
தொழுது நின்றான்!

பீமனின் -
பார்வையில் - அந்தக்
காட்சி பட்டது; அவன் நாக்கு -
கர்ணனைச் சுட்டது!

'ஓ!
உன் அப்பன் -
தேர்ப்பாகனா? - நீ
தேரோட்டி மகனா?' என்று -
தொந்திகுலுங்கச் சிரித்தான்;
தொடர்ந்து - அவனைத்
தொக்கென எண்ணிக் கரித்தான்!

'கர்ணா! உன்-
குலத்திற்கு ஏற்றது -
குதிரைச் சவுக்கு!
அதை எடு; அதை விடுத்து -
ஆலமரமாக ஆவதற்கு -
ஆசைப்படலாமா சவுக்கு?

அங்க தேசத்திற்கு -
அதிபதி நீயா?
அமரர்க்கு உரிய - நல்
அவிசை உண்பது நாயா?'

பீமன் இப்படிப்
பேசியதும் -
பாதிசபை சிரித்தது;
மீதிசபை சலித்தது!

அன்று நடந்தவற்றை

இன்று நினைக்கையில்...
கர்ணனுக்கு - இன்னமும் ஒரு
கனவுபோலத்தான் தோற்றியது;
காரணம்...
காலம் அவனை - அவ்வளவு
கெடுபிடியாக - அரசு
கட்டிலில் ஏற்றியது!

மஞ்சத்திலிருந்து -
மெல்ல எழுந்து...

மாடத்தின் - வெளி
முற்றத்தில் போய் நின்றான்;

கீழ்த்திசையில் -
கதிரவனையும்; மாடத்தின் -
கீழே ஒரு -
கிழவனையும்...

காலைப்பொழுதில் - ஒருசேரக்
கர்ணன் கண்டான்!

---

# இந்திரன் போட்ட இரட்டை வேடம்!

அவன் - ஓர்
அந்தணன்;

பஞ்சம் -
பஞ்சக் கச்சம் கட்டி
வந்தாற்போல் -
வந்தனன்!

உச்சிக்குடுமியும் - தாடையில்
ஒழுகிய தாடியும் - நரை
ஓடிக் கிடந்தன; மார்பில் -
அழுக்கேறிய உத்தரியமும் -
அறுவட உபவீதமும் -
ஆடிக் கிடந்தன!

வயதும் -
வறுமையும் -
வரிவரியாக...
வருத்தம் தோய - பாடிய
விருத்தம் போலே - அவனது
விருத்தம் இருந்தது; அந்த -
விருத்தம் வழங்கிடும் -
அருத்தம் போலே -
அவன் நடையில்

நிருத்தம் இருந்தது!

ஆம்!
தள்ளாமையினால் - நடை
தள்ளாடினான்;
மூன்றாம் காலாக - கையில் ஒரு
மூங்கில் கழியிருந்தும்...
ஓர் -
அடிஎடுத்து வைப்பதற்குள் -
அல்லாடினான்!

'கிழடு' என்பதன் -
கதைச் சுருக்கம் -
சொல்லியது அவனது -
சதைச் சுருக்கம்!

கர்ணனின் -
கட்டளைப்படி...
ஓர் -
அரசு ஊழியன் - அந்த
அந்தணனை அழைத்து வந்தான்;
வந்தவன் - கர்ணனுக்கு
வணக்கமும் வாழ்த்தும்
வாய் நிறையத் தந்தான்!

'கர்ணனே! கொற்றக்
குடைமன்னனே! – அறம்
குடை கவிழாது காத்தருளும் –
கொடை மன்னனே!

அங்க தேசத்து–
அரசே!
பஞ்சையர்க்கு வாய்த்த –
பரிசே!

ஐயம்புகுவோர்க்கு –
'ஐயம் இல்லை!'
என்று –
என்றுமே உரைக்காத...
ஐயன் நீ; இதில் –
ஐயம் இல்லை!

வான் அளப்பதற்கும் –
வரை யுண்டு;
ஆன் அளப்பதற்கும் –
அள வுண்டு;
செய் அளப்பதற்கும் –
சமய முண்டு; உன் –
கை அளப்பதற்கு –
காலமேது? கணக்கேது?

வரையாது வழங்கும் – அருள்
வரையே! வாழிய நீ!
வானமும் வையமும் – உள்ள
வரையே!'

வயோதிக வேதியன் – இங்ஙனம்
வாழ்த்தியதும்...
'அந்தணரே! தங்கள் –
ஆசிகளுக்கு நன்றி;
ஒருவனை –
வேறெது வாழவைக்கும் –
நல்லோர்
வாழ்த்துகள் அன்றி?

'ஈந்து –
இதயம் உவக்கும் –
வேந்து!'
என –
என்னை...
தாங்கள் புகழ்ந்தது –
தகாது; அந்த –
வான் தருவதைவிட –
நான் தருவது –
மிகாது!

எனினும்...
அடியேனால் –
ஆவ தென்ன? இந்த –
எளியேன் – தங்களுக்கு
ஈவதென்ன?' என்று –

கர்ணன் –
கருணையோடு வினவினான்;
தானமாய் –
தனக்கு வேண்டியதை –
மறைவு ஒளிவு இன்றி – அந்த
மறையோன் விளக்கினான்!

'கர்ணா!
சுற்றிவளைத்துச் சொல்லாமல் –
சுருக்கமாகச் சொல்லுகிறேன்;
கொடுக்க
இயலாவிடினும் – உனை
கோபிக்காமல்
செல்லுகிறேன்! உன்
மார்போடிருக்கும் கவசம்!
செவி –
மடலோடிருக்கும் குண்டலம்!

அவை இரண்டு மட்டுமே –
இந்த
அந்தணன் கேட்கும் தானம்;
தந்தால் – உன்னைத்

தலையால் தொழும் வானம்!'

பிராயம் முதிர்ந்த –
பிராமணன் இங்ஙனம்
பிரார்த்தித்ததும்...

கவசத்தையும் –
குண்டலத்தையும் –
சூரியால் – உதிரம்
சொட்டச் சொட்ட...
அடுத்த கணமே – கர்ணன்
அரிந்து கொடுத்தான் ;
அந்தணனாய் வந்திருப்பவன் –
அமரேசன் என்பதை –
அறிந்து கொடுத்தான்!

கனவில் வந்து –
கர்ணனை எச்சரித்தான் –
கதிரவன்! எனினும் –
கர்ணன் கேட்கவில்லை;
காரணம் – ஒரு
புதிரவன்!

தனக்கு மிஞ்சிதான் –
தானம் என்பது – அவனளவில்
திண்ணை வேதாந்தம்;
தன்னையும் மிச்சமின்றி –
தருவதுதான் – அவனது
தருமத்தின் விருத்தாந்தம்!

கொடை – அவன்
குடலில் ஓடும் –
குருதி; அது –
புரியாமல் –
பேசிச் சென்றான் –
பருதி!

கேட்ட பொருள்கள் –
கிடைத்தவுடன் – தான்
போட்ட வேஷத்தை –
புரந்தரன் கலைத்தான்;

வள்ளல்களுக் கெல்லாம் –
வள்ளலாய் விளங்கும் –
வள்ளலைக் கண்டவுடன் –
வாய்பிளந்து மலைத்தான்!

ஆயிரம் கையன் –
அருளிய மகனிடம் –
ஆயிரம் கண்ணன் –
அன்பொடு கூறினான்:

'கர்ணா! உன்னிடம் –
கையேந்தி வந்தேன்; ஏழைப்
பார்ப்பனன் என்றொரு –
பொய்யேந்தி வந்தேன்!

நான் –
மானுடன் அல்ல;
வானவன்!
யாசகன் அல்ல;
வாசவன்!
நீ –
ஆவியைக் கேட்பினும் –
அருள்கின்ற ஆண்டகை!
ஆருக்கு உண்டு – உன்போல்
அருள்நலம் பூண்டகை?

வள்ளலே! கேள்!
விரும்பும் வரம்! என்னிடம் –
கொண்டால்
குற்றமில்லை – உனது
கொடுக்கும் கரம்!'

கர்ணன் – இரு
கைகுவித்து – ஒரு
வணக்கம் போட்டான்; பின் –
வரத்தைக் கேட்டான்!

'வாசவனே! நான் –
வேண்டுவது...
சத்துருக்களை –
சங்கரிக்க வல்ல – உன்

'சக்தி' ஆயுதம்; அதை -
நல்கினால் -
நானுனக்குச் சொல்வேன் -
நன்றி ஆயிரம்!'

கர்ணன் -
கேட்ட வரத்தை -
இந்திரன் வழங்கினான்; கூட -
இன்னொன்றும் விளம்பினான்!

'கர்ணா! இதை நீ -
கையில் ஏந்தி களம்புகுந்தால்...
எத்தகு எதிரியையும் -
இது நூறும்; ஒருயிரை-
வாங்கியபின் - உடனே இது
வானம் ஏறும்!'
இப்படிச் சொல்லி -
இந்திரன் மறைந்தான்;
வெள்ளை -
வாரணம் ஏறி -
வானம் விரைந்தான்!

இந்திரன் -
அந்தணன் வேஷம் போட்டு -
இவனிடம்
யாசித்தான்; அதுபோல் -
இவனும் -
அந்தணன் வேஷம்
போட்டு - ஓர்
ஆசானிடம் வாசித்தான்!

பிறிதொரு சமயம் - கர்ணன்
பரசுராமனிடம் -
அபூர்வமான
அஸ்திரசாஸ்திரங்களின் -
ஆழ அகலங்களை -
அறிந்துகொள்ள -
ஆசைப் பட்டான்; அதற்கென -
வேதியன் போலே-
வேஷ மிட்டான்!

சீடனாய் -
சேர்ந்திருப்பவன்...
அங்க தேசத்து-
அரசன் - என...
பரசுராமன் அறிந்தால் -
பாடமா போதிப்பான்?
பரசை எடுத்து - கர்ணன்
சிரசை சேதிப்பான்!

பகவான் -
பரசுராமனுக்கு...
சத்திரியன் என்றாலே -
சன்மப் பகை; ஒரு -
பார்த்திபனைப்
பார்த்தாலே - தீப்
பற்றி யெரியும் - அவன்
பூர்வ சிகை!

அவன்
மன்னர்க்கு -
மறலி;
மற்றவர்க்கு -
மகரிஷி!

ஆளுகை புரியும் -
அரச இனம் -
அவனுள் மூட்டும் -
ஆறாச் சினம்!
அவன்
கோடரி குடித்த -
கொற்றவர் குருதி -
கொஞ்சநஞ்ச மல்ல; அவன்
கல்லாத தில்லை! எனினும் -
கல்லாது விட்டான் -
கோபத்தை வெல்ல!

குருவிடம் - தனது
குலம் வேறாய்ச் சொல்லி -
குருகுலம் புகுந்தான் -
குந்தியின் தலைச்சன்; தடீப்

பள்ளியில் சேர்ந்த - தன்
பிள்ளையை வாழ்த்தி -
பல்லாண்டு கூறினான்
பகலெனும் தகப்பன்!

வித்தியார்த்தியாய் - தன்
வாசலுக்கு...
வந்து சேர்ந்தவன் -
வேதியன் - என
வாஞ்சை காட்டினான் -
சோதியன்!

ஆசாரியனின் -
அகமும் புறமும் மலருமாறு...

கர்ணன் - நித்திய
கர்மானுஷ்டானங்களை -
கடைப் பிடித்தான்; ஓர் -
யதி போல் - கையில்
யக்ஞோபவீதத்தின் -
பிரமமுடிச்சை -
பிடித்துக் கொண்டு -

காலையும் மாலையும் -
மனத்துள்
காயத்திரி படித்தான்!
கர்ணன் மேல் - தனிக்
காதலாகி...

பரசுராமன் - அவனுக்கு
பிரம்மாஸ்திரத்தை -
போதித்தான்;
போதித்ததை - சீடன்
புரிந்துகொண்டானா - என்றும்
சோதித்தான்!

சோதனையில் - கர்ணன்
தேறினான்; குரு -
சந்தோஷ சிகரத்தில்
ஏறினான்!

இறுக்கமான-
இந்த...

ஆசாரியன் சீடன் -
அன்னியோன்னியத்திற்கு
விளைந்தது ஒரு வழு;
விளைத்தது ஒரு புழு!

ஒருநாள் -
மத்தியான வேளையில் -
மரத்தடி நிழலில் - கர்ணன்
மடிமேல் தலைவைத்து -
மாமுனி பரசுராமன்...

கண் -
அயர்ந்திருந்தான்;
ஆசாரியன் உறக்கத்திற்கு -
அனுசரணையாய் - கர்ணன்
அசையா திருந்தான்!

அவ்வமயம் -
அருவருப்பான -

காட்டுப் புழுவொன்று -
கர்ணனின்...

தொடையைக் கடித்துக்
குடைந்தது; அவன்
தசையை தயிர்மத்துபோல் -
கடைந்தது!

குருவின்
கண்ணுறக்கம் கெடுமென -
கர்ணன்...
அந்த -
அவஸ்தையை ஏற்றிருந்தான்;
அலுங்காது வீற்றிருந்தான்!

நேரம் - சிறிது
நகர்ந்தபின்...

பரசுராமன் விழித்து -
பார்த்தான் பக்கம்; அவன் -

பார்வையில் பட்டது -
பச்சை ரத்தம்!

வேதத்தீ -
ஊழித்தீ ஆனான்;
உக்கிரத்தின் -
உச்சத்திற்கே போனான்!

'சீடனே!
சாதியை மாற்றிச் சொல்லிய
மூடனே!

ரணங்களையும் -
ரத்தத்தையும்...
சகித்திருப்பது
சத்திரியனுக்கு மட்டுமே -
சாத்தியம்; அத்தகு -
பொறையில் -
பிராமணனுக்குக் கிடையாது -
பாத்தியம்!

ஆதலால் - நீ
அந்தணன் அல்ல; இனியும் -
அதிகம் தாமதிக்காதே - நீ
ஆரென்று சொல்ல!'

பரசுராமன் இப்படிப்
பற்றி யெரிந்ததும் -
தான்
செப்பியது
பொய்யென - கர்ணன்
ஒப்புக் கொண்டான்;
முனிந்த முனிமுன் - தலை
குனிந்து நின்றான்!

'நீ -
பொய் சொல்லிப் பயின்றது -
பிரம்மாஸ்திரம் ஆகும்; உன் -
மரணத் தருவாயில் - உனக்கது
மறந்து போகும்!' என்று -

பரசுராமன்
பயங்கர சாபமிட்டான்;
சூரியன் சுதனை -
சுடுசொற்களால் சுட்டான்!

தன் -
அன்புமகன் -
அர்ச்சுனனை -

கர்ணனிடமிருந்து
காக்க...

புழுவாய் - அங்கு
போந்தவன் - அதே
இந்திரன் - என்னும்
தந்திரன்!

# ஏகலைவன்!

ஒருவன் -
உள்ளத்தில் உள்ள -
உரம் - ஓங்கிவளர
ஓயாமையும் ஒழியாமையும்தான் -
உரம்!
அல்லும் பகலும் -
அனவரதமும் -
வில்லும் கையுமாய் -
விஜயன் இருந்தான்;
வேளா வேளைக்கு -
உணவு அருந்தான்;
பயிற்சி நேரங்களில் -
பிறரோடு பொருந்தான்!

இடது கையால் - அம்பை
எய்தல்; இலக்கறிந்து -
இருட்டிலும் சரமாரி -
பெய்தல்; பார்வை -
குறித்ததைக் குறிதவறாது -
கொய்தல்; ககனவெளியில் -
நீளம்புகளால் சரப்பந்தல் -
நெய்தல்...
என -
தனஞ்சயன் -
தனுர்வித்தை பயின்றான்;
தலைக்குத்
தலையணையாய் -
தனுவையே வைத்துத்
துயின்றான்!

குரு பக்தி;
கருப்பூர புத்தி;
இவை இரண்டும் -
இருந்திடு மாயின் -
எவனும் எதிலும் -
எய்தலாம் சித்தி!

அர்ச்சுனன் சொல்லை -
அட்டியின்றி கேட்டது -
அத்திரம்;
அசுவத்தாமனுக்குக் கூட -
அமையவில்லை -
அத்திறம்!

சோர்வு மேல் -
சோர்வு தோன்றும்படி -
சீடனுக்கு
தேர்வு மேல் -
தேர்வு வைத்தார் துரோணாசாரி!
ஆசாரியனும் -
அசுவத்தாமனும் -
அதிசயிக்கு மாறு -
அனைத்துத் தேர்விலும் -
அர்ச்சுனன் வாங்கினான் -
நூற்றுக்கு நூறு!

ஆசாரியர் - நீர்
ஆடப் போனார் - ஒருநாள்
அதிகாலை; ஆடுகையில் -
ஆற்று முதலை - தன்
அகல வாயால் வவ்வியது -
அவர் காலை!

தன்னைத்தானே காக்கவல்ல -
துரோணாசாரியர்...
உடன் வந்த மாணவரின் -
வில்லாண்மையை சோதிக்க...

'விடங்கர் வாயிலிருந்து -
என்னை
விடுவியுங்கள்!' என்று -
வீரிட்டார்; ஒப்புக்கு -
விழிநீர் விட்டார்!

ஏதும் செய்ய இயலாது -
இதர மாணவர் இருக்கையில்...
விஜயன் மட்டும் -
வில்லை வளைத்து - மனத்துள்
வணங்கினான் - தனது
வித்தைக்கு முதலை!
பின்...
வாளிகள் ஐந்தை -
விடுத்தான்; விடுத்ததும் -
வயிறு கிழிந்து போய் -
விழுந்தது முதலை!

அர்ச்சுனனை - துரோணர்
ஆலிங்கனம் பண்ணினார்;
அவனுக்கு - இன்னும்
அறிவு கொளுத்த எண்ணினார்!

'பார்த்தனே!
பாணங்களிலேயே -
பிரம்மசிரஸ் என்பது -

பிரமாண்டமானது; மிகவும் -
பெயர்போனது!

அத்தகு -
அத்திரத்திற்கு -
உரிய மந்திரத்தை - உனக்கு
உபதேசிக்கிறேன்;
ஏனெனில் - நான்
எனை நேசிப்பதிலும் - அதிகம்
உனை நேசிக்கிறேன்!
அந்த -
மாபெரும் பகழியை - நீ
மானுடர் மேல்...
எக்காரணம் கொண்டும் -
ஏவுதல் பிசகு; அங்ஙனம் -
ஏவினால் - எச்சமின்றி
எரிந்துபோகும் உலகு!

எதிர் வந்து பொருதுவோர் -
இமையோ ராயின்...
அவர்களைச் சாடு - அந்த
அத்திரமெடுத்து; அதைப்
பிறபொழுதுகளில் - புட்டிலில்
பத்திரப்படுத்து!'
என்று -
எச்சரித்துவிட்டு...
துரோணர் -
தனஞ்சயனுக்கு...

'பிரம்ம சிர'ஸை -
பிரயோகிக்கும் மார்க்கத்தை -
பயிற்றுவித்தார்; அதைக்
குறுகிய காலத்தில் - அவன்
கிரகித்துக் கொண்டது கண்டு -
குதுகலித்தார்!

மகனைக் காட்டிலும் -
மாணவன் -
மேம்பட்டிருப்பதில்...
எள் -
முனையளவும் துரோணருக்கு -
முக்கலோ முனகலோ இல்லை;
தன் -
மூர்க்கமான சபதத்தை -
முடித்து வைக்க - அவர்
மலைபோல் நம்பியிருப்பது -
அந்த
மாணவன் வில்லை!
அதனால் தான் -
அவர்...
'விஜயனே!
வில்லாற்றலில் - உனை
விஞ்சுகின்ற சீடன் - இங்கு
வேறொருவன் இல்லை;
கூழாங்கற்களுக்கு நடுவே - நான்
கண்டெடுத்தேன் வைரக்கல்லை!'
என்று -
இறுமாந்து பேசினார்;
பொன்மாலை -
பூமாலை போல் - ஒரு
சொன்மாலை தொடுத்து...
தனஞ்சயன் -
தோள் மீது வீசினார்!
வெகு சீக்கிரத்திலேயே -
விஜயனை ஒருவன் -
விஞ்சினான்; அவனைக் கண்டு -
விஜயனே அஞ்சினான்!

அவன் - ஒரு
வனவாசி;
ஆயினும் - குரு
விசுவாசி!
அவன் -
வசித்து வந்த -
வனப் பிரதேசம்...
சதா -
சிலுசிலு என இருக்கும் - ஒரு
சௌந்தரியமான காடு;
இரவில் -

இரைதேடி...
பகலில் -
புணரும்...
சக்கர வாகங்களுக்கு - மிக
சௌகரியமான வீடு!

அங்கு -
பச்சைப் பசேலென -
பழமரங்களும் உண்டு;
கிழ மரங்கள் என்றான -
பழ மரங்களும் உண்டு!
அந்த -
மரங்களின் -
சிரங்களிலும் - கிளைக்
கரங்களிலும்...
வலியன்கள் தங்கும்;
வௌவால்கள் தொங்கும்!

அது -
தருக்களில் புட்களும் -
தரையினில் முட்களும் -
கண்ணிலும் காலிலும் -
தென்படும் அடவி; அங்கு -
பொழுது போகாமல் -
பூங்காற்று வந்து -
அடிக்கடி -
அரட்டையடிக்கும்...
பிச்சிப் பூக்களின் -
பிடர்கள் தடவி!

அந்த -
சுகானுபவத்தில் - பூக்கள்
சொக்கிச் சுருண்டுபோய் -
வசங்கெட்டு நிற்கும் -
விழிகள் செருகி;
தக்க -
சமயம் இதுதானென்று -
சுரும்புகள் வந்து...
மடல்கள் என்னும் -
படல்கள் திறந்து -

மலர்க் குடிலின் - உள்
முற்றம் புகுந்து...

மொண்டு மொண்டு -
உண்டு தீர்க்கும் -
உள்ளிருக்கும் - புதுக்
கள்ளைத் திருடி!

அழகு கொழிக்கும் -
அந்த வனத்தின் -
மையத்தில் இருந்தது - ஒரு
மழைநாள் ஏரி;
அதைச் சுற்றித்தான் -
அமைந்திருந்தது -
வேட்டுவர் வாழும் - அந்த
வேட சேரி!

'இரண்ய தனுஸ்'
என்பவன்...
அங்கு -
வாழுகின்ற -
வேடர்களின் வேந்து; வேட -
சேரியில் நுழையவோ - அங்குள்ள
ஏரியில் நீந்தவோ - காற்று கூட
அனுமதி வாங்கவேண்டும் -
அவனிடம் போந்து!

அந்த -
மன்னனுக்கு - ஒரு
மகன் உண்டு; அவன் -
மதமதப்பா யிருந்தான் -
மான் ஊன் உண்டு உண்டு!
அவன் -
ஊணும் மான் தந்தது;
உடுக்கையும் மான் தந்தது;
பூணும் சிறுசிறு -
பணிகளும் மான் தந்தது!

கொலைத்தொழில் - அவன்
குலத்தொழில்; அவன் -

கும்பிக்கு அதுதான் -
கூழ் தந்தது!
அது -
அவன் குற்றமல்ல; அத்தகு -
வேடுவப் பிறப்பை - அவனுக்கு
ஊழ் தந்தது!

வேட்டையாடுவதில் -
வெறி கொண்டவன்; அந்த -
வெறியிலும் - ஒரு சில
நெறி கொண்டவன்!
இணையைப் புணரும் -
பிணையைப் பார்த்தால் -
கணையைத் தொடமாட்டான்;
சினையாய் இருக்கும் -
சிறுத்தையை - அம்பின்
முனையால் சுடமாட்டான்!

அவன் -
யாக்கை கருமை கண்டால் -
காக்கை கருவம் விடும்; அவன் -
யாக்கை வலிமை கண்டால் -
தேக்கை தோல்வி தொடும்!

அவன் -
வாழ்க்கையில் - கை
வில் ஓர் அங்கம்; வில் -
வேதத்தை - அவன்
விரிவாகக் கற்க -
விரும்பினான்; வந்தது -
வில்லங்கம்!

காற்று வாக்கில் - ஒருநாள்
கேள்விப்பட்டான்...
துரோணரின் -
தவப்பள்ளியைப் பற்றி;

உடனே -
ஓடிப் போய்...
துரோணரின் -
திருவடித் தாமரைகளில் -
இருந்த தூசியை -
எடுத்தான் -
தனது -
தலையால் ஒற்றி!

'அருள்மிகு -
அய்யனே!
என்பேர் ஏகலைவன்;
எந்தை வேடர் தலைவன்!
வில்லின் மீது - எனக்கு
விலக்கவொண்ணா இச்சை;
என்னையே -
ஏந்திவந்தேன் -
பாத்திரமாய்; தாங்கள் -
போடவேண்டும் ஞானப்பிச்சை!'

இங்ஙனம் -
இருகரம் கூப்பி -
இறைஞ்சினான்...
ஏகலைவன்! எதிலும் -
ஏகாக்கிர சித்தமுள்ள -
இளங்கலைஞன்!

துரோணர் - ஒரு
தர்மசங்கடத்தைக் கண்டார்;
தனக்குத்தானே பேசிக்கொண்டார்!
'இவன் -
வேடர் குலம்!
இவனை ஏற்குமோ - நம்
சீடர் குலம்?
ஒரு -
வனவாசிக்குள் -
விதைப்பதா -
வில் வித்தை - எனும்
நல் வித்தை? அந்த -
வித்து வளர்ந்து -
விருட்ச மானால்...
பெரிதும் - அது
பாதிக்குமே -
கௌரவர் பாண்டவர் -

கௌரவத்தை!'

தனக்குள் இவ்வாறு -
துரோணர் சிந்தித்து...
'இளைஞனே! உன்னை -
எனது சீடனாகவே - நீ
எண்ணிச் செயல்படு; புகழ்
எய்துவாய்! சிந்தாகுலம் விடு!'
என...
ஆசி கூறி - ஏகலைவனை
அனுப்பிவிட்டார்; எனினும் -
அவன் பொருட்டு - கொஞ்சம்
அனுதாபப் பட்டார்!

சில திங்கள்கள் -
சென்ற பிறகு...

அவரவர் தேரில் - ஒருநாள்
அரணியத்திற்கு வேட்டையாட -
அர்ச்சுனன்; துரியோதனன் -
ஆகியோர் சென்றனர்!

பக்கல் நின்ற - ஒரு
பரட்டைத் தலையனைக்
கண்டு -
குக்கல் ஒன்று - விடாது
குரைப்பதைக் கண்டனர்!

ஏழு அம்புகளை - அவன்
எடுத்து - தன்
கைவில்லில் - ஒரே
கொத்தாக வைத்தான்;
அவற்றை -
நொடியில் ஏவி - அந்த
நாயின் வாயைத் தைத்தான்!

அர்ச்சுனன் முதலானோர் -
அதைப் பார்த்து வியந்தனர்;
'ஆர் நீ? ஆர் உன் குரு?' என -
ஆர்வமுடன் வினவினர்!

ஏகலைவன் - ஓர்
இளம் புன்னகையை -
அவர்கள் மீது வீசினான்;
அதன்பிறகு பேசினான்!

'என் பேர் ஏகலைவன்;
என் தந்தை வேடர் தலைவன்!
நான் -
தனுர் வேதம் பயிலும் -
மாணவன்; ஆசாரியர் -
துரோணனின் சீடனென்று -
ஆனவன்!'

தனஞ்சயனுக்கு -
தூக்கிவாரிப் போட்டது;
துரோணரை நோக்கி - அவன்
தேர்
துரிதமாகப் போனது!

# கட்டை விரலும் -
# ஒரு கன்னிப் போரும்!

**ப**ல்முளைக்கும் முன்பே -
பிள்ளையின் கையில் -
வில்முளைக்கும் குலம் -
வேடுவர் குலம்; அந்த -
இருளர் இனத்தவன்-
ஏகலைவனுக்கு - எவரும்
அருளல் இன்றியே - வில்
ஆற்றல் வரும்!

அந்த –
ஆற்றல் போதுமா – பகழியால்
அதிசயம் விளைக்க? சிறு –
தூற்றல் போதுமா – விதைநெல்
தொய்யிலில் முளைக்க?

ஏழுகணைகளை – ஒரு சேர
ஏக காலத்தில் செலுத்தி –
குரைக் கின்ற –
குக்கல் வாயை...
இறுகத் தைப்பது என்பது –
இலேசுப்பட்ட காரியமா? ஒரு –
வில்லாசிரியன் சொல்லாது –
அவ்
வித்தகம் கைவருமா?

'அடியேன் –
ஆசாரியர் துரோணரின் –
சீடன்!' என்று –
செப்புகிறானே –
வேடன்!

ஆசாரியர் –
ஆக்குவதா
காக்காய்ப்பொன்னை –
ஆடகமா?
அடடா!
நமக்குத் தெரியாமல் –
இங்கொரு
நாடகமா?

இந்த –
வினாக்க ளோடு –
விஜயன் சென்றான்;
துரோணாசாரியர் முன்–
தண்ட்னிட்டு நின்றான்!

'ஆராதனைக் குரிய –
ஆசிரியப் பெருந்தகையே!
அடியேனை மிஞ்சி – சீடன்
ஆருமில்லை என்று –
அறிவித் தீர்களே – மெத்த
அருள் கூர்ந்து அன்று?
அது என்னாவது இன்று?

உள்ளானே ஒருவன்;
வேடுவச் சிறுவன்;
புகழ்வானில் உங்களால் –
நாளை
பிரகாசிக்கப் போகும் துருவன்!

வேடனாக இருப்பவன் –
வந்தது எங்ஙனம் – தங்கள்
சீடனாக? அந்த –
சீடனின் முன்னால் – பிற
சீடரெல்லாம் –
மூடனாக!'

சற்று –
செல்லக் கோபத்தோடு...
அர்ச்சுனன் –
ஆசாரியரை வினவினான்;
அதற்கு மேலும் – ஏதேதோ
அரைகுறையாக முனகினான்!

சிறிது நேரம் – துரோணர்
சிந்தித்தார்; பின்பு –
அர்ச்சுனனையும் –
அழைத்துக் கொண்டு...

வேட–
சேரிக்குச் சென்று –
ஏகலைவனை
சந்தித்தார்!

தொலைவில் இருந்தே –
தனக்கு –
கலைவில் ஞானத்தை –
கற்பிக்கும்...

ஆசானை –

அணிமையில் கண்டதும்...

வேடுவச் சிறுவன் -
விதிர்விதிர்த்துப் போனான்;
விழுந்து வணங்கி - உவகையில்
விழிநீர் வழியப் பேசலானான்!

'பெருமானே!
பெருமைக்குரிய -
தங்கள் -
திருவுருவத்தை -
இதோ!
மண்பதுமையாய்ச் செய்து -
மரத்தடியில் வைத்து...

'குருவே! சரணம்!' என்று -
கும்பிடுவேன்; பின்புதான் -
அன்றாடம் கைவில்லில் -
அம்பிடுவேன்!

நாளும் -
நான்...
ஏவும் அம்பை -
எடுப்பதும் -
தொடுப்பதும் -
விடுப்பதும்...

என் செயலால் அல்ல;
என்னிடம் - அய்யனே!
என்ன இருக்கிறது -
என் திறன் என்று சொல்ல?

தங்களால் பெற்றேன் -
தனுர் வித்தை;
தங்கள் -
திருவருள் இல்லையேல்...
என் -
வில்வித்தை -
வெறும் செத்தை!'

காக்காய்க்
கருவல்போல் நிறமிருந்தும் -
தேங்காய்த்
துருவல்போல் மனமிருக்கும் -
ஏகலைவன் - நெஞ்சில்
ஏந்திய குருபக்தியொடு -
இருகரம் சென்னி வைத்து -
இங்ஙனம் சொன்னதும்...

ஆசாரியரின் விழிகளில் - நீர்
அரும்பியது; அவரது மனம் -
வாய்விட்டு
அவனைப் பாராட்ட -
விரும்பியது!

ஆனால்...
அதேமனம் அடுத்த கணம் -

அர்ச்சுனன் தயவு -
அவருக்குத் தேவை என்பதை -
உணர்த்தியது; அவர்
கண்ணீரை -
உலர்த்தியது!

'ஏகலைவனே!
என்னை குருவாக ஏற்று -
என் பதுமைக்கும் செய்கிறாய் -
அர்ச்சனை! ஆயினும் -
ஆசாரியனுக்குத்
தரவேண்டாமா -
தட்சணை?'

வினவினார் குரு;
விடையிறுத்தான் உடனே -
வாய்மையின் உரு!

'என்ன கொடுக்க வேண்டும் -
என்று...
இறைவனே!
இடுங்கள் ஆணை! அதை -
ஈந்த பிறகே - நான்
ஏற்றுவேன் நாணை!'

ஆசாரியர் -
ஆச்சரியப் பட்டார்;
ஆனால்...
அறம் விட்டார்!
ஆணையிட்டார்!

'உன் -
வலக்கை கட்டைவிரல் -
வேண்டும் எனக்கு! அதை -
அரிந்து தருவதற்கு -
ஆகுமா உனக்கு?'

அகமும் முகமும் -
ஆயிரம் நிலவாய் மலர...
அரி -
வாளை எடுத்தான் விடலை;
வெட்டிக் கொடுத்தான் -
வலக்கை கட்டைவிரலை!

குடம் குடமாய்க்
குருதி...

மண்ணிலும் கொட்டியது;
மூகம் என்றான - தருமத்தின்
கண்ணிலும் கொட்டியது!

கட்டைவிரல் - குருநாதரின்
கைக்குக் கிட்டியது; அவர் -
கையே அவரைத் திட்டியது!

'ஒருவன் வீழ்ச்சியிலா -
ஒருவன் வளர்ச்சி?
அட! இது என்ன -
அசிங்கமான முயற்சி! சீச்சீ!'
என்று...
வைது தீர்த்தது -
வனம்; அதனை -
வழி மொழிந்தது -
வானம்!

கிழிந்து போனது -

குரு துரோணரின் -
கீர்த்தியானது;
ஆனால் -
அர்ச்சுனனின் ஆசை -
பூர்த்தி யானது!

துரோணர் -
தன் மனத்துள்...

'ஏகலைவனே!
என்னருமைச் சீடனே!

வில் உள்ளவரை -
வையத்தில் - உனைப்பற்றிய
சொல் இருக்கும்;
வளி உள்ளவரை -
வையத்தில் - எனைப் பற்றிய
பழி இருக்கும்!

வாழிய! மகனே! அன்பு -
வைப்பதில் நீ
இன்னொரு குகனே!'
என்று -
ஏகலைவனுக்கு...
வாழ்த்துரை புகன்றார்; பின் -
விஜயனோடு அகன்றார்!

கால்கள் இன்றி -
நாள்கள் நடந்தன; அவை -
ஒன்றன் பின் ஒன்றாய் - சில
வாரங்களைக் கடந்தன!

அரசகுமாரர்கள் -
அஸ்திரப் பயிற்சியில் -
முழுமை பெற்றனர்;
முதிர்ச்சி யுற்றனர்!

துரோணாசாரியர் -
தன்னிடம்...

கல்லாமல் கற்றவனிடம் -

குருதட்சணை கேட்டதுபோல்...
தான் -
கற்பித்துக் கற்றவரிடம் -
குருதட்சணை கேட்க வேண்டி...

நல்ல -
நாளொன்று பார்த்து...

கௌரவரையும் -
பாண்டவரையும் -
அழைத்து -
அது பற்றிக் கூறினார்; தன் -
நெடுநாளைய சபதத்தை -
நிறைவேற்றக் கோரினார்!

'வித்தியார்த்திகளே!
உங்களிடம் நான்...
தட்சணை என்று -
தரக் கேட்பது - ஒரு
துச்சனை!
துருபதன் என்று -
திருநாமம் கொண்ட -
துஷ்டனை!

அவன் -
தோழனாயிருந்து -
துரோகியாய் மாறிய -
தூர்த்தன்; பின்விளைவை -
தீர்க்கமாய் -
சிந்திக்க மறந்த -
மூர்க்கன்!

இருவரும் -
இளையராய் இருந்த நாளில்...

மெய்யாய்ப் பழகினான்; நறு -
நெய்யாய் ஒழுகினான்; என் -
மெய்யைத் தழுவினான்; பின் -
கையைக் கழுவினான்!

வார்த்தையில் -
வழுவினான்;
வாய்மையில் -
நழுவினான்;
சபை நடுவே -
சேறெடுத்து - என்
முக மெங்கும் -
மெழுகினான்!
கிரீடம் - அவனது
கண்ணை மறைத்தது;
செங்கோல் - சிந்தையில்
செருக்கை நிறைத்தது;
மயிலாசனம் - அவனது
மனிதத்தைக் குறைத்தது;
கொற்றக் குடை - அவனுள்
கொழுப்பை இறைத்தது!

பாஞ்சாலம் செல்லுங்கள்;
புல்லனை வெல்லுங்கள்; சிறை -
எடுத்து வந்து -
என் முன் நில்லுங்கள்!'
ஆசாரியர் இங்ஙனம் -
ஆக்கினை இட்டதும்...

ஈர் -
ஐம்பது பேரும் - ஓர்
ஐந்து பேரும் - போரில்
மொய்ம்பது காட்ட -
மணித்தேர் ஏறினர்;
அந்தகன் பெற்ற -
அவசரக் குடுக்கைகள் -
துருபதன் தமக்கொரு -
தூசெனக் கூறினர்!

களத்தில் வீரம் -
கவுரவர் முதலில் -
காட்டட்டும் என்று - ஊர்ப்
புறத்தே நின்றனர் -
பாண்டவர்; பொறை -
பூண்டவர்!

தருக்கில் -
தளும்பியது குறைகுடம்;
ஆதலால் -
அடிதாங்க முடியாமல்...
தலைதப்ப -
தேடியது மறைவிடம்!

கவுரவர் கவுரவம் -
குடை சாய்ந்தது;
பாஞ்சாலர் முன் - அவர்கள்
படை சாய்ந்தது!

துரியோதனன் - .
துருபதன் சேனையின் -
துரிதத் தாக்கலில் -
தொய்ந்தான் இடையில்;

அது -
அவனது...
கன்னிப்போர் என்பதால் -
கருணை கூர்ந்து - அவனை
மன்னிப்போர் இருந்தனர் -
மாற்றலர் படையில்!

அதற்குமேலும் -
அவர்களோடு அவன்...
மோதியிருப்பானாயின் - விடா
முயற்சியாக...
இருந்திருப்பான் - வெறும்
இறைச்சியாக!

துரியோதனன் -
தொய்ந்துபோன-
தகவல் கிடைத்ததும்...

செருவில் -
தனஞ்சயன் இறங்கினான் -
திருவில் ஏந்தி;
துருபதனின் -
தேரில் ஏறினான் - ரத்தத்
தடாகம் நீந்தி!

சிலையெடுத்தான்; சரம்போல் -
சரம் தொடுத்தான்; துருபதனை -
வலையெடுத்த வாளை போல் -
வாரிச்சுருட்டி வந்து...

துரோணாசாரியரின் -
திருக்கரத்தில் கொடுத்தான்!

தலைகுனிந்து நின்ற -
துருபதனைப் பார்த்து -
துரோணர்...

'நண்பா! நலமா?
பட்ட அடி பலமா?'
என்று -
எகத்தாளமாய்க் கேட்டார்;
ஒரு -
தருப்பையைக் கிள்ளி -
துருபதன் முன் போட்டார்!

---

# பாஞ்சாலி பிறந்தாள்!

**தா**டி வைத்த -
தனுர் வேதம் பேசியது;
அது -
அரசனின்...
செருக் கென்னும் -

சிரங்கு ஆற -
'சுருக்'கென்று -
சில சொல்லி...
மறக் கருணையால் -
மருந்தொன்று பூசியது!

'துருபதனே!
தோழனே!
உன் -
துருப்பை வென்றது -
துரோணனின் - இந்த
தருப்பை!

நால்வகைத்
துருப்பை நடத்தும் -
தார்வேந்தனும்...
நாளும் -
தருப்பை பிடிக்கும் -
தரித்திர நாராயணனும்...

'நண்பராயிருப்பது -
நகைப்பிற்குரியது!'
என்று -
எடுத்தெறிந்து பேசினாயே -
என்னை! அப்படி -
எது பேசச் செய்தது -
உன்னை?

ரதகஜ துரகபதாதியொடு -
ராஜ்ஜியம் ஆளும் -
ராஜன் என்கின்ற -
திமிர்! அந்தத்
திமிர் தீரத்தான் - இந்தச்
சமர்!

உன் -
துருப்பை வென்று -
துப்பியது மென்று - என்
தருப்பை என்று -
தெரிந்ததா இன்று?
உன் -
சொல் அன்று கொல்லும்; என் -
புல் நின்று கொல்லும்!

இந்தப்
பார்ப்பனன் உனக்கு -
பழைய முகம்;
பாலியத்தில் பல நாள் -
பழகிய முகம்!
ஆயினும் - நமக்குள்
அறிமுகம் -
ஆகாதது போல் காட்டினாய் -
பராமுகம்!
நீ -
நூறு முகம் விரித்தபடி -
நைச்சியமாய் நடித்தாலும் -
ஆறுமுகம் விதித்தபடிதான் -
ஆர்வாழ்வும் நடக்கும்;
ஆவனவும் -
அல்லாதனவும் - ஆகிப்
போவனவும் - அந்தப்
பெருமான் கைக்குள் அடக்கம்!

ஏறுமுகம் என்று -
இறங்குமுகம் என்று -
எவருக்கும் வாழ்வில் -
இரண்டு முகம் உண்டு!

ஏறுமுகம் ஆயினும் -
இறங்குமுகம் ஆயினும் -
மாறுமுகம் இல்லாதான் -
மட்டுமே மனிதன்!

அத்தகு -
சுமுகம் உள்ளவனைத்தான் -
தலைமேல் வைத்துக் கூத்தாடும் -
சமுகம்!

ஒருமுகம் இல்லாது - எதிலும்
இருமுகம் காட்டும் - உனது
திருமுகம் என்பதால்தான் - அது
செருமுகம் கண்டு விழுந்தது!

சிதறிப் போன - என்



சினேகிதனே!
அகவை ஆறிரண்டில் - நாம்
ஆடித்திரிந்த பொழுதுகள்...
எத்துணை -
இனிமையானவை -
என்பதை -
இன்று கேட்பினும் கூறும் -
ஆசிரமத்து வாசலில் உள்ள -
ஆலமரத்தின் விழுதுகள்!

நீ -
என்னை மறந்தாயே - அது
தவறில்லை; ஆனால் -

உன்னை மறந்தாயே -
அதுபோல்
தவறில்லை!

அதனால்தான் -
அல்லும் பகலும் -
அரும்பாடு பட்டு...
உன்னை -
சிறையெடுக்கவே -
சிருட்டித்தேன் - ஒரு
சீடனை; உன்னொத்த -
விலங்கை -
வேட்டையாட வல்ல - ஒரு
வேடனை!

இதோ!
இந்த அர்ச்சுனனுக்கு -
இல்லை நிகர்;
இவன் -
வில்லின் முன்பல்லவா -
விழுந்தது உன் நகர்!

அருமை நண்பனே!

இனியாவது -
ஆணவத்தைவிட்டு நகர்;
அது தலையெடுத்தால் - அதை
அறிவாயுதத்தால் தகர்!

இப்பவும் உன்னை -
எனது நண்பனாகவே -
ஏற்கிறேன்; நீ -
நலமுடன் வாழ -
நாளும் விரதங்கள் -
நோற்கிறேன்!

நான் -
பறித்துக் கொண்ட - உன்
பாஞ்சாலத்தில் -
பாதியை உனக்குத் தருகிறேன்;
வானதியின் -
தென்கரையை நீயாள - நான்
வடகரையை ஆண்டு
வருகிறேன்!'

இங்ஙனம் -



இன்னா இனியவை விளம்பி...
பாஞ்சாலத்தின் -
பாதியை -
பனை ஓலையில் -
பட்டா செய்து...
துருபதன் கையில் -
துரோணர் கொடுத்தார்; பின் -
சிறை மீட்டு - அவனை
செல்ல விடுத்தார்!

துருபதன் -
தட்சிண பாஞ்சாலத்தின் -
மன்னவ னானான்;
மன்னவ னானவன் - மறுபடி
சின்னவ னானான்!

சாகாமல் -
சிரஞ்சீவியா யிருந்தது -
துரோணர் மேலுள்ள -
துவேஷம்; துரோணர் -
ஓதிய ஒவ்வொரு -
உபதேசமும் - செவிடன் காதில்
ஊதிய சங்காய்ப் போனதுதான் -
விசேஷம்!

முன்பு -
இரவில் - அவனது
இரு விழிகள்...
துயில் என்னும் -
துகில் உடுத்தின;
இன்று -
அதே விழிகள் -
அதை விடுத்து -
அதிகாலை வரை -
அம்மணமாய் நின்று -
அவனைப் பாடாய்ப்படுத்தின!
அந்த அளவு -
அவனுக்கு -
மன உளைச்சல்;
மண்டைக் குடைச்சல்!

அரை ராஜ்ஜியத்திற்கு -
அரசனென்று ஆனதே -
அவமானம்; அந்த -
அரை ராஜ்ஜியமும் -
அனுதாபத்தில் வந்த -
வெகுமானம்!

'வெகு மானத்தோடு
வாழ்ந்தவன் -
வேதியன் கொடுத்த -
வெகுமானத்தோடு
வாழ்வதா?' என -
வெதும்பினான்...

வீங்கு புகழுக்கு - தானே
தீங்கு இழைத்துக்கொண்ட -
வேந்து; அவனிடம் -
மீசையில் ஒட்டிய -
மண் மட்டுமே இருந்தது -
மீந்து!

துரோணன்!
தனஞ்சயன்!
இந்த -
இரண்டு பெயர்களும்...

அகோராத்திரம் -
அர்த்த பாஞ்சாலத்து -
அரசனின்...
நாவில் -
நீலமாய்க் கைக்க;
நெஞ்சில் -
நெருஞ்சியாய்த் தைக்க...

துக்கமும் வெட்கமும் -
துருபதன் மனத்தை - ஒரு
தேங்காய் மூடிபோல் -
துருவின; அடிக்கடி -

இடுப்பு உடுப்பு -
இழிவது போல் - அவனது
உடலும் உயிரும் -
வெருவின!

ஓச்சும் செங்கோலை -
உயர்த்திப் பிடிக்கவும் -
கூச்சப் பட்டான்; முடிமேல் -
சூடும் முடியும் - முடியைச்
சுடும் முடியென்று -
சூடாது விட்டான்!

அரியணையில் -
அரசென்று அமரவும் -
அவனுக்குள் ஒரு லச்சை;
அதன் காரணம் -
அந்த அரியாசனம் -
அந்தணன் இட்ட பிச்சை!

பாஞ்சால தேசத்தின் -
பரம்பரைச் சொத்து - அதன்
புரவலர் எழுதிவைத்த -
புகழ் நூல்! அதைப்
புழுதியில் சாய்த்தது - ஒரு
பூணூல்!

கோட்டை -
கொத்தளங்களில்...
முன்னம் -
முன்னோர் நட்டுவைத்த...

வெற்றித் துவசம் -
உயரப் பறந்து -
வானத்து நீலத்தை -
வழித்தது! அத்தகு -
பதாகையை - அந்தப்
பார்த்தன் கைக்கணை - ஒரு
கௌபீனம் போல் - இன்று
கிழித்தது!

அடடா! அந்த -
அர்ச்சுனனின் ஆற்றலுக்கு -
அலகு ஏது? - அவன்
ஆத்திரம் கொண்டு - கையில்
அத்திரம் கொண்டால் -
பின்னிந்த உலகு ஏது?

வலிவும் பொலிவும் -
அவன் போல்
வாய்த்தவர் உண்டா? - அவன்
அவற்றைப் பெற்றது - ஆழியின்
அமிர்தம் உண்டா?

அவனொடு -
விற்போர் புரிபவர் -
வீரத்தை - அவனிடம்
விற்போர் ஆவர்!

அவனொடு -
மற்போர் புரிபவர் -
மண்டியிட்டு - அவன் முன்
நிற்போர் ஆவர்!

அவன் -
கொம்பில்லாத -
நந்தி! தும்பிக்
கையில்லாத -
தந்தி! ஆண்தகை -
ஆருமே அவனுக்குப்
பிந்தி!
அவனைப் பெற -
ஆற்றியிருக்க வேண்டும் தவம்...
குந்தி - மணி
உந்தி - நெடுநாள்
முந்தி!

இவ்வாறெல்லாம் -
எண்ணி எண்ணி -
துருபதன் - ஒரு

துரும்பானான்;

விசனமும் -
வெகுளியும் -
மாறி மாறி - அவன்
மனத்தைப் பந்தாட...

உடனடியாய் -
வேள்வியொன்றை நிகழ்த்த -
தவசிகளை -
தேடிப் போனான்!

துரோணனை மாய்க்க - ஒரு
தனயன் வேண்டும்;
தனஞ்சயனை மணக்க - ஒரு
தனயை வேண்டும்!

இந்த -
இரு 'வேண்டும்'களையும்...

ஒரு -
வேள்வி புரிந்து -
வாங்க வேண்டும்; அவற்றை -
வாங்கிய பிறகே -
தூங்க வேண்டும்!

இதுவே துருபதனின் -
எண்ணமாயிருந்தது; அந்த -
எண்ணம் யாகம் நடத்துவதில் -
திண்ணமா யிருந்தது!

யாஜர்!
உபயாஜர்!

இந்த -
இருவரும்...
உடன் பிறந்த -
பிராதாக்கள்; வேதம் -
ஓதி உணர்ந்த -
ஞாதாக்கள்!

விதிகள் விலகாது -
வேள்வி நடத்தும் -
யதிகள்; கால் முளைத்து -
நாடெங்கும் -
நடக்கும் - ஞான
நதிகள்!

வேந்தன் துருபதன் -
வேண்டுதலை ஏற்று...

இந்த -
வேதியர் இருவரும் -
வேள்வியைப் புரிந்தனர்; ஓம -
அக்கினியில் - தேவர்க்குரிய
அவியைச் சொரிந்தனர்!

அந்த -
அனலில் முளைத்தான் - ஓர்
ஆண்மகன்; அவன்தான் -
'திருஷ்டத்துய்மன்' என்னும் -
தலைமகன்!

வேள்வி வயலில் -
விளைந்த -
இந்த -
இளம் நாற்று -
துரோணன் உயிரைத்
தின்னப் பிறந்த கூற்று!

அதே -
நெருப்பில் எழுந்தது - ஒரு
நெருப்பு; அந்த -
நெருப்பு ஏற்ற நிறம் -
கறுப்பு!

அந்தப்
பத்தினி நெருப்பின் பெயர் -
பாஞ்சாலி; அவள்தான் -
தீயரைத் தீய்க்கப் பிறந்த -
திரிசூலி!

# பிள்ளைப்பாசம்

'ஒரு
தட்டாரப்பூச்சி – அந்த
துருபதன்!' என்று –
ஒட்டாரம் பேசி...

துரியோதனன்தான் – முதலில்
துடுக்கு மிடுக்காய் –
துடைதட்டியவன்;
துடைதட்டிய வேகத்திலேயே–
துருபதனிடம் தோற்று –
கடை கட்டியவன்!

'என்
இடக்கரம் ஏந்திய–
இச்சிலை –
எவரையும் நூறும்; இதற்கீடு –
எச்சிலை?'
என்று –
எதிர்வந்து நின்றவனின் –
இடுப்பொடித்து – துருபதன்
இளக்காரமாய்த் துப்பினான்–
எச்சிலை!

அந்த–
அவமான எச்சிலை...
எந்தத்
துவாலையாலும்–
துடைக்க மாட்டாது–
துரியோதனன்–
துக்கத்தில் இருக்கையிலேயே...

கேள்விப்பட்டான் – தன்
கண்ணில்லாத் தந்தை – செய்யக்
கருதியிருக்கும் – ஒரு
காரியத்தை;
கேள்விப்பட்ட செய்தி – அவன்
காதுகளில் 'சுரீ'ரென்று
காய்ச்சி ஊற்றியது –
காரீயத்தை!

தன்–
இளவலின் தலைமகனை –
'இளவரசு' ஆக்க –
விரும்பினான் – விழி
வெளிச்சமில்லா வேந்தன்;
சிறு–
சவுக்கத்தால்...
கண்மணியைக் கட்டிவைத்த –
பெண்மணியின் காந்தன்!

'யுவராஜன்' பட்டம்–
யுதிஷ்டிரனுக்குச் சூட்ட–
திருதராஷ்டிரன் –
தீர்மானித்ததும்...
விதுரனையும் பீஷ்மனையும்–
வருவித்தான்; தனது–
அபிலாஷையை அவர்களிடம்–
அறிவித்தான்!

பணி–
மங்கை மைந்தனும் – பனி
கங்கை மைந்தனும்...
வழி மொழிந்தனர்–
வேந்தன் கருத்தை;

'தகுதியானவன்–
தருமபுத்திரன்!'
என்று –

ஏத்திப் பேசினர் -
குருத்துவம் மிகுந்த -
குந்தியின் குருத்தை!

நாளை -
நாடாளப்போகும் நல்லவன்-
இளவரசுப் பட்டம் -
ஏற்க இருக்கிறான் -
என்றறிந்து...

ஊர் -
ஊர்ப்பட்ட சந்தோஷத்தில்-
கால்மாடு தலைமாடு
தெரியாமல் -
குதித்தது;
தருமனை - அது
தருமமாகவே -
மதித்தது!

மக்களின்
மனச்சுவர்களில் - அவனது
முழுஉருவப்படம் -
மாட்டப்பட்டிருந்தது;

'அதோ!
அவன்தான்-
ஒருசிரம்;
இருகரம் -
இவற்றோடு உலவும்
இனிய தனியறம்!'
என்று -
கற்றோரால் மற்றோர்க்குக்
காட்டப்பட் டிருந்தது!

அவன் -
அனைவரது உள்ளங்களையும் -
அபகரித்தான்;
அனைவரது இல்லங்களையும் -
அலங்கரித்தான்;
ஊராரை உற்றாராயெண்ணி -
உபகரித்தான்;
உள்ளாரை இல்லாரை -
ஓரேமாதிரி
உபசரித்தான்!

முத்தினம் மொய்த்திடும் -
முடியை -
எத்தினம் யுதிஷ்டிரன் -
ஏற்கின் றானோ...
அத்தினம் அடடா!
அத்தின புரிக்கொரு -
புத்தினம் என்று -
பொதுஜனம் பேசியது;
நாட்டவர் கருத்தை -
நகல்க ளெடுத்து - நல்ல
நாற்றமுள்ள காற்று -
நாற்றிசையும் வீசியது!

திருதராஷ்டிரனுக்கு -
தொடக்க காலத்தில்...
தன்-
தம்பி மகன்களிடம்...

மாரீசமாக இல்லாமல் -
மனப்பூர்வ மாகவே - ஒரு
வாத்சல்யம் இருந்தது -
வாஸ்தவம்!

அதனால்தான் - அதி
ஆச்சரியமாக நடந்தது...

வெள்ளை வண்ணனின் -
தலைப்
பிள்ளை - இள
வேந்தாக வரிக்கப்பட்ட -
வைபவம்!

அதைப்
பார்த்துப் பரவசப்பட்ட -
பிதாமகனான...

தண்ணீரின் மகனின் –
தாடைகளில் – ஆனந்தக்
கண்ணீரின் பிரவாகம் –
கடலாக வழிந்தது;
விதுரனின் உள்ளமும் –
வெண்டாமரையாய் விகசித்து –
மதுரமான
வாழ்த்துத்தேனை–பாண்டு
மகன்மேல் பொழிந்தது!

அத்தினபுரத்து –
அரியாசனத்தில் –
அடுத்த வாரிசாக –
அமர...

தருமபுத்திரனை – தன்
தகப்பனே –
தயார் செய்து விட்டானே
என்று –
தலையில் அடித்துக்
கொண்டான் –
துரியோதனன்; அவனுக்கு –
தூபம் போட்டான் – தம்பி
துச்சாதனன்!

சகுனி – கொம்பை
சீவிவிட்டான்; பெற்றவனை
எதிர்த்துப்பேச – பிள்ளையை
ஏவிவிட்டான்!

'உன் –
தலைக்கு வரவேண்டிய –
தங்கக் கிரீடத்தை – உன்
தாதை கெடுத்தான்!' என்று –
தோழன் கர்ணன் –
துரியோதனனின் –
காதைக் கடித்தான்!

சுயோதனன் –
சுயபுத்தியை இழந்தான்;
சொல்புத்தியில் விழுந்தான்!

உடனே –
விரைந்து சென்று –
தொழுதான் தந்தையை; பின் –
தொடங்கினான் நிந்தையை!

'எந்தையே!
என்மீது பாசமில்லாத –
விந்தையே!

நீ –
பிறக்கும்போது –
கண்ணிழந்தாய்;
கண்ணிழந்த காரணத்தால் –
மண்ணிழந்தாய்!

சிற்றப்பன் பாண்டு –
கொற்றவ னானான்; வெறும் –
ஒப்புக்கு நமக்கவன் –
உற்றவ னானான்!

அவன் –
கைவில் எடுத்து – ஒரு நாள்
கானம் போனான்;
கானம்போன கையோடு –
வானம் போனான்!

போனவன் பிள்ளைக்கு – நீயேன்
பட்டம் கட்டினாய்? அரசு –
பதவியில் அமருவதா – தரும
புத்திரன் எனும் குட்டிநாய்?

குட்டிநாய் –
கொலுவிருக்க – என் தலையில்
குட்டினாய்!
குருடனானதால் –
குட்டிச்சுவரில் – நீயாக
முட்டினாய்!

நீ –
கபோதி என்பதால் – உனக்குக்
கிரீடம் கை நழுவியது; உன் –
பிள்ளையாய்ப் பிறந்த –
பாவத்தினால்...
உன்னைப் போல் – அது
என்னையும் கை கழுவியது!

தகப்பனுக்கு –
திருஷ்டியில்லை என்றால் –
தனயன் மீதா –
தப்பு?
உப்புக் கடலில் –
உதித்தாலும் – மீனின்
உடம்பில் ஒட்டுகிறதா –
உப்பு?

சேற்றில் எழுகிறது –
செந்தாமரை; அந்த
செந்தாமரையைத் தொடருமோ –
சேற்றுக் கறை?

பூனையில் விளைகிறது –
புனுகு இனம்; அந்தப்
புனுகில் படருமோ – பூனையின்
புலால் மணம்?

அப்பனென்று –
ஆனவன்...
குருடனா யிருக்கலாம்; ஒரு –
திருடனா யிருக்கலாம்; அவன் –
பெற்ற பிள்ளை – வீர
புருடனா யிருக்க முடியாதோ?

அப்படியிருக்க –
ஆளப்பிறந்த எனக்கு –
அங்கத்தில் என்ன குறை?
மூத்தவனுக்குப் பிறந்த –
மூத்தவனுக்குத்தானே முடி? –
அதை
மாற்றுவது என்ன முறை?

பாண்டு பிள்ளைக்குப்
பட்டம் கட்டுவது –
ஈண்டு நியாயமல்ல;
ஏன் முன்வரவில்லை –
எவனும் உனக்கிதை –
எடுத்துச் சொல்ல?

உத்தமன்;
உதாரன்;
வித்தகன்;
விதேயன்...

என்று –
எவரோ நாலு பேர்...
தருமனைப் பற்றி –
தம்பட்ட மடித்தால் – அவனை
கரும சிரத்தையாய் – அரசு
கட்டிலில் ஏற்றுவதா?
ஆயிரம் –
கரியை நிகர்த்தவனின் –
கன்று நான்; என் முகத்தில் –
கரியைத் தீற்றுவதா?

தந்தையே!
தரும புத்திரன் –
அத்தின புரத்தின் –
அரச னானால்...
அவன்பின் –
அவன் மகன் மன்னனாவான்;

அதன்பின் –
அவனது...
மகனின் மகன்;
மகனின் மகனின் மகன்;
மகனின் மகனின் மகனின் –
மகன்!

அப்படிப் போகும் –

அரசின் வரிசை!
பாண்டவர் பறிப்பதோ –
கௌரவர் பரிசை?

நாங்கள் –
நாடின்றிப் போவதா?
நாயினும் கீழாய் ஆவதா?
பசிக்குச் சோறும் –
பருகிட நீரும் – எமக்குப்
பாண்டவர் பிச்சையாய் ஈவதா?

தந்தையே! – இது
தகாது;
நானிருக்கும் வரை – ஐவரின்
நிழல்கள்கூட...
பொற்றவிசு இருக்கும் –
பேரவை மண்டபத்துள் –
புகாது!'

இங்ஙனம் –
இடையறாது –
துரியோதனன் – தழல்
துப்பும் வார்த்தைகளால்...

அச்சமும் அசூயையும் –
ஆத்திரமும் –
உச்சமாய்க் கொண்டு – நீண்ட
உரை நிகழ்த்தியதும்...
திருதராஷ்டிரனின் –
திருவுள்ளம் – மெல்லத்
திரிந்தது;

தம்பி மகனைத் தழுவி –
தன் மகனைத் தவிர்த்தது –
தலையாய தவறென்று –
தெரிந்தது;

பிள்ளைப் பாசம் –
பிற பாசத்தைக் காட்டிலும் –
பன்மடங்கு பெரிதென்று –
புரிந்தது; உடனே –
சகோதரனின் –
சேயர்களிடம் கொண்டிருந்த –
சமநோக்கு 'சட்'டென்று –
சரிந்தது!

தன் கைகளாலேயே –
தருமனின் கண்களில்...
வெண்ணெயை
வைத்தவன் – அந்த
வெண்ணெயை
வழித்துவிட்டு – ஆங்கு
சுண்ணத்தை
வைப்பது பற்றி – மூளை
சூடுபறக்க சிந்தித்தான்;
வாஞ்சையுள்ள பிள்ளைக்கு –
வஞ்சம் புரிந்ததா யெண்ணி –
பூஞ்சை மனத்தவன் – தனது
புந்தியை நிந்தித்தான்!

அடுத்து –
அதுபற்றி ஆலோசிக்க...

'கணிகன்' என்பவனைக்
கூட்டிவரு மாறு – தன்
பணியாளைப்
பணித்தான்; பஞ்ச –
பாண்டவர் மேலிருந்த –
பற்றைப் பாசத்தை – அந்தப்
பொழுதிலேயே துணித்தான்!

அந்தகன் அழைத்து –
அந்தக் 'கணிகன்' என்னும் –
அந்தணன் வந்தான்;
அவன் ஒரு –

நரியைப் பற்றிச் சொன்னான்;
நரி கடைப்பிடித்த –
நெறியைப் பற்றிச் சொன்னான்!

# ஒரு நரியின் கதை.

'கணிகன்! ஒரு -
கணக்குப் புலி!

விரல்விட்டு...
விரல்விட்டு...
கழித்துக் கூட்டி - ஒரு
கடிகையில் கூறுவான் -
ஆள்களை ஆட்டிப்படைக்கும் -
கோள்களின் வலி!

மனத்தில் -
மாதிடம் உள்ள -
மன்னரெலாங்கூட - அவனிடம்
சோதிடம் கேட்டுத்தான் -
சுழற்றுவார் வாளை! - அப்படிக்
கேட்காமல் சுழற்றினால் - எதிரி
கழற்றுவான் தோளை!
மனநோய்க்கு - அவனொரு
மருத்துவன்; எவரிடமும் -
சோர்வு கண்டால் -
சோர்வுக் கான -
தீர்வு சொல்லி - அதைத்
திருத்துவன்!

அஃதன்னியில் -
அவனொரு...
ராஜதந்திரி! சகுனியின் -
ராஜாங்க மந்திரி!

காட்சியில்லாத
காவலன் - தனது
கவலைகள் பற்றி -
கணிகனிடம் கூறினான்; அந்த -
கவலைப் புண்கள் -
காய்ந்து பொருக்குத்தட்ட -
களிம்பொன்று -
கணிகனிடம் கோரினான்!

'கணிகனே! என் -
கஷ்டத்தைக் கூறுகிறேன்; கேள்!
பிள்ளைப்பாசம் என்பது - ஒரு
பிள்ளைப் பூச்சியல்ல; தேள்!

அது -
அவ்வப்போது என்னை...
கொட்டுகிறது; குருதி -
கொட்டுகிறது!
அர்த்தராத்திரியில் -
அன்னத்தூவியில் -
உறக்கம் விடுகிறது;
உடம்பு சுடுகிறது!

அடிக்கடி எழுகிறேன்;
அனாதைபோல் அழுகிறேன்;
பிள்ளைப் பாசமெனும் -
பெருநரகில் விழுகிறேன்!

பாண்டவர் பலம் -
பெருகுவதும்; என் -
பிள்ளைகள் நலம் -
அருகுவதும்...

சகிக்க முடியாத -
சங்கதி! தலை -
சாய்ந்திருப்பதோ - என்
சந்ததி?

இனி -
கௌரவரும் -

பாண்டவரும் -
கிழக்கும் -
மேற்கும்தான்;
பங்காளிகளின் -
பகை முற்றினால்...
வழக்கும் -
வாய்தாவும்தான்!

துரியோதனன் -
துயர்ப்படுகிறான்;
பஞ்சவரைக் கண்டு -
பயப்படுகிறான்!

அஞ்சைக் கண்டு -
அஞ்சுவதா நூறு?
அஞ்சை நூறுவெல்ல - ஓர்
ஆறிருந்தால் கூறு!

தருமனோடும் - அவன்
தம்பியரோடும் - உள்ள
தொடர்பை - இனியும்
தொடர்வது அபாயம்! அதைத் -
துண்டித்துக் கொள்ள - நீ
தந்துதவு ஓர் உபாயம்!'

மன்னவன் திருதராஷ்டிரன் -
மனக் கிலேசத்தில் -
சொன்னவற்றைக் கேட்டு...
கணிகன் - தனது
கருத்துக்களை விரித்தான்; ஒரு -
கொற்றவன் கொள்ள வேண்டிய
-
குணங்களைக் குறித்தான்!

'வேந்தே! நான் -
விரித்துரைப்பதை...
வாங்குங்கள் செவியில்;
வாங்கினால் - நல்லவண்ணம்
வாழ்ந்திடலாம் புவியில்!

ஓர்
அரசனாக யிருப்பவன் -
அனுஷ்டிக்க வேண்டியவை -
அனந்தம்; அவற்றை -
அலட்சியப் படுத்தினால் -
அவனுக்கு விளையும் -
அனர்த்தம்!

விழிகளில் -
விளக்கெண்ணெயோடு -
இரவு பகல் -
இருக்கவேண்டும்; தன் -
குரலுக்கு மிஞ்சி -
கூவுவார் தம்மை -
விரலுக்கு மிஞ்சி -
வளர்ந்த நகமாய்...

நினைத்து -
நறுக்க வேண்டும்!
வேந்தரை -
விசுவாசிக்கும் -
மாந்தரை -
மட்டுமே...

அரசின் -
அதிமுக்கிய -
இலாகாக்களில் -
இருத்த வேண்டும்;
வேவு பார்த்து -
விசுவாச மற்றோரை -
தீவு பார்த்து -
துரத்த வேண்டும்!
தண்டனை தருவதில் -
தார்வேந்தனுக்கு - நீல
கண்டனைப் போலே - நெற்றிக்
கண் வேண்டும்; நெற்றிக்
கண்ணனை நிகர்த்து -
குற்றங்களை எரிக்கும் -
மன்னனைத்தான் - இந்த
மண் வேண்டும்!

அங்ஙனம் –
ஆட்சி செய்தால்தான்...
மக்கள் பயப்படுவர்; நல்ல –
மார்க்கத்தின் வயப்படுவர்!

கொட்டினால்தான் தேள்;
வெட்டினால்தான் வாள்;
தட்டினால்தான் முரசு;
குட்டினால்தான் அரசு!

பந்துக்கள் ஆயினும் –
பகையென்று
ஆனால் – அவர்களை
அந்துக்கள் போலே – அரசன்
அழிக்க வேண்டும்;
இல்லையேல் –

வாராத துன்பத்தை –
வரவழைத்துக் கொண்டு –
காராகிருகத்தில் – காலம்
கழிக்க வேண்டும்!

சாமானியன் –
தருமம் வேறு;
சத்திரியன் –
தருமம் வேறு!

சாமானியன் –
செய்யும் கொலை –
தன் பொருட்டு; ஒரு –
சத்திரியன் –
செய்யும் கொலை –
மண் பொருட்டு!

அது –
நீச தந்திரம்;
இது –
ராஜதந்திரம்!

ரத்தமும் –
யுத்தமும் இல்லாமல் –
ராஜாக்கள் இல்லை;
அத்தரும் –
முட்களும் இல்லாமல் –
ரோஜாக்கள் இல்லை!

அரசன் –
ஆனவன்...
உளவு பார்க்கும் –
ஒற்றரைக் கொண்டு – பகையின்
அளவு பார்க்க வேண்டும்;
அளவு பார்த்த பிறகே –
அமரில் இறங்கி – வாளின்
அழகு பார்க்க வேண்டும்!

பதவிக்கு பங்கம் வந்தால் –
பகைவனையும் – தனது
உதவிக்கு அழைக்க வேண்டும்;
உதவிக்கு வந்தவனை – பிறகு
உதை கொடுத்து – வைகுந்தப்
பதவிக்கு அனுப்பவேண்டும்!

தேசத்தை –
தன் வசத்தில் – ஒருவன்
தங்கவைத்துக் கொள்ள...

சௌரியத்தை விட்டு –
சாதுரியத்தைத் தொட்டு –

சாம –
பேத –
தான –
தண்டம்...
எனும் –
ஈரிரண்டையும் –

படிப்படியாக –
பிரயோகிக்க வேண்டும்;
பிரயோகித்து – வெற்றியில்
பிரகாசிக்க வேண்டும்!
கேளுங்கள் வேந்தே! ஒரு
கதையைச் சொல்கிறேன்;

வெற்றி விருட்சத்திற்கான -
விதையைச் சொல்கிறேன்!

ஒரு காலத்தில் -
ஒரு காட்டில் -
ஒரு நரி -
வசித்து வந்தது;

சிறு -
சிறு -
பிராணிகளை - அது
புசித்து வந்தது!

அது -
நன்னெறி;
புன்னெறி;
நாலும் அறிந்த -

நுழை நரி!

பூர்வ ஜன்ம -
பிராப்தத்தால்...
தந்திரங்களோடு -
தரும சாஸ்திர -
மந்திரங்களும் -

கருவறையில் -
கற்றுத் தெளிந்த -
ஒரு நரி - அந்தக்
குறுநரி!

ஊளையிடும் நரியெலாம் -
அந்த
ஒப்பரிய ஒரு நரியின் -
மூளையிடம் மயங்கும்; அது -
மொழியும் வழியில் இயங்கும்!

அந்த அளவு -
அதனிடம் அமைந்திருந்தது -
அறமும்; அறிவுத்
திறமும்!

அது -
வடிவத்தில் நரி;
வேகத்தில் பரி;
விவேகத்தில் கரி;
வீரியத்தில் அரி;

இயலாமை;
முயலாமை;
ஓதாமை;
ஓராமை;
உணராமை...

ஆகிய -
அஞ்சாமையை வென்றதால் -
அதனிடம் இருந்தது -
அஞ்சாமை!

ஆதலால் -
அந்த நரி -
அனைத்தையும் -
அறிவாயுதத்தைக் கொண்டு...

சாதுரியமாக -
சாதிக்கும்; ஒரு -
வம்பு வராமல் -
விதரணையாக -
வாதிக்கும்!
நாளாவட்டத்தில் - அந்த
நரிக்கு...

ஒரு புலி;
ஓர் எலி;
ஒரு செந்நாய்;
ஒரு கீரிப்பிள்ளை...

என -
நான்கு நட்புகள் -
நேர்ந்தன;
ஐந்தும் - ஒரு கையின்
ஐந்துவிரல்கள் போல் -
சேர்ந்தன!

அவை...
ஒன்றாகவே -
வனம் சுற்றும்;
வாய்த்த இரையைப் பற்றும்;

உண்ணும்;
உறங்கும்;
வளர்ந்தது அப்படியொரு -
வாஞ்சையும் பற்றும்!

அந்த வனத்தில் -
வண்ணவண்ண மான்கள்
உண்டு;
அனேக நாளாகிவிட்டது - அந்த
அஞ்சுபேரும் மான்கறி உண்டு!
பொழுது போனால் -
பொழுது வந்தால் -

புலி -
புள்ளிமானைப் பிடிக்கப்
பாயும்; மான் தப்பும்; புலி -
ஓயும்!

நரி - ஒரு
நமட்டுச் சிரிப்பு -
சிரித்தது; பின் -
வரிப்புலியிடம் - ஓர்
உபாயத்தை -
விரித்தது!

'நண்பா!
நீ -
எப்போது பிடிப்பது -
மானை? - நாம்
எப்போது கடிப்பது -
ஊனை?
உன்னிலும் வேகமாக
ஓடுகிறது மான்; அந்தக்
கேவலத்தைக் கண்டு -
கெக்கலிக்கிறது கான்!
உயிர்த்தோழனே!
வாழ்க்கையில்...

வீரம் வெல்லாததை -
சோரம் வெல்லும்;
உன்திறம் வெல்லாததை -
தந்திரம் வெல்லும்!

என்
இனிய நண்பனே!
எலியே!
நீ -
கலைமானின்
காலைக் கடி!
வலி மண்டும்;
மான் நொண்டும்...

என்
பிரிய நண்பனே!
புலியே!
நீ -
நொண்டிமானை -
நொடியில் பிடி!'

மரநிழலில் -
மான் இளைப்பாறுகையில்...
அதன் -
ஆடுசதையை -
எலி கடித்தது; சுளுவாய் -
புலி அடித்தது!

தரையில் விழுந்தது -
மரை; நெடுநாள் -
எதிர்பார்த் திருந்த -
இரை!

மான் மாமிசம் -
மொத்தத்தையும் -
தான் மட்டுமே -
தின்ன நினைத்தது...
கூனல் மனம் படைத்த - சிறு
குள்ள நரி;

'இதர நால்வரை -
எப்படி ஏய்ப்பது?'
என்று -
எழுந்தது...
குள்ளநரி முகத்தில் - ஒரு
கேள்விக்குறி!

# அரசியல் அரிச்சுவடி

சிற்றுத் தொலைவில் -
சலசல வென்று...

ஓடிக் கொண்டிருந்தது -
ஒரு நதி;
ஓடும் நதியைக்கண்டு - நரி
உள்ளத்தில் உருவானது -
ஒரு சதி!

உண்பதற்கு உட்கார்ந்த -
நண்பர்கள் மேல் - நரி
நேசப்பார்வை வீசியது; பின் -
நைச்சியமாய்ப் பேசியது!

"நண்பர்களே!
நீராடாமல் -
அருந்தக் கூடாது -
ஆகாரம்; இது -
அருந்தவத்தோர் கூறிய -
ஆசாரம்!

'கூழைக் குடித்தாலும் -
குளித்துக் குடி!' என்று -
மூத்தோர் உரைத்திட்ட -
மூதுரைப் படி....

அதோ!
அந்த நதியில் -
களைப்புத் தீரக்
குளியுங்கள்; பிறகு வந்து -
கலைமானை உண்டு -
களியுங்கள்!

தீர்த்தமாடி விட்டு - நீங்கள்
திரும்புவதற்கு ஆகலாம் -
தாமசம்; ஆனாலென்ன? ஈகூட -
மொய்க்காதபடி - என்
மேற்பார்வையில்
இருக்கும் - மான்
மாமிசம்!"

நரியின் பேச்சில் -
நான்கு பிராணிகளும் -
நியாயத்தைக் கண்டன;
நீராடச் சென்றன!

முதலில் - மீசை
முடியில் ஈரஞ்சொட்ட...

புனலில் நீராடிவிட்டு -
புலி திரும்பியது;
அந்த -
அமயம் பார்த்து...
நரியின் விழிகளில் -
நீர் அரும்பியது!

'நண்பா!
நம்முள் நீதானே -
நாலும் தெரிந்தவன்;
நெளிவு சுளிவு புரிந்தவன்!
உனக்கென்ன -
உபத்திரவம்? விழியில் -
ஒழுகுகிறதே -
உப்புத் திரவம்!'

விசனத்தோடு -
வினவியது புலி;
மாய்மாலமாய் -
முனகியது நரி!

'இனிய சிநேகிதனே!
இளப்பமாக எவரேனும்...
என்னைச் சொன்னால் -
என் மனம் தாங்கும்;
உன்னைச் சொன்னால் - என்
ஒவ்வொரு நரம்பும் வீங்கும்!

நீ -
உகிர் கொண்டு -
வேழத்தை -
வகிர் கின்ற-
வீரன்!

யாளி வந்து -
எதிர் நிற்பினும் -
தூளி செய்யும் -
தீரன்!

இருப்பினும்...
இதோ! இந்த -
இளமானை...

உன் -
வலியால் -
வீழ்த்தாமல் இன்று - ஓர்
எலியால் -
வீழ்த்தினாய் என்று -

நக்கலாய் - நமது
நண்பனே பேசினால் -
என்மனம்
சுக்கலாய் உடையாதா?
தயிரைக் கடைவதுபோல் -
அந்தத்
தகாத வார்த்தை - எனது
உயிரைக் கடையாதா?

உன்பலத்தால் -
உணவு தேட -
உனக்கு வக்கில்லையாம்;
தன் போன்றோர் -
தயவில்லையேல் -
உனக்கு திக்கில்லையாம்!

இப்படியெல்லாம் -
எலி பேசியது; அப்பப்பா!
இரு செவியும் -
எனக்குக் கூசியது!

இந்த மானை -
இனியும் நீ...
உண்பது என்பது -
உனக்கு அவமானம்;
அப்படியே உண்டாலும் -
ஆகுமா செரிமானம்?"

நரி - இங்ஙனம்
நையாண்டி செய்ததும்...

'சீச்சீ!
எனக்கெதற்கு - இந்த
இறைச்சி?
எலிகொடுத்து - நான்
ஏற்பது என்பது -
இகழ்ச்சி!'
என்று -
புறப்பட்டுச் சென்றது -
புலி;

சிறிது நேரம் -
சென்ற பின்...
ஈர உடம்போடு -
இரையுண்ண வந்தது -
எலி!

'எலியே!
இனியும் நீ -
இங்கிருப்பது தப்பு;
இப்பவே தப்பு!

கொஞ்சநேரம் முன்புதான் -
குளித்துவிட்டு வந்தது -

கீரிப்பிள்ளை; இந்த -
இளமானின் இறைச்சியை -
இரையாக உண்பதில் - அதற்கு
இஷ்டமில்லை!

மான் மாமிசம் -
மகா விஷமாம்;
எலி மாமிசம் -
இனிய பாயசமாம்!

உன்னைத்தின்ன - என்னிடம்
உத்தரவு கேட்டு நின்றது;
மறுத்துவிட்டேன் நான்!
நட்பை -
முறித்துக்கொண்டு சென்றது!'

சொச்ச விஷயத்தை - நரி
சொல்லி முடிப்பதற்குள்...
வளைக்குள் புகுந்தது -
எலி; அதை -
விரட்டி யடித்தது -
கிலி!

நீராடிவிட்டு - செந்
நாய் வந்தது; அதை -
நடுங்கவைக்கும் தகவலை -
நரி தந்தது!

'என் அன்பனே!
இனிய நண்பனே!
எனக்கே தெரியவில்லை;
ஏனென்று புரியவில்லை!

புலிக்கு உன் மீது -
பயங்கரக் கோபம்; நீ -
உடனே ஓடிப்போனால் - உன்
உயிருக்கு லாபம்!

மானிறைச்சியை உண்ண - தன்
மனைவியை
அழைத்துக்கொண்டு...
சில -
விநாடிகளில் -
வந்துவிடும் புலி; இங்கு -
நீயிருந்தால் -
நிச்சயம் பலி!'

உடனே -
உயிர்மேல் கண்ணாய் -
ஓடியது செந்நாய்!

நதியில் -
நிதானமாக நீராடிவிட்டு...
கீரிப்பிள்ளை -
கடைசியாய் வந்தது; ஓர் -
அதிர்ச்சி வைத்தியம் - நரி
அதற்குத் தந்தது!

'கீரிப்பிள்ளையே! - நான்
கூறுவதை - நீ
கேட்பது நலம்; கேட்டால் -
தெரிய வரும்! உனக்குப்
புரிய வரும்! இந்த -
நரியின் பலம்!

நான்
வியத்தகு - என்
வலிமையால்...

புலியைப் புடைத்தேன்;
எலியை உதைத்தேன்;
செந்நாயை செந்நீர் -
சொட்ட வதைத்தேன்!

மண்ணோடு -
மண்ணாக -
மூன்றையும் புரட்டினேன்;
மூன்று காதம் விரட்டினேன்!

உனக்கு -
பலமிருந்தால் - என்னோடு
போரிடு; இல்லையேல் -

பிழைத்தது புண்ணியம் - என்று
போய்விடு!'

நரியை -
கையெடுத்துக் கும்பிட்டது -
கீரி; நாலு வார்த்தை -
கீழ்க்கண்ட வாறு -
கூறி!

'வலிவும் பொலிவும் -
வாய்க்கப் பெற்ற -
வீரனே! நரியெனும் -
திருநாமம் கொண்டு -
திசைகளை வென்று நிற்கும் -
தீரனே!

வரிப்புலியையே - நீ
வென்றாய் என்றால்...
என்போல் மடையனில்லை -
இன்னமும் இங்கு நின்றால்!'

ஓரே பாய்ச்சலில் -
ஓடிப்போனது கீரி; நரி -
'ஓ'வென்று ஊளையிட்டது -
உற்சாகம் தலைக்கேறி!

தான் மட்டுமே -
மான்கறி மொத்தமும் -
தின்றது; அதன் திட்டம் -
வென்றது!

வேந்தர் பெருமானே!
விளங்கியதா -
நரிக்கதை? மான் -
கறிக்கதை?

நரித்தனம் இல்லாது -
நடத்த இயலாது -
துரைத்தனம்; எதிலும் -
நெறித்தனம் நீங்காது -
நிற்பேன் என்பது - அசட்டு
வெறித்தனம்!

நமக்குக்
காயத்தை ஏற்படுத்தாதவரை -
கடைப் பிடிக்கலாம் -
நியாயத்தை; நியாயம் -
காயத்தை ஏற்படுத்தினால் -
கடைப்பிடிக்க வேண்டும் -
மாயத்தை!

அடியேன் சொல்வது -
அரசியலில் பாலபாடம்; இது -
ஆயிரம் அரசுகள் -
அனுஷ்டித்தது காலகாலம்!

வருங்காலத்தில் -
வருந்தா திருக்க -
நிகழ் காலத்தில் -
நிகழ்த்த வேண்டும்...

பாண்டவரை -
பலவீனப்படுத்தும் வேலை;
இல்லையேல் - கௌரவர்
ஏற்க இயலாது செங்கோலை!'

இங்ஙனம் -
இடையிலொரு -
இருமல் செருமல் -
இல்லாமல்...

அகலமும் -
ஆழமும் உள்ள -
அறிவுரையை -
ஆற்றிவிட்டு...

கணிகன் -
கிளம்பினான்;

உடனே -
உற்சாகம் மிக்கவனாக...
துரியோதனன் - தனது

தந்தையிடம் -
வாஞ்சையும் வெகுளியுமாய் -
சில
விளம்பினான்!

'பத்தாயிரம் அத்திகளின் -
பலம்கொண்ட - எங்கள்
அத்தா! அன்பார்ந்த -
அச்சா!

பின்னவன் பிள்ளைக்கு -
பட்டம் கட்டியது பிழையென -
பின்னர் புரிந்துகொண்ட -
பிச்சா!

கணிகன் சொன்னதை - நின்
கவனத்தில் இருத்து;
ஒரு நூறு பேர் நாங்கள் -
உன்னுடைய குருத்து!

வாரிசை -
வளர்ப்பதும் வாழ்விப்பதும் -
உனது கடன்; எமக்கு -
உறுதுயர் உறும்வரை - நீ
வாளாயிராது - அதனை
வருமுன் தடுக்க வேண்டும் -
உடனுக்குடன்!

அறம் நமையே - அராவும்
அரம் ஆனால் - அதனைப்
புறம் வைப்பதே -
புருஷ லட்சணம்;

மறம் நமக்கு - நிழல்தரு
மரம் ஆனால் - அதற்கு
உரம் வைப்பதே -
அரச தந்திரம்!

பஞ்சவர் - இனி
பங்காளிகளல்ல; நமக்கு -
நஞ்சவர்!

ஐவரும் உள்ளவரை -
அரசு எப்படி - நம்
கைவரும்?

நியாயங்களால் - சில
நேரங்களில் - பதவி
நாற்காலிகள் வருவதில்லை;
மாயங்களால் - வண்ண
மயிலாசனங்கள் பெறல் - நம்
மரபுக்கு விரோதமில்லை!

கணிகன் சொல்லிய -
கருத்துப்படி -
அரசியலில் - அதுதான்
அரிச்சுவடி!

தந்தையே! ஏதேனும் -
சாக்கு சொல்லி...

தருமனையும் - அவன்
தம்பியரையும் - சற்று
தூரத்தில் வைப்போம்;
தூரத்தில் வைத்து -
அவர்களைத்
தொலைக்கும் வெடியை - தக்க
நேரத்தில் வைப்போம்!'

தன்மகன் -
துரியன் பேச்சை -
திருதராஷ்டிரன் கேட்டான்;
தனக்குள் - ஒரு
தெளிவைத் தேடி - பின்
தயக்கத்துடன் ஏற்றான்!

துரியோதனனின் -
திட்டத்தை - அவனது
தொண்ணூற்றொன்பது -
தம்பியரும்...
'ஓஹோ!' என்று செப்பினர்;
ஒருமனதாக ஒப்பினர்!

'யுயுத்சு!'
என்பவன் மட்டும் -
ஒப்பவில்லை; ஒன்றும் -
செப்பவில்லை!
அந்த -
யுயுத்சு...
யாரோ எவரோ இல்லை;
மன்னன் திருதராஷ்டிரனின் -
மற்றொரு பிள்ளை!

ஆனால்...
நூற்றுவர் கணக்கில் -
வராதவன்;
நூற்றுவர் குணங்களைப் -
பெறாதவன்!

---

# பாண்டவர் புறப்பட்டனர்!

இருபத்துநான்கு மாதங்கள் -
இடுப்பு வலியோடு - முன்னம்
கருவுற்று இருந்தாளே -
காந்தாரி...

அவ்வமயம் -
அந்தப்புரத்தில்...

மணிவிழி இல்லா -
மன்னனுக்கு -
பணிவிடை புரிய -
பணிக்கப் பட்டிருந்தாள்...

வணிகர் குலத்தில் -
வந்துதித்த - ஓர்
அணிவிளக்கு;
ஊழியம் புரியும் -
தோழியர் இனத்தில் -
அவளொரு
விதிவிலக்கு!

'இதுதான் வனப்பின் -
இலக்கணம்!'
என்று -
தாபிதம் செய்தது போல் - ஒரு
சோபிதம்!

சதுர்முகன் -
செருக்கோடு செதுக்கிய -
சிருஷ்டி; அந்த -
சிருஷ்டியை ரசிக்க -
திருதராஷ்டிரனுக்கு - ஏது
திருஷ்டி?

எனினும்...
காமத்திற்குக்
கண்ணெதற்கு?
கண்ணிலா மன்னனால் -
கருவுற்றாள் - அந்தப்
பெண்விளக்கு!

அவளுக்குப் பிறந்த -
அருமை மகன்தான்...

யுயுத்சு - என்னும்
யுவன்;
உத்தம குணங்களில் -
உதிட்டிரனுக்கு இணை -
அவன்!

'பஞ்ச -
பாண்டவர்களை -
அத்தினபுரத்திலிருந்து -
அப்புறப்படுத்த வேண்டும்!'

எனும் – துரியன்
எண்ணத்தை – யுயுத்சு
ஏற்கவில்லை;
எனினும் – தன் குரல்
எடுபடாது என்று – அவன்
எதிர்க்கவில்லை!

குந்தியையும் – அவள்
மந்திரம் விளைத்த – அஞ்சு
தந்தியையும்...

'வாரணாவதம்' எனும் –
வண்ண நகருக்கு –
துரத்த விரும்பினான் –
துரியன்; 'அதுதான் –
சரி!'யென்றான் – சகுனியெனும்
நரியன்!

முகக்கண் போல் –
முழு இருட்டாய் –
அகக் கண்ணையும் –
ஆக்கிக் கொண்ட....

அரசன் திருதராஷ்டிரன் –
ஆள் அனுப்பினான் –
தருமனுக்கு!
தருமநெறி தவறாத –
ஒருவனுக்கு!

பெரிய தந்தையை – தனைப்
பெற்றெடுத்த –
அரிய தந்தையைப் போல் –
அருச்சிக்கும்...
தருமபுத்திரன் –
திருதராஷ்டிரன் முன் –
வந்து நின்றான்; வணக்கம் –
தந்து நின்றான்!

விழியில் இருட்டும் –
உளத்தில் திருட்டும் –
வழியும் வேந்தன் –
மொழிந்தான்; வாஞ்சையைப்
பொழிந்தான்!

'அன்புள்ள தருமனே! என் –
அனுஜனின் தலைச்சனே!
முன்புள்ள அறமெலாம் – ஆசை
மூண்டிங்கு வந்து – ஓர்
என்புள்ள உடலாய் –
எழுந்தருளி னாற்போல்...
திகழ்கின்ற – என்
தனயனே! – தலை
வீங்காத –
வினயனே!

நீயும் –
நினை ஈன்ற –
தாயும் – நினது
தம்பியரும்...

வாரணாவதம் எனும் –
வனப்புமிக்க ஊரை – ஒருமுறை
பார்த்து வரவேண்டும்; பெரும் –
புண்ணியங்களை – உங்கள்
சந்ததிகள் சேமமுற –
சேர்த்து வரவேண்டும்!

வாரணாசி!
வடகாசி! – என்றெல்லாம்
வாழ்த்தி வணங்குகிறது – அந்த
ஊரை – பிராசீன
வரலாறு பேசி!

துண்டு நிலாவும் –
தண்ணீரும் – தலையில்
கொண்டு உலாவும் –
கூத்தபிரான்...
குடியிருக்கும் ஊர்! விடைக்
கொடிபறக்கும் ஊர்!
செவ்வரி யோடிய –
சேல்விழியால் – தொழுவார்

வெவ்வினை யோட்டும் -
விசாலாட்சி...

கொலுவிருக்கும் ஊர்! அவள் -
கொலு சொலிக்கும் ஊர்!

நான்மறைக்கும் - பொருள்
நல்குவோரின் வேள்விப் புகை -
வான்மறைக்கும் ஊர்;
கான் நிறைக்கும் - மலர்க்
கூட்டமெலாம் வாய்வெடித்து -
தேன் இறைக்கும் ஊர்!

தருமா! அங்கு -
திருவிழா நடக்கிறது...

பனி -
வரையிடம் விளைந்த -
ஒரு மானுக்கு - உடலில்
அரையிடம் அளந்த -
பெருமானுக்கு!

தாயொடும் -
தம்பியரொடும் -
நீயங்கு சென்று வா; சிவனார் -
பேரழகை - திருத்
தேரழகை - உனது
விழிகளால் தின்று வா!

காண்டற்கரிய காட்சி;
கண்டார்க்கு உண்டு -
கருவிலிருந்து மீட்சி!

நீ வரும்வரை -
நான் பார்த்துக் கொள்கிறேன் -
நாட்டை; நமது தாய் -
வீட்டை!'

தந்தையின் -
தமையன் சொல்லை - தருமன்
தலைமேல்
தாங்கினான்; தரையில் -
தண்டனிட்டு நீங்கினான்!

தம்பி மகன் -
தருமனெனும் -
நம்பி - தன் சொல்லை
நம்பி...

வாரணாவதம் செல்ல -
ஒப்பினானே என்று -
கும்பி குளிர்ந்தான் - ஆயிரம்
தும்பிபலம் கொண்டவன்;

நகக்கண் போலவே -
நாள்தோறும் -
அகக்கண்ணிலும் -
அழுக்கேறி நின்றவன்!

விரியன் - என
விஷம் கொண்ட -
துரியன்...

உற்சாகத்தின் -
உச்சத்தில் போய் -
உட்கார்ந்தான்; மன -
உளைச்சல் தீர்ந்தான்!

சந்தோஷத்தில் - இன்னொரு
சுற்று பருத்தான் -
சகுனி; சின்னெறிகளின் -
தொகுதி!

'வாரணாவதத்திற்கு -
வழிநடையாய்...
பாண்டவர் போவார்;
மாண்டவர் ஆவார்!'
என்று -
எக்களித்தான்...

கர்ணன் எனும்
வள்ளல்; வெங் -

கதிரவனின் -
விள்ளல்!

ஊரார் -
உள்ளமெல்லாம் -
வேர்விட்டு நிற்கும் - அற
விருட்சம்...

ஊர்விட்டுப் போவதை -
ஒப்புக்கொள்ள வில்லை -
ஊர்; ஊரின் கண்களில் -
நீர்!

'மன்னர் திருதராஷ்டிரர் -
என்ன சொன்னாலும் -
எமக்கது
மறை! எமக்கவரே -
இறை!' என்று...

உதிட்டிரன் -
ஓர் -
உரையை ஆற்றினான்; ஆற்றி -
ஊராரைத் தேற்றினான்!

பாண்டவர் -
புறப்படுமுன்...
விதுரன் - சில
உலக நீதிகளை -
தருமனுக்குத்
தெரிவித்தான்; பிறர் -
அறியாத பாஷையில் -
அறிவித்தான்!

'தருமனே! என் -
தமையன் மகனே!

இன்னார் நமக்கு -
இன்னார் என்றால் -
முன்னால் அவரது -
முயற்சிகள் யாவையும்...

அறிவால் அறி;
அறிந்தபின் - அவற்றை
அறிவால் அரி!



வாளைவிட -
வலியது -
மூளை; அதன்
முனையைக் கொண்டு -
முறியடி - தீ
வினையை!

வளையில் புகும் -
வெள்ளெலியும்;
முழையில் புகும் -
முள்ளம் பன்றியும்...

காட்டுத் தீயில் -
மாட்டுவ தில்லை; அவற்றை -
காட்டுத் தீயும் -
வாட்டுவ தில்லை!'

விதுரனின் -
விழுமிய கருத்தை - தருமன்
உள்வாங்கினான்; பிறகு -
உடன்பிறப்போடும் தாயோடும் -
ஊர் நீங்கினான்!

வாரணாவதத்தில் - அஞ்சு
வாரணங்களை வதம் செய்ய...

'புரோசனன்' என்னும் -
புல்லனை...
துரியோதனனும் - அவன்
தாய்மாமனும் -
பணித்தனர்; அவன்தான் -
பொருத்தமான ஆள் என்று -
கணித்தனர்!

புரோசனன் - கட்
புலனில்லாப் புரவலனின் -
அமைச்சரவையில் - ஓர்



அமைச்சன்;
பஞ்சமா பாதகங்களுக்கு –
அஞ்சா நீசன்!

துரியோதனன் –
தூக்கிப் போடும்...
ஆட்டெலும்புக்கு – வால்
ஆட்டும் நாய்; துரியன் –
உரைக்கும் வண்ணம் –
குரைக்கும் வாய்!

துரியோதனன் – ஒரு
திட்டத்தை – அந்த
நீசனிடம் கூறினான்;
நிறைவேற்றக் கோரினான்!

'புரோசனனே! எனைப்
போன்றவனே! என் –

மற்றொரு மெய்யே!
மூன்றாம் கையே!

பாண்டவர் –
போய்ச் சேருமுன்...
நீ –
வாரணாவதத்திற்கு –
விரைந்து செல்; நான் –
வகுத்துரைப்பதை – நினைவில்
வரைந்து செல்!

வாரணாவதத்தில் – ஒரு
வண்ண மாளிகையை –
உருவாக்கு;
குந்தியையும் – அவள்
குமாரர்களையும் – அதில்
குடியேற்று!

அந்த மாளிகையை –
அமைக்க...

எரியூட்டினால் –
எளிதில் பற்றும் –
பொருள்களை –
பயன்படுத்து; அதற்கு –
அரக்கால் –
ஆடை உடுத்து!

சுவர்களுக்கான –
சாந்துக் கலவையில்...

சணல்; மணல் –
இட்டு – அவற்றோடு
குங்குலியம்; கர்ப்பூரம் –
கொட்டு!
மொத்த –
மாளிகையையும் –
மெழுகு கொண்டு –
மெழுகு; அவர்களை –
அயர்த்த வேண்டும் – அதன்
அழகு!

அவர்களிடம் –
அன்போடு பழகு; அவர்கள் –
நம்பும்படி –
நாணயமாய் ஒழுகு!

சிறிது நாள்கள் –
சென்றபின்...

அன்னையோடு –
அந்த ஐவரும் –
தூங்கும் பொழுது –
தீ வை!

அந்த வேலையை –
அடுத்தவனிடம் கொடுக்காதே;
நீ வை!

குந்தியும் – அவளது
குமாரர்களும் –
வெந்து சாவார்கள்;
வியனுலகு போவார்கள்!

பழியை – செந்
தழல் சுமக்கும்; மணி –
முடியை – என்
தலை சுமக்கும்!'

சுயோதனன் –
சொல்லை ஏற்று...

புறப்பட்டான் –
புரோசனன் என்னும் –
புலைஞன்; அந்தப்
புலைஞனைப்
பின்தொடர்ந்தான் –
'கனகன்' என்னும் –
கலைஞன்!

# அரக்கு மாளிகை

அறம் -
அன்னையோடும்...
நான்கு -
நிழல்களோடும்...

வருகை புரிகையில் -
வாரணாவத நகரம் -
இருகை நீட்டி -
எதிர் கொண்டது;
முகமெலாம் -
முகமன் சொல்லி -
முகை விரித்த -
முண்டகம் போல் -
நகை விரித்து-
நின்றது!

மைவரை நிகர்த்த -
மொய்ம்புடைய - அந்த
ஐவரை...
ஊர்ச்சனம் - தன்
உறவுபோல் கண்டது; அவர்தம் -
நல்லழகை - நகரம்
நறவு போல் உண்டது!

அந்த
வில்லேருழவர்க்கு - ஆரணச்
சொல்லேருழவர்...

மாவிலை நுனியால்
மந்திர நீர் தூவி -
பீஜாட்சரம் எனும் -
பஞ்சாட்சரம் ஓதி...

நல்லாசி -
நல்கினர்; ஐவரும் -
மனம் நெகிழ்ந்து - விழிநீர்
மல்கினர்!

வருஷா வருஷம் -
வாரணாவதத்தில் நடக்கும் -
பிரமாண்டமான -
பிரமோற்சவத்தை முன்னிட்டு...

ஊருக்குள் -
ஒன்பது ஊர்க் கும்பல்;
தூசிகளின் ஒவ்வாமையால் -
தெருக்களே போட்டன தும்மல்!

பாண்டவர் வரவால் - ஊரின்
பரவசம் கூடியது; உற்சாகப்
புனலில் - அதுவொரு
புணைபோல் ஆடியது!

திருவிழாவிற்கு - அன்றுதான்
துவஜாரோகணம்;
தொடக்க நாளன்றே -
திருவீதி உலாவில்...
ருத்திரனுக்கு -
ரிஷப வாகனம்!

கலைநிலவில்–
கால்வாசியை -
குடுமியில் குடிவைத்த -
காசிவாசியை;

எலியூரும் -
ஏரம்பன் ஏத்துகின்ற -
புலியூரின் -
பெருவாழ்வை;

அவத்தைப் புரிந்து -
அவத்தைப் படுவார் -
பவத்தைப் போக்கும் -
சிவத்தை;

கொன்றை மலர் சூடும் -
ஒன்றை;
நன்றுக்கெல்லாம் நன்றான -
நன்றை;

நீலத்தை -
நீள்மிடறில் ஏற்ற -
மூலத்தை;

நீரை -
நீறை -
உச்சியில் உடம்பில் -
உவந்து அணியும் - அறத்தின்
வேரை;
வினை -
வேதனை நீக்கும் -
வேதனை; காசிவிசுவ -
நாதனை...

தேசமே -
தெருவில் நின்று -
தரிசித்தது;
ஸ்கந்தனின் தந்தையின் - திவ்ய
ஸ்வரூபத்தை - உள்ளுணர்வால்
ஸ்பரிசித்தது!

தன் -
குலமும்
குமாரரும் -
நலம் பெற வேண்டி...

குந்தி தேவியும் - கை
கூப்பித் தொழுதாள் -
நந்தி வாகனனை; திரு
நடன மோகனனை!

'அஞ்சன வண்ணன் -
அனுஜையை மணந்த -
அந்தி வண்ணா!
அக்கன்னா போல் -
அருள் விழிகள் அமைந்த -
முக்கண்ணா!

கருத்தனே! - கனகசபை
நிருத்தனே! - கறைக்
கழுத்தனே! - அஞ்சு
எழுத்தனே!

உனை -
வழுத்தினேன்;
வாழ்த்தினேன்; உன் -
திருமுன் - சென்னி
தாழ்த்தினேன்!
என்
குழந்தைகளுக்கு - நீயே
காப்பு; உனது -
காப்பிருந்தால் - ஏது
தோற்பு?'

தாயைப் போலவே -
தனயர் ஐவரும்...

எருதுமேல் எழுந்தருளும் -
ஏகனை; அனேகனை;
மாதொரு -
பாகனை; பினாகனை;

ஒலிதரும் -
உடுக்கையைக் கையிலும் - வரிப்
புலிதரும் -
உடுக்கையை மெய்யிலும் -

சந்ததம் தாங்கி -
சதிர் நடத்தும் -
சந்திர சூடியை;
சுடலை யாடியை;

தண் -
தமிழின் தந்தையை - செந்
தழலேந்தும் விந்தையை...

கொன்றைப்
பூவும் வில்வமும் தூவி -
பூசித்தனர்; தங்களுக்கு -
யாண்டும் துணை நிற்க -
யாசித்தனர்!

பிறகு -
பாண்டவரும் குந்தியும்...

புரோசனன் எழுப்பிய -
புதுமனையில் புகுந்தனர்;
அது -
கல்லால் எழுதிய - ஒரு
கவிதை போல் இருந்தது கண்டு...

பிரமிப்பும் - சிறிது
பயமும் மிகுந்தனர்!

மாளிகையின் பெயர் -
'மங்கலம்!'
ஆனால்...
அது - தருமனின்
சிந்தையில் விளைத்தது -
சஞ்சலம்!

சுற்று முற்றும் -
உற்று உற்றுப் பார்த்து -
மோப்பம் பிடிக்கையில் - அவன்
மூக்கின் மேல்...
ஒரு
வாசம் வந்து -
உட்கார்ந்து கொண்டு - கூர்த்த
நாசியை நசுக்கியது; மூக்குமுடி -
நாலைந்தைப் பொசுக்கியது!

நீளமான மூச்சிழுத்து - அந்த
நாற்றத்தை - தருமன்
நிறையவே நுகர்ந்தான்; பின் -
தம்பியரிடம் - மிகத்
தாழ்வான குரலில் -
தன்கருத்தைப் பகர்ந்தான்!

'இனிய
இளவல்களே!

மெழுகு வாசம்;
குங்கிலிய வாசம்;
அரக்கு வாசம்! இந்த -
மூவகை வாசத்தின் -
மத்தியில் - நம்
அறுவரின் வாசம்!

என் -
மூக்கு எனக்கு -
முன்னறிவிப்புச் செய்கிறது -
தீக்கு இரையாக -இந்தத்
திருமாளிகை எழுந்ததென்று;
அமைச்சன் புரோசனன் -
ஆக்கியிருக்கிறான் - இதை
அக்கினிக்குப் பிடித்தமான -
ஆகாரங்களைக் கொண்டு!

இது -
விடுதி அல்ல; நம்மைக்
குறிவைத்துக் காத்திருக்கும் -
கெடுதி!

இங்கு -
சோறாக்கும் பேரை - இது
நீறாக்கும்; விருந்தாய் -
வசிக்கும் பேரை - விருந்தாய்ப்
புசிக்கும்!

வீட்டைச் சுற்றி -
வேளை தவறாமல்...

'கீச்சு கீச்' சென்று –
கீச்சிட்ட வண்ணம் –
தீக்குறி காட்டுகிறது –
சாக்குருவி; அடிக்கடி –
வந்து போகிறது – பிரேதம்
வெந்து போவதுபோல் – ஒரு
மயான நாற்றம் – எனது
மூக்குருவி!

ஆக...
அந்தம் மிகுந்த – இந்த
அரக்கு மாளிகை...

சுதையால் ஆனதல்ல;
சுயோதனனின் –
சூதால் ஆனது! அவனுக்கு –
தாயாதிக் காய்ச்சல் –
தலைக்கேறி – புத்தி
பேயாகிப் போனது!

தாய் –
மாமன் சொன்னால் – அவன்
மலம் தின்கிறான்; அங்ஙனம் –
நரகல் தின்பது – உடலுக்கு
நலம் என்கிறான்!

ஒழுக்காறு பேணும் –
உள்ளத்தையும் –
அழுக்காறு புகுந்தால் –
அழுக்காகும்படி கசக்கும்;
கசங்கிய நெஞ்சுக்கு –
கற்றோர் கற்பிக்கும் –
கனி அனைய சொல் –
காஞ்சிரங்காயாய் கசக்கும்!

இனி –
எத்துணை முயன்றாலும்...

துரியோதனனை –
திருத்த முடியாது –
துரோணர் போன்ற –
தொல்லறிவாளர் புகட்டும் –
நல்லறிவால்; அவன் –
நிமிர்த்த முடியாத –
நாய்வால்!

பார்த்தா!
பீமா!
நகுலா!
சகாதேவா!

துரியோதனன் திட்டத்தை – நாம்
தூள் செய்ய வேண்டும்; தூள் –
செய்வதாய் நமக்குள் –
சூள் செய்ய வேண்டும்!

ஆனால்...

அவசரப்படுதல் –
ஆகாது; நமது –
வேகம் பார்த்து – உலையரிசி
வேகாது!

ஒரு
வினையை முடிக்க –
வீரம் வேண்டும்; இருப்பினும் –
வீரத்தை வெளிக்காட்ட – ஒரு
நேரம் வேண்டும்!

உதய காலம் –
வாராது...

கதிரோ திங்களோ –
காய்வதில்லை;
எதிரே –
இரையிருப்பினும் –
உரிய நேரம் –
வாராது...

புலியோ பூனையோ –
பாய்வதில்லை!

பாச்சையை –
பதுங்கிப் பதுங்கி –
பல்லி பிடிப்பது போல்...

நாம் –
புரோசனனை –
பிடிக்க வேண்டும்; அவன் –
புராணத்தை –
முடிக்க வேண்டும்!

அதுவரையில் – இந்த
அரக்கு மாளிகையைப்
பற்றியோ –
அவனைப் பற்றியோ...

'ஒரு –
சந்தேகம் நம்முள்
சஞ்சரிக்கிறது; அது நம் –
நெஞ்சரிக்கிறது!' என்பதை –
நெல்முனையளவு கூட – நம்
விழியோ – வாய்
மொழியோ –
வெளிப்படுத்தக் கூடாது;
ஓர் –
ஐயப்பாடு நம்முள் –
பையப் பூத்திருப்பது –
துரியோதனனுக்கு –
தெரிய வந்தால் –
மூச்சுக் காற்று – நம்
மூக்குகளுக்குள் ஓடாது!'

தமையன் –
தருமபுத்திரன்...
பேசி முடிக்கும் வரை –
பின்னவர் – ஏதும்
பேசாது நின்றனர்;
பெரிதும் சிரமப்பட்டு –
பொங்கிய சினத்தை வென்றனர்!

குந்தி –
கலவரப்பட்டு...

குடல் வெந்தாள்;
உடல் நொந்தாள்!

அந்நேரம் – அங்கு
ஆரும் அறியாமல்...

விதுரன் விடுத்த –
விவரங்களோடு – ஒரு
வேலையாள் வந்தான்; சில –
விளக்கங்கள் தந்தான்!

'அய்யா!
அடியேன் பெயர் கனகன்;
சுரங்கம் வெட்டுவதில் –
சமர்த்தனான கலைஞன்!
அமைச்சர் விதுரர் – என்னை
அனுப்பி வைத்தார் – இங்கு
ஆழச் சுரங்கமொன்று –
ஆக்க; உங்கள் –
அறுவரையும் –
அதன் வழி காக்க!'

வந்தவன் –
விதுரன் தருமன் மட்டுமே...

புரிந்து கொள்ளும் –
பாஷையில்
மொழிந்தான்; ஆதலால் –
பாண்டவர் வயிற்றில் –
பாலாக வழிந்தான்!

ஊர் –
உறங்கியதும்; ஊரார் –
மேலிமைகள் –
கீழிமைகள் நோக்கி –
இறங்கியதும்;
புரோசனன் –
புத்தி –

கள்ளுண்டு –
கிறங்கியதும்....

அன்றிரவே –
ஆரம்பமானது...

கனகனின் –
கை வேலை; ஒரு –
சுரங்கம் –
செய் வேலை!

அகழ்ந்தான் நிலத்தை;
ஆக்கினான் பிலத்தை;
அகற்றினான் துரியனின் –
ஆணவ மலத்தை!

---

# தருமங்கள் தப்பித்தன!

அரக்கு மாளிகையில் –
அவ்வப் பொழுது...

வேவு பார்க்க – ஒரு
வேடச்சியை வைத்தான் –
ஐவரின்
வீவு பார்க்க – தக்க
வேளை பார்த்திருந்த...

புரோசனன் என்னும் –
பதர்; பாவங்களின் –
புதர்!

அந்தப்
புளிஞர் குலப்
பூவை...
குந்தி வயதினள்; ஆனால் –
கொடிய மனதினள்!

அவளுக்குப் பிள்ளைகள் –
அஞ்சு; அஞ்சும் –
ஆரும் அஞ்சும் –
நஞ்சு!

அந்தப்
பிள்ளைகளோடு –
புரோசனனும்...
அரக்கு மாளிகையின் – ஓர்
அறையில் –
தங்கியிருந்தான்; மதுவெனும் –
தீர்த்தக் குளத்தில் – தினம்
முங்கியிருந்தான்!

ஒரு நாள் இரவு;
ஓய்ந்தது ஊர் ஓசை!
அன்று –
அமாவாசை!

விடுப்பில் இருந்தது –
வெண்ணிலவு; இருளின் –
இடுப்பில் இருந்தது –
மண்ணுலகு!

உச்சி வானத்தில் –
ஒருலட்சம் ஊதுவத்திகளை –
குச்சிகுச்சியாக – யாரோ
குத்திவைத்தாற் போல் –
உடுக்கள்; அந்த –
உடுக்கள் வெளிச்சம் போதாது –
நடக்கையில் – தென்றலே
தடுக்கி விழுந்ததால் – ஜன
சஞ்சாரமற்று இருந்தன –
தெருக்கள்!

புரோசனனும் –
பிறரும் –

புளித்த கள்ளும் -
பொரித்த புள்ளும் -
உண்டு -
உறங்கையில்...

அவிழ்ந்த -
ஆடைகளோடு - தரையில்
கவிழ்ந்து -
கிடக்கையில்...

நள்ளிரவில் - அந்த
நல்லிரவில்...

புறப்பட்டனர் -
பெற்ற தாயொடு -
பஞ்ச -
பாண்டவர்...

அரக்கு -
மாளிகை விட்டு -
வெளியே; கனகன் -
வெட்டிய சுரங்கம் -
வழியே!

புறப்படுமுன் -
பீமசேனன்...
தீ துப்பும் -
தீவட்டி எடுத்தான்; ஒரு -
தீவட்டி கட்டிய மாளிகையை -
தீ
தின்னக் கொடுத்தான்!

தேயுவை வைத்தது -
தன்மகன் என்று -
வாயுவும் சந்தோஷப்பட்டான்;
வந்து விசிறிவிட்டான்!

அரக்கு மாளிகை -
அக்கினி தேவனின் -
ஆஸ்தியானது; நொடியில் -
அஸ்தியானது!

விரோதியான புரோசனன் -
வெந்து
விபூதியாக - அந்த
விபூதியைத் தொட்டு -
நெற்றியில்
வைத்துக் கொண்டு...
அக்கினித் தெய்வம் -
ஆனது சைவம்!

வேவு பார்க்க -
வந்தவள் - வாரிசுகளோடு
சாவு பார்த்து -
சாம்பல் ஆனாள்;
புரோசனனை -
பின் தொடர்ந்து போனாள்!

அனைவரையும் -
அனைத்தையும் -
சம்பிரமமாக -
சாப்பிட்டு முடித்தபின்...

நீறு பூத்து நின்றது -
நெருப்பின் நாக்கு;

தருமங்கள் -
தப்பிப் பிழைத்ததால்...
வீறு பூத்து நின்றது -
வேதத்தின் வாக்கு!

ஒரு -
பெண்ணும் - ஐந்து
பிள்ளைகளும் -
கண்ணும் மூக்கும் -
கருகியிருக்கக் கண்டு - ஊர்
கும்பி கொதித்திட -
கூவியது - அவர்கள்
குந்தியும் - அவளது
குமாரர்களும் என்று!

வாரணாவத மக்கள் -
வயிற்றிலும் வாயிலும் -

அடித்துக் கொண்டு -
அரற்றினர்; 'இது -
இப்பாரும் எப்பாரும் -
ஒப்பாத செயல்!' என்று -
ஒப்பாரி வைத்து -
உரற்றினர்!

'பாண்டவர்தம் -
புகழ்த்துவசம் - ககனத்தைக்
கீண்டுவதைக் -
காணச் சகியாமல்...

அரக்கு மாளிகையை -
அமைத்தான் -
குரக்கு மனம் படைத்த -
குடி கேடன்;
துரியோதனன் என்னும் -
துவிவேடன்!

பெட்டைப் பிள்ளையின் -
பித்தலாட்டத்திற்கு - அவன்
பொட்டைத் தந்தையும் -
பச்சைக் கொடி காட்டினான்;
பேய் வழி வந்த - மருமகப்
பிள்ளைக்கு - அவனது
நாய் வழி வந்த மாமனும் -
நச்சை ஊட்டினான்!
ஆதலால்தான் - இந்த
அநீதி நேர்ந்தது;
அறத்தின் வாழ்வு தீர்ந்தது!

இது -
திருதராஷ்டிரனுக்கு -
தெரிந்தே நடந்திருக்கின்ற -
சங்கதி; அவன் மகன் -
தாயாதிகளைக்
கொன்றால்தானே -
தழைக்கும் அவனது -
சந்ததி!

பீஷ்மர்; விதுரர்;
துரோணர்; கிருபர்!
இருடிகள் எனத்தகும் -
இவர்களெல்லாம் கூட -
இந்த விஷயத்தில் -
இருதலைக் கொள்ளி எறும்பாய்
-
இருந்திருக்க வேண்டும்;
இவர்கள் அவ்வாறு -
இருந்திராவிட்டால் - இன்று
இருந்திடா திருக்கும் ஐவர் -
இருப்பவராய் இங்கு -
இருந்திருக்க வேண்டும்!

ஆக -
அனேகரின் -
ஆசீர்வாதங்களோடுதான்...

ஞமலிகள் கூடி -
ஞாயிறுகள் அனைய -
ஞாதிகளை -
ஞாயமற்ற முறையில்...
இங்ஙனம் -
எரிதழலில் -
இட்டிருக்கின்றன; தொல் -
அறத்தை -
அறவே - கைகழுவி
விட்டிருக்கின்றன!

வீழ்வதோ பௌருஷம்?
வெல்வதோ நபும்சகம்?
மாய்வதோ மாசுணம்?
மாய்ப்பதோ மண்ணுணி?'

அத்தின புரத்து -
அரச குலத்தை -
இவ்வாறு -
இழித்தும் பழித்தும்...

வசை பாடினர் -

வாரணாபுரத்து –
வாசிகள்; ஐந்து –
வாரணங்களின் – விசு
வாசிகள்!

குந்தியும் – அவளது
குமாரர்களும் –
செந்தழலில் வெந்த –
சேதி வந்ததும்...

குருட்டு மன்னன் –
குலுங்கிக் குலுங்கி அழுதான்;
கண்ணீர் ஏர்கொண்டு – தனது
கன்னங்களை உழுதான்!

புரண்டான்;
புலம்பினான்; தன்னை –
தலைமுதல் –
தாள் வரை –
அனல் வேர்வையால் –
அலம்பினான்;

குதித்தான்;
கூவினான்; கைக்
குழந்தைபோல் –
கேவினான்;

'சாவே! நீ –
சா!' என –
சாபம் இட்டான்;

'என் –
எதிர்நில்; இயன்றால் –
என்னை வெல்!' என்று –
எமனுக்கு...
சரமாரியாய் –
சவால்களை விட்டான்;

'தீயே! நீ –
தீய்ந்துபோ! உன்னைத் –
தீய்ப்பேன் நான்;
மாய்ந்து போ!'
என்றெல்லாம் –
ஏதேதோ...

பதற்றம் கூடி –
பிதற்ற லானான்; எலு –
மிச்சை தேய்க்குமளவு –
பிச்சேறிப் போனான்!

வாளி வாளியாய் –
வடித்த கண்ணீர் –
வற்றிய பின்...
ஒரு கணம் –
வெறித்துப் பார்த்தான்; பின் –
வார்த்தைகளை வார்த்தான்!

'என் –
இளவலின் பிள்ளைகளின் மேல்...
ஈ உட்கார்ந்தால் கூட –
ஏற்காது என்மனம்; இப்போது –
தீ உட்கார்ந்து தின்றதை – நான்
தாங்குதல் எங்ஙனம்?

என் –
தம்பியின் –
தாரம் –
குந்திதேவி – எங்கள்
குலமடந்தை; அந்தக்
குலமடந்தையையும் – அவளது
குலக் கொழுந்துகளையும் –
எரியூட்டிக் கொல்ல –
எவர் உடந்தை?

விதியா?
சதியா? – எவரேனும்
மாற்றலர் –
மதியா?

மூப்பில் இருக்கும் – என்னை
முடிக்காமல் – இப்போதுதான்
பூப்பில் இருக்கும் – இளம்

பிள்ளைகளை...
காலன் ஏன் -
கரந்தான்? கரந்து என் -
கண்ணீரை ஏன் -
கறந்தான்?

இந்த அந்தகன் -
இடிந்துபோக விட்டானே -
அந்த அந்தகன்?'

திரும்பத் திரும்பத்
தேம்பித் தீர்த்தான் -
திருட்டி யில்லாதவன்;
உண்மையில் - அவன்
உள்ளத்தால் அழாது -
உதட்டாலழுத பொல்லாதவன்!

மேலே -
வெப்பமாகவும் -
கீழே -
குளிர்ச்சியாகவும் -

காணப்படும் -
கோடைகால -
ஓடைபோ லிருந்தான் -
ஒளி யற்றவன்;
பிள்ளைப்பாசத்தால் -
பழி யுற்றவன்!

நாலுபேர் அறிய -
நெகிழ்ந்தான்; ஆனால் -
மனத்திற்குள் -
மகிழ்ந்தான்!

தன் பங்கிற்கு -
தாரை தாரையாக -
கண்ணீரைக் கொட்டினாள் -
காந்தாரி; கண்களை -
சின்னத் துணியெனும் -
சிறைக்குள் வைத்திருக்கும் -
சகுனியின் சகோதரி!

துரியோதனனும் -
துச்சாதனனும் -
கர்ணனும்
கருநாக்குச் சகுனியும்...

இழவு -
விசாரிப்பதற்காக -
வருபவரிடம்...
பேச்சுக் கொடுக்காது -
பிரதிமைகள் போல் -
நின்றனர்;
வற்புறுத்தி -
வினவினால்...

'துக்கம் -
தொண்டையை அடைக்கிறது!' -
என்றனர்!

பாண்டு வமிசம் -
பூண்டோடு
அழிந்ததையெண்ணி...

பிதாமகன் பீஷ்மன் -
பெரிதும் கலங்கினான்;
மலை பெயரினும் - தன்
மனம் பெயராதான் - இயல்பு
நிலை பெயர்ந்து மலங்கினான்!

அடுத்த நாள் -
அதிகாலையில்...

உயிர்-
நீத்தார்க்கு -
நீர்க்கடன் செய்ய -

அனைவரும் - கங்கை
ஆற்றுக்குச் சென்றனர்; நீரில் -
எலும்பைக் கரைத்து -
எள்ளிறைத்து நின்றனர்!

விதுரன் மட்டும் - அதிக

விசனப் படாதது -
பீஷ்மனுக்கு - ஒரு
புதிராக இருந்தது; விதுரன் -
கங்கை மைந்தனின் -
காதோடு ஏதோ சொன்னதும் -
புரியாதிருந்த புதிர் - இலவம்
பஞ்சாகப் பறந்தது!

'தருமங்கள் -
தப்பித்தன!' எனும் -
தகவலைக் கேட்டதும்...
பிதாமகன் - சிறு
பிள்ளை யானான்;
குதித்துக் -
குதுகலித்து -
கொண்ட இன்பம் -
கொள்ளை யானான்!

---

# இடிம்பன்! இடிம்பி!

**ஊ**சியிலைக்காடு;
ஊசித் தூற்றல்; ஊன் -
ஊசிக் கிடக்கும் பாதை;
உடலை -
ஊசி ஊசியாய்க் குத்தும் -
ஊதை தரும் உபாதை!

போதாக் குறைக்கு -
பொட்டை யிருட்டு;
இருட்டு என்றால் - இடறி
இருட்டே விழும் இருட்டு!

காலையில் -
கதிரவன் என்னும் -
குப்பைவாரி வந்து...

கூட்டிப் பெருக்கி -
கூடைகூடையாய்
அள்ளினாலும் -
குறையுமென்று
சொல்லமுடியாத -
கூளம்! அந்தக்
காளம்!

அஃதன்னியில்...
ஆங்காங்கு -
ஓகைகள் கொண்டு -
'ஓ'வென்று அலறும் -
கூகைகள்;

உட்கார்ந்திருக்கும் இடம் -
ஒருவரும் அறியாது - கத்தும்
அக்காக் குருவிகள்;

கௌளிகள்; சுவர்க்
கோழிகள்;
தேவாங்குகள்; சிறு -
தேரைகள்;

கேகயங்கள்;
கிரௌஞ்சங்கள்;
கடுவன்கள்;
கடுவாய்கள்...

இவைதவிர -
இன்னும் -
ஜாபிதாவில் அடங்காத -
ஜந்துக்கள்...

ஒன்றுமாற்றி ஒன்று -
ஓசைகள் எழுப்பி -
காடாந்த காரத்தில் -
கலக்க விட்டன;

நிசி உடுத்தியிருந்த -
நிசப்த ஆடையில் - அந்தக்
கத்தல்கள் - குத்திப்
பொத்தல்கள் இட்டன!

தன்னை -
சூலில் சுமந்த -
தாயை - பீமன்
தோளில் சுமந்து நடந்தான்;
தடத்தில் தட்டுப்பட்ட -
தடைக்கற்களை - தனது
இடக்காலால் இடந்தான்!

தருமனும் -
தம்பியரும் -
பீமனின் -
பின் சென்றனர்; வைக்கும் -
தப்படி -
தப்படியாகி -
தள்ளாடுகையில் - பீமனின்
தோளைப்பற்றிக் கொண்டனர்!

சரளமாக -
செல்லமுடியாதபடி -
சரளைகளும் -
சல்லிகளும்...

நண்டுஞ்சுண்டுமாய் -
நெடுகக் கிடக்கும் -
குண்டும் குழியுமான -
குறுக்குப் பாதையில்...

கூதலில்; கூதலின் -
ஊதலில்;
கும்பியைப் பிசையும் -
கும்மிருட்டில்...

பாண்டவர்கள் - மிகுந்த
பிரயாசைப்பட்டு -
நடந்து நடந்து -
நெடுமூச்சு வாங்கினர்;

உடல் தளர்ந்து -
உணர் வழிந்து -
உள் நா உலர்ந்து -
ஊசல்போல் ஊங்கினர்!

ஆங்காங்கு -
அரையும் குறையுமாக -
சிரம பரிகாரம் -
செய்து கொண்டு...

காட்டு வழியை -
கொஞ்சம் கொஞ்சமாக -
கால்களால் விழுங்கினர்;
விழுங்க விழுங்க - அது
வளர்வது கண்டு -
வெகுவாய்ப் புழுங்கினர்!

நல்லவேளை; கங்கை -
நதிக்கரை வந்ததும் -
நாவாயோடு -
நின்றுகொண் டிருந்தான்...

விதுரன் அனுப்பிய -
ஒருவன்; காட்டின் -
இண்டு இடுக்கெலாம் அறிந்த -
இருளன்!

நதியில் -
நொப்பும் நுரையுமாய் -
பிரவாகம் -
பிரமாண்டமாய் இருந்ததால்...

இருளில் -
இருளன் -
இடுப்பு வலிக்க -
துடுப்பு வலிக்க...

மரக்கலம் ஏறி -
மாதாவும் மைந்தர்களும் -
மந்தாகினியைக் கடந்தனர்;
பின் -

தென்திசை நோக்கி நடந்தனர்!

அதிகம் –
ஆரும் –

புழங்காத சாலை –
புண்ணாக்கியது காலை; இருள் –
பிரிந்து பிரிந்து – மெல்லப்
புலர்ந்தது காலை!

இனி –
இரண்டடி எடுத்துவைக்க –
தினையளவு –
திராணியு மின்றி...

ஓர் –
ஆலின் கீழ் –
அமர்ந்தனர்;
அமர்ந்த கையோடு – கண்
அயர்ந்தனர்!

அறம் –
காப்போர்க்கும் – அதைக்
கடைப்பிடிப்போர்க்கும்...

கால விருட்சம் –
கொடுக்காத நிழலை – அந்த
ஆல விருட்சம் –
அளித்தது; அம்புலி –
குலத்தார்க்கு – நிழற்
குடையானதை எண்ணி – அது
களித்தது!

பிறர் உறங்க –
பீமன் மட்டும் உறங்காது –
பார்த்திருந்தான்; அவர்கள் மீது –
காற்று கூட –
கனமாக உட்கார்ந்துவிடாமல் –
காத்திருந்தான்!

வீமனின் –



உள்ளம் வாடியது;
தாயும் –
தமையனும் –
தம்பியரும் –
தரையில் துயில்வது கண்டு...
விழிகளில் –
வெள்ளம் ஓடியது!

'யாதவ குலம் –
யாத்த வெண்பா;
குருகுலம் மருகியாய் –
கொஞ்சிய பெண்பா!
எங்கள் –
தாயெனும் தெய்வதம் –





தரையே - பட்டுப்
பாயெனப் படுப்பதா?
அரைத்த சந்தனத்தை -
அமேத்தியம் -
அவமதிக்க விடுப்பதா?

இதோ!
இங்கு துயில்கின்ற - எனது
தமையன் தருமன் - எனக்குத்
தாயைப் போன்றவன்; மகா -
தருமிஷ்டன்; தூசுதும்பற்ற -
தீயைப் போன்றவன்!

இந்த -
நெருப்புக்கு -

நெருப்புவைக்க முயன்றானே –
கால்
செருப்புக்கு –
சமமாகாத சுயோதனன்; தன் –
சுவாதீனம் அற்று –
சகுனியின் காலடியில் – ஒரு
சுவானம்போ லிருக்கும் ஈனன்!

என் –
தாய்; தமையன்;
தம்பியர் தவிக்க – அந்த
நாய் தவிசு கொள்ள –
நான் விடுவதா?
வெய்யிலை –
வெந்நீர் சுடுவதா?

துரியோதனனே!
துள்ளாதே! எங்களை –
எரித்துவிட்டதாய் –
எள்ளாதே!
தருக்கியே! நீ –
தாயின்...

குடல்வழி வருகையில் –
ஜடம்; பின்பு –
குடம்வழி வருகையில் –
விடம்!

என்
அண்ணன் – என்னை
அனுமதித்தால்...

ஒருசில நொடிகளில் –
உன்னைச் சாப்பிடுவேன்;
அப்பொழுதும் –
அடங்காத பசிகொண்டு...
கர்ணனையும் சகுனியையும் –
கைதட்டிக் கூப்பிடுவேன்!

உங்களை –
உண்டு உமிழ்வேன்;
அதன்பின்பே –
அமைதியில் அமிழ்வேன்!

ஆனால் – என்
அண்ணன் மனம் –
அதற்கு ஒப்பாது;
ஒப்பினால் –
உங்கள் தலை தப்பாது!'

பீமன் –
பிச்சேறியவன்போல் – தனக்குள்
புலம்பி முடித்தான்; துயிலும் –
தாய்க்கும் –
தமையன் தம்பியர்க்கும் –
காவலாய் நின்று
கண்ணீர் வடித்தான்!

அவன் நின்றிருந்த –
ஆலமரத்திற்கு – சற்று
அணிமையில்...
ஓர் –
ஆச்சாமரம்;
அதனோடு ஒப்பிட்டால் –
ஆலமரம் – ஓர்
அசோக மரம்!

ஆகாயம் –
அளாவி நின்ற – அந்த
ஆச்சா மரத்தில்...

'இடிம்பன்!'
என்றோர் –
இராக்கதன் இருந்தான்; நா –
உலர்ந்தால் – அவன்
உதிரம் அல்லாது –
உதகம் அருந்தான்!

அந்த –
வல்லரக்கன் –
வாய் – கண
வாய்; வன –

விலங்குகளை –
வேக வைக்கும் – காள
வாய்!

பாதாதி கேசம் –
பீதி உண்டாக்கும் –
பூதாகாரம்;
கோரமுகம்;
கோரைப்பல்; குரல்
கர்ணகடூரம்!

பட்சிகள் பெரிதாயிருப்பின் –
பட்சிப்பான்;
பட்சிகள் சிறிதாயிருப்பின் –
ரட்சிப்பான்!

மரக்
கொப்பு மேல் – மணிச்
செப்பு போல்...

ராக்குருவி உட்கார்ந்தால் –
ரசிப்பான்;
ராசாளி உட்கார்ந்தால் –
புசிப்பான்!

சிகையும் –
சிலிர்த்த மீசையும் –
செம்பட்டை; அவன் –
கால் முளைத்து –
காடு நடக்கும் –
கரிக்கட்டை!

கரியை – தன்
கரிய நகத்தால் – காய்
கறியைப் போல் நறுக்குவான்;
அரியை – தன்
அனல் மூச்சால் – அடுப்புக்
கரியைப் போல் கருக்குவான்;

ஆளிகளை – தனது
அக்குளில் வைத்து – அதக்கித்
தூளிகள் ஆக்குவான்;
செயிர்மிகு – கருஞ்
சிறுத்தைகளின் வால்சுழற்றி –
உயிர்களைப் போக்குவான்!

மண்புழுவாய்த் தெரிவான்;
மலைப்பாம்பாய் விரிவான்;
மறைவான்; கண்ணில் –
நிறைவான்; நிறைய –
மாயங்கள் புரிவான்!

இத்தகு –
இடிம்பனுக்கு – ஓர்
இளையள் உண்டு;
'இடிம்பி!' என்று!

அவள் –
அகோரத்தின் –
அகாரம்;
அவ்வளவு –
விகாரம்!

ஒரு –
பொருப்பை –
பெண்ணாக்கியது போல் –
உரம்;
நெருப்பை –
நீராட்டியது போல் –
நிறம்!

அவள்
மனத்திற்கு –
மிகமிகப் பிடித்தது –
மறம்;
அவளைக் கண்டால் –
ஆறுகல் தூரம் –
அப்பால் நிற்கும் –
அறம்!

அண்ணன் அளித்த –
அன்பு மாலையாய் – அன்றாடம் ஓர்

என்பு மாலையை -
ஏற்றிருப்பாள் தங்கை;

ஈர இறைச்சியை -
எதிரில் கண்டால் - இளம்
கன்றுகள்போல் குதிக்கும் -
குன்றுகள் போன்ற கொங்கை!

இடிம்பிதான் -
இடிம்பனுக்கு -
இடக்கரம்;
வலக்கரம்! அவள் -
வருகை -
தராது - அவனுக்கு
இருகை -
இராது!

ஆச்சா மரத்தில் -
அமர்ந்திருந்த -

இடிம்பனின் நாசி - மூச்சை
இழுத்து இழுத்து விட்டது;
மனித வாடை - அவன்
மூக்குக்குப் பட்டது!

'இடிம்பியே! என் -
இளையவளே!
வாடையில் -
வருகிறது - நர
வாடை; நாவில் -
ஊறுகிறது -
உமிழ் நீர் -
ஓடை!

செல்!
சென்று - அவர்களைக்
கொல்!
இறைச்சியோடு -
என் எதிர்வந்து -
நில்!

மனித -
மாமிசம் தின்று -
மாதங்கள் -
மூன்றானது இன்று!'

புகன்றான் அண்ணன்; தீப்
புகையுமிழும் கண்ணன்;
புறப்பட்டாள் இடிம்பி;
புலால்; புண்ணீர் விரும்பி!

---

# அரக்கி ஓர் அழகியானாள்!

ஆலின் கீழ் -
ஐவர் உறங்க - அவர்தம்
காலின் கீழ் -
காவல் நிற்கும்...

பீமனைப்
பார்த்தாள்; ஒரு -
வெப்பம் அப்ப - நீர்த்
தெப்பம் ஒப்ப - நெடு

உடலும் உள்ளமும் -
வேர்த்தாள்...

இடிம்பி எனும் -
இராட்சசி; அவள் -
இதயத்தில் எடுத்தது -
இராப்பசி!

கொல்ல நினைத்தவள் -

பீமனைப்
புல்ல நினைத்தாள்;
தின்ன நினைத்தவள் - பீமனைப்
பின்ன நினைத்தாள்!

சல்லிசாக நினைத்து - யாரை
சாப்பிட வந்தாளோ -
அவனழகு
வள்ளிசாக அவளை -
விழுங்கியதைக் கண்டாள்;
ஆண்மோகம் என்னும்
ஆலம் பாதித்து - அங்கமெலாம்
நீளநெடுக - ஏகத்துக்கு
நீலம் பாரித்து நின்றாள்!

வீமனின் -
வலிவையும் பொலிவையும் -
வர்ணிக்க லானாள்; தன் -
வசமற்றுப் போனாள்!

'அடடா!
ஆணுக்கு ஆண் -
ஆசைப் படும் -
அழகன் இவன்; இளங் -
குமரியரை அமளியில் - இடை
குழையக் குழையக் குலவும் -
குழகன் இவன்; உடல் -
வனப்பெனும் ஏர்கொண்டு -
என்
நினைப்பெனும் நிலம் உழும் -
உழவன் இவன்; என் -
வாலைப் பருவமெனும் -
சோலைக்கு வாய்த்த -
கிழவன் இவன்!

மதன்கணை பாய்ந்து - மையல்
மதம்பிடிக்கும் - மாதரார்
மனவேழத்தை அடக்கும் -
மாவுத்தன் இவன்; அனு -
ராகக் குதிரையின் -
ரௌத்திரம் தணித்து - கல்யாண
ரதத்தில் பூட்டவல்ல -
ராவுத்தன் இவன்!

பொருப்புவில்லி - எரித்த
கருப்பு வில்லி -
சனித்தானா மீண்டும்? -
இவனோடு
சல்லாபித்தல் வேண்டும்!

நான் -
தொத்தத் தோதான -
தோளன்; என் -
அன்புக்கு உரிய -
ஆளன்! இந்த -
மன்மதனுக்கு - நான்
மாலையிடுவேன்; இவன் -
சயனிக்க - நான்
சேலையிடுவேன்!'

தனக்குத்
தானே...
வீமனின் வாளிப்பை -
விளம்பி - உளம்
இடிந்து நின்றாள் -
இடிம்பி!

அவள் -
மனத்தை -
மன்மத அவத்தை -
மர்த்தனம் செய்தது; அந்த -
மர்த்தனம் தாளாது - அவளது
மாதனம் இரண்டும் - கோர
நர்த்தனம் செய்தது!

அத்தனம் காட்டும் -
அடங்காத்தனம் கண்டு - இனி
மெத்தனம் காட்டல் -
மடத்தனம் என்று - 'உளம் -
ஒத்தனம்! வா!' என -

வீமனை வளைப்பதில் - அவள்
எத்தனம் காட்டினாள்;
ஒரு -
மந்திரத்தால் - சுந்தர
மங்கையாய் மாறி - வீமன்
முன்சென்று - அவனுக்கு
மையல் ஊட்டினாள்!

'ஆர் - இந்த
அழகான பெண்?
என்மேல் - ஏன்
எறிந்தாள் கண்?' என்று...

வீமன் பார்த்தான் -
விழிகள் விரிய;
விரிந்த விழிகள் -
வியப்பைச் சொரிய!

இலேசுப்பட்டதாக -
இல்லை - அவளது
இலாவணியம்; ஈரவெளிச்சம் -
இறைக்கும் முகம் -
இரு பிறையும் முயற்கறையும் -
இலா மதியம்!

கொடி -
மின்னலடித்தது
இடையில்; குளிர் -
தென்ன லடித்தது -
நடையில்!

இரு -
மொச்சை உட்கார்ந்த -
முலாம்பழங்களை - ஒரு
கச்சை தாங்கியது; மோக -
நச்சை உமிழ்கின்ற -
நயனங்களில் - காம
இச்சை தூங்கியது!

அவள் -
கன்னங்கள் -
கிட்டப் பறந்து - மட
அன்னங்கள் - தம்
முகம் பார்க்கும்;

'பூக்கள் -
புளித்துவிட்டன!' என்று - தேன்
ஈக்கள் - அவளது
இதழ்களிடம் கள் கேட்கும்!

கண்கள் -
காதுகளில் இடிக்கும்;
கூந்தல் -
குதிகாலைப் பிடிக்கும்!

ஒரு -
சௌந்தரிய -
சூறாவளி...
மாவீரன் பீமன் முன் -
மையம் கொண்டது;
'அது -
தன்னைக் கடக்குமோ? இல்லை
-
தன்னைக் கடத்துமோ?' என்று -
அவன் மனம் - ஓர்
ஐயம் கொண்டது!

அவனிடம் -
அவனையே...

ஐயம் கேட்டு வந்த புயல் -
அவன்
ஐயம் தீர்த்துப் பேசியது; அதன்
-
பேச்சில் - மெல்லிய
பூங்காற்று வீசியது!

'வீரம் மிக்கவனே! நான் -
விரும்பத் தக்கவனே!
நீயார்? ஆலமர -

நிழலில் உறங்கும்...

மாதரசியும் –
மற்றவரும் யாவர்? இவ் –
வனம் வந்தார் – விரைவில்
வானம் போவர்!

இந்த –
அடர்த்தியான காடு –
அரக்கர்களின் வீடு; எனது –
அண்ணன் இடிம்பனின் –
ஆளுகையில் உள்ள நாடு!

மானிடர் ஊன் – அவனது
மனத்திற்கினிய ஊண்;
உங்கள் ஊனீர் – அவன்
உவந்து பருகும் தேனீர்!

இங்கு நீங்கள் –
இருப்பதை –
இடிம்பனின்...
மூக்கு சொல்லியது; உடனே –
நரமாமிசம் வேண்டுமென –
அவன்
நாக்கு சொல்லியது!

உத்தரவிட்டான் – என்
உடன்பிறந்தான் எனக்கு –
உங்களைக் கொல்ல!
கொல்லவந்தேன்; ஆனால் –
கொல்லப்பட்டேன்; அந்தக்
கொடுமையை என்ன சொல்ல!

ஆம்! உன் –
அழகும் ஆண்மையும் – என்னை
அடித்துத் தள்ளியது; உன்பால் –
'போ! போ!' என்று – எனது
பொல்லாத ஆசை – என்
கழுத்தைப்
பிடித்துத் தள்ளியது!

இனி நீ –
எனக்கு –
இரை யல்ல;
இறை! என் –
மனத்தளவில் – நீ
மாமன் முறை!

என்
உள்ளத்தை ஈர்த்தது – உன்
உடல் வாகு; எனக்கு –
மாலையிட்டு – நீயென்
மணாளன் ஆகு!

திருமணம் ஆனபின் –
தினம் தினம்...
விடியும் வரை – தாள்
விலகா திருக்கும் அறை; அங்கு
விளையும் இன்பத்திற்கு – ஏது
வரையறை?

என் –
மனத்தைப் புரிந்துகொள்; திரு –
மணத்தைப் புரிந்துகொள்!

என் –
அண்ணனிட மிருந்து – உங்கள்
அனைவரையும் காப்பேன்;
அயலிடத்தில் சேர்ப்பேன்!'

வெண்ணெயில் சுட்ட –
வெண்ணப்பத்தைப்
போன்றவள் –
விண்ணப்பத்தை வைத்தாள் –
வீமனின் முன்; அவன் –
விடையிறுத்தான் பின்!

'பெண்ணே! உன் –
பேச்சை நிறுத்து; வனத்தில் –
பிறரிருப்பர்; அங்குபோய் –
பய முறுத்து!

ஒரு
மாதுறவு எனைத்தேடி -
வலிய வந்ததும் - மனம்
பேதுறவு கொள்ள - நான்
பித்தன் அல்ல;
சுத்தன்! பரி -
சுத்தன்!

எனவே -
என்னை நீ
இச்சிக்காதே;
இன்னமும் -
இங்கு நின்று -
இம்சிக்காதே!

நடக்காது -
நீ நினைப்பது;
நட! வேறு -
நிலம் பார் - உன்
நச்சு விதையை -
நட!

உன் -
அண்ணன் - ஓர்
அரக்கனாக இருக்கலாம்;
அனேகர் ஆயுளை சுருக்கலாம்;
என் -
எதிர்ப்படுவானாயின்...



தூள் தூளாகும் - அவன்
தருக்கெலாம்; செருக்கெலாம்!

அரக்கர்;
அமரர்;
யட்சர்;
யமபடர்...

இவரில் -
எவர் வரினும் -
என்னுயிரைக் -
கவர்தல் சிரமம்; என்னைக் -
காத்து நிற்பது தருமம்!

உன் -
மூத்தோன் - சினம்
மூண்டிங்கு வந்தால் - உயிர்
நீத்தோன் ஆவான்;
நீள்விசும்பு போவான்!'

பீமன் - இப்படிப்
பேசிக்கொண் டிருக்கையிலேயே...
இடிம்பியைத் தேடிக்கொண்டு -
இடிம்பன் வந்தான்; அவள் -
காதல் கொண்டு -
கதையளப்பது கண்டு...
சிந்தை -



சிதைபோல் வெந்தான்!

'ஏடி!
இதுவா உனக்கு நான் -
இட்ட பணி? நீ -
பீடுமிகு அரக்கர் குலத்தை -
பீடித்த பிணி!
நரன் என்பவன் -
நமக்கு...
மணம் வீசும் -
உணவா?
மணம் பேசும் -
உறவா?

நம் -
மரபுப்படி -
மனிதன் இருக்க வேண்டியது...
சமையலறை -
சட்டியிலா?
சயன அறை -
கட்டிலிலா?

இரு!
இவனை -
ஒழித்துவிட்டு - உன்னை
ஒழிக்கிறேன்; எனது
உகிர்கொண்டு -
உனது தோலை வழிக்கிறேன்!'
என்று -
இடிம்பன்...
பீமன்மேல் - உக்கிரப்
பார்வையை வீசினான்; பீமன் -
பொறுமையாய்ப் பேசினான்!

'அரக்கனே! உனக்கு -
அஞ்சாதது என் வலிய தோள்;
ஆயினும் - உன்னிடம்
அடியேனுக்கொரு
வேண்டுகோள்!

துவந்த யுத்தத்தை - இங்கு
துவங்கினால் - இவர்கள்
தூக்கம் கெடும்; சற்று -
தூரம் சென்று - நாம்
துடை தட்டினால் -
சண்டையின்
காரம் குறைந்தா விடும்?'

வீமனின் -
வேண்டுகோளை -
இடிம்பன் -
ஏற்றுக்கொண்டு...

'நீ -
இங்கு செத்தாலென்ன?
அங்கு செத்தாலென்ன?'
என்று -
எக்களிப்பாய்ச் சிரித்தான்;

பீமன் -
பதிலுக்கு - தன்
பெரிய உதடுகளில் - சிறிய
புன்னகையை தரித்தான்!

ஒரு -
வதுவை யாகாமலே - தான்
விதவை யாகிவிட்டதாய்...
மனம் -
வெதும்பி நின்றாள்; விழிநீர் -
ததும்பி நின்றாள்...

வீமன்மேல் -
வளர்காதல் -
அரும்பி நின்ற -
இடிம்பி!

# கடோத்கஜன்

இடிம்பனும் பீமனும் -
எதிர் எதிர் நின்று...

துவந்த யுத்தத்திற்கு -
தோள் தட்டினர்; எதிரி -
சமமில்லை என்று - இருவரும்
சூள் கொட்டினர்!

பின் - இரு
பலசாலிகளும்...

கஜமும் -
கஜமும் போல் -
ஒருவரை -
ஒருவர் -
தடக்கையால்
தட்டினர்;

அஜமும் -
அஜமும் போல்
ஒருவரை -
ஒருவர் -
முன்தலையால் -
முட்டினர்;

புஜமும் -
புஜமும் மோதி -
ஒருவரை -
ஒருவர் -
நெடுந் தூரம் -
நெட்டினர்!

பிறகு -
பீமசேனன் -
அரக்கனை -
அலாக்காகத் தூக்கி...
வனத்தில்
வெகுகாலமாக -
எட்டுக்கண் விட்டெறிந்தானை -
எட்டுகல் விட்டெறிந்தான்;

விழுந்தவன் -
எழுந்து வந்து...
வீமன் மேல் - பெரும்
விருட்சங்களை பிட்டெறிந்தான்!

அந்த -
விருட்சங்கள் -
வீமன் மேல் பட்டு -
சுள்ளிகள் ஆயின;
சிதறுண்டு போயின!

உக்கிரம்
உச்சிக்கு ஏற - பீமன்
வக்கிரம் பிடித்த -
வல்லரக்கனை...

இடுக்கிப் பிடிக்குள் வைத்து -
இறுக்கினான்; ஈர -
முண்டு போல் -
முறுக்கினான்!

இடிம்பன் - நுரை
ஈரல் பிதுங்கி...

மூச்சுவிட முடியாது -
முக்கினான்;
நசுக்குண்டு -
நசுக்குண்டு -
திசுக்கள் தேய்ந்து - உயிர்த்

திரவத்தைக் கக்கினான்!

தட்டழிந்தவனை - பீமன்
தரையில் தள்ளி -
பாதங்களால் தேய்த்தான்;
உயிர் -
பாக்கியின்றி மாய்த்தான்!

அரக்கனின் அலறலில் -
அதிர்ந்தது மண்;
ஒரு கைப்பிடியளவு -
உதிர்ந்தது விண்!

குந்தியும் - நான்கு
குமாரரும் -
உறக்கம் நீங்கி -
விழித்தனர் கண்;

கண் விழித்தார் -
கண் முன்னே -
தென்பட்டாள் -
தேவதை போலொரு பெண்!

குந்தி -
வியப்பெய்தினாள் -
முந்தி ;
வாய் மலர்ந்தாள் -
பிந்தி!

'ஏர் -
ஆர்ந்த கண்ணியே! நீ -
ஆர்? எங்களில் உனக்கு -
அறிமுக மானவர் -
ஆர்? அல்லது - இங்குனை
அனுப்பி வைத்தது -
ஆர்? அல்லது - இங்குனக்கு
அழைப்பு விடுத்தது -
ஆர்?'

அன்னை குந்தி -
அனேக -

'ஆர்'களை -
அடுக்கடுக்காக -
அவள்மீது வீசினாள்;
அந்தப் பெண் பேசினாள்!

'அம்மா! இந்த -
அடியாளின் பெயர் -
இடிம்பி; என் அண்ணன் -
இடிம்பன்!
இந்த -
வனத்திற்கு - அவன்தான்
வேந்து; உயிரோடு -
போனதில்லை எவரும் - இங்கு
போந்து; அவர்களது -
ஆடைகளும் -
அணி பணிகளும் -
மட்டுமே இருக்கும் - இங்கு
மீந்து!

அந்த அளவு - என்
அண்ணன் - ஒரு
வல்லாள கண்டன்; எவரையும் -
வெல்லவல்ல பிரசண்டன்!

அவன் -
அனுமதியில்லாமல்...
மாருதம்கூட - இங்குள்ள
முகைகளை -
மலர்த்த முடியாது; முகைமேல் -
உட்கார்ந்திருக்கும்
ஒரு சொட்டுப் பனியைக் கூட -
உலர்த்த முடியாது!

மாங்கனியைக் குடைந்து -
அதன்
மாமிசத்தை - ஆறுகால்களால்
வண்டுகள் வழிக்க முடியாது;
மரக்கிளைகளின் -
மேலே அமர்ந்து - பட்சிகள்
மலஜலம் கழிக்க முடியாது!

சுருக்கமாகச்
சொன்னால் -
என் -
தமையனுக்குத்
தெரியாது...
இங்கு -
கீடம் ஊராது;
கிணறு ஊறாது!

நாங்கள் -
நர மாமிசத்தை - அக்கார
அடிசிலாய் தினம் - உண்ணும்
அரக்கர் இனம்!

இந்தத்
தருவின் கீழ் - நீங்கள்
துயில்கின்ற வாடை...

அங்கு என் -
அண்ணன் மூக்கைத் துளைத்தது;
அவன் நாக்கில் - அது
அதிகம் உமிழ்நீர் விளைத்தது!

அவன்தான் - என்னை
அனுப்பினான்...

உங்களைக் -
கொன்று வர; ஊனைக் -
கொண்டு வர!

நானும் - உங்களை
நசிக்க நினைத்தேன்;
நசித்துப் -
புசிக்க நினைத்தேன்;

ஊன் வெறிகொண்டு - இங்கு
ஓடோடி வந்த பின்புதான் -
உன்மகன் உள்ளத்தில் -
வசிக்க நினைத்தேன்!

ஆம்!

அவன் -
வனப்பு என்னை -
வசியம் செய்ததில் -
பசியும் பறந்தது; புலாலின் -
ருசியும் பறந்தது!

நான் -
ஆகாரமாக எண்ணி -
ஆணைத் தின்றதுண்டு;
இன்றென் -
அங்கம் ஒவ்வொன்றும் - ஓர்
ஆண் தின்றதுண்டு!

தின்றவன் - உன்
கன்று; தோள்கள் -
வேய்போல் வாய்த்த -
வாலிபக் குன்று!

நினைத்த வேளையில் -
நினைத்த வண்ணமாய் -
என்னை
ஆக்கிக் கொள்ளும் -
ஆற்றல் உள்ளதால்...

ஒரு -
வஞ்சிக் கொடியாய் - நான்
வடிவெடுத்தேன்; தாயே! நின் -
மகனை மணக்க -
முடிவெடுத்தேன்!

தாமத மானதால் - என்னைத்
தேடிக் கொண்டு - என்
தமையன் வந்தான்;
நான்கொண்ட -
தோற்றம் கண்டு வெந்தான்!

உடனே -
உன் -
மகனைக் கொல்ல - கை
முட்டியை ஓங்கினான்;

உன் மகன் - உங்கள்
உறக்கம் கெடுமென...
இடிம்பனை இழுத்துக்கொண்டு -
இவ்விடம் விட்டு நீங்கினான்!'

இடிம்பி -
இவ்வாறு -
விவரங்களை விரிவாக -
விளக்குகையில்...
பீமன் வந்து சேர்ந்தான் -
பத்திரமாக; அம்புப்
புட்டிலுக்குத் திரும்பும் -
அத்திரமாக!

அன்னை குந்திதேவி -
ஆனந்த பாஷ்பம் சிந்தினாள்;
அன்புமகனை -
ஆரத் தழுவிட முந்தினாள்!

பிறகு - தரும
புத்திரனும் பின்னவரும் -
காதலால் மருவினர் பீமனை;
கிருஷ்ணபட்சம் இல்லா
சோமனை!

அன்னையும் ஐவரும் -
அங்கிருந்து நகர - இடிம்பி
பீமனை வழிமறித்தாள் - தனது
பிரேமையைப் பகர!

'அய்யனே! என் -
அண்ணனைக் கொன்றபின்பும் -
அடியாள் உன்மேல் வைத்த -
அன்பைக் கொல்லவில்லை;
நீ -
கொழுகொம்பு; நானுனைக்
கூடவந்த கொடிமுல்லை!

தழுவ வந்த -
தளிர் முல்லையை -
தழுவாது -
தரையிலே -
தவழவிட்டு - நீ
தள்ளிச் செல்வது -
தரும மல்ல; இனியும் என் -
தாபத்தை எங்ஙனம் சொல்ல!'

இடிம்பி-
இப்படிச் சொன்னதும்...

வீமன்-
வெறி கொண்டான்;
வெகுவாக வெகுண்டான்!

'அரக்கியே! உனக்கிந்த -
ஆசை ஒவ்வாது ;
சாணத்தைத் தன்னுடன் -
சேர்க்குமா சவ்வாது?
வஞ்சனையாய் - என்னை நீ
விசுவாசிக்கிறாய்;
உடனிருந்தே என்னைக்கொல்ல -
உத்தேசிக்கிறாய்!

என்னை நீ-
கொல்வதன் முன் - உன்னை
நான்
கொல்வது நலம்; உன்னுடன் -
புல் முளைத்துப் போகட்டும் -
புல்லர்கள் குலம்!'

என்று - பீமன்
இரைந்தான்; அவளுயிரை -
வாங்குவதற்கு
விரைந்தான்!

தருமன் -
தம்பியைத் தடுத்தான்; அவன் -
மூர்க்கத்துக்கு - ஒரு
முட்டுக்கட்டை கொடுத்தான்!

'பீமனே! நீ -
பிழை செய்யலாமா? பயிரைப்

பெருக்கும் வேலையைவிட்டு -
கருக்கும் வேலையை -
மழை செய்யலாமா?
பசுவதை;
சிசுவதை;
இவை -
இரண்டைக் காட்டிலும்
பெரும்பாவம் -
பெண்வதை!

அதைப் புரிபவன்-
அறியமாட்டான்...

பிறவிதோறும் - அப்
பாவம் தொடர்வதை; அது
விடாது அவனுக்கு -
விளைவிக்கும் தொடர் வதை!

தம்பியே! நீ -
தருமத்தை கைக்கொள்;
உலகமே வந்து சேரும் -
உன்னுடைய கைக்குள்!

உன்னைக்
கொல்லவந்த இடிம்பனை - நீ
கொன்றது சரி; உன்னைப்
புல்ல வந்தது பிழையா - அந்தப்
புல்லனின் சகோதரி?

அழகான - ஓர்
ஆண்மகனை...
இளம் பெண்கள் -
இச்சிப்பது சுபாவம்;
இதுவல்லால் - இவள்
இழைத்ததென்ன பிறபாவம்?
இவளைக் கொல்வதால் -
இழியாதா உன் பிரபாவம்?'

உதிஷ்டிரன் - தன்
உடன் பிறந்தானுக்கு - இப்படி
உபதேசித்ததும்...

குந்தியிடம் - தனது
கோரிக்கையை வைத்தாள் -
அந்திவண்ண அரக்கி; அன்னை
அடிகளில் கண்ணீரை இறக்கி!

'அன்னையே! நான் -
அரக்கர் சாதி; என்னையும் -
கொல்லலா மல்லவா -
காதல் வியாதி!

அரக்க ரென்றும் -
அமர ரென்றும் -
மனித ரென்றும் -
மாக்க ளென்றும்...

பார்த்தா -
பாய்கிறது -
மாரனின் -
மலர் வாளி?

அது-
அதன் இச்சையாய் -
எவர் நெஞ்சிலும் -
இறங்கும் ஆணி!

ஆர் -
அனுமதியு மின்றி -
அரும்புவது காதல்; அதை -
ஏற்பார் ஏற்காவிடினும் - அதன்
இயல்பு தன்னை ஈதல்!

உன் -
மகனைக் கண்டேன்;
மையல் கொண்டேன்;
மணாளனாய்-
மனத்தால் வரித்தேன்;
மாற்றுரு தரித்தேன்!

இது-
மெய்யைத் தழுவும்
காதல் அல்ல;

மெய்யாய்த் தழுவும் -
காதல்!

இது -
கீழ்த்தரமான -
காமம் அல்ல;
ஒருவனையே நினைத்து -
ஓம்பும்
ஓமம்!

இருந்தால் - உன் மகனின்
இல்லத்தரசியாய் இருப்பேன்;
இல்லையேல்...
இருப்பது பாவமென இறப்பேன்!'

இடிம்பியின் -
இறுகிய காதல் கண்டு - குந்தி
இளகினாள்;
இடையில் - தானும்
இதர மகன்களும் நிற்காது -
விலகினாள்!

என்றவள் சொல்கேட்டு -
இடிம்பியை மணந்தான் -
பீமன்! மற்றதை -
கவனித்துக் கொண்டான் -
காமன்!

பீமனுக்கும் இடிம்பிக்கும் -
பிறந்தது ஒரு பிள்ளை;
பேரனை -
எடுத்துச் சுமக்க - குந்தியின்
இடுப்புக்கு கொடுப்பினை
இல்லை!

அதற்குக் காரணம் -
அசையும்...
மலைபோல் இருந்தது - அந்த
மதலை; மருட்டும்படி -
கொடூரமாயிருந்தது - அதன்
குதலை!

கல்லொத்த புஜன்! பெயர் -
கடோத்கஜன்!

---

# ஏக சக்கரம்

**ஆ**ரையும் -
அச்சுறுத்தும் வண்ணம் -
அடர்த்தியா யிருந்த - அந்த
அடவியின் நடுவே...

அந்தம் மிகுந்த -
அந்த இடம் - ஒரு
துறக்கம் போல் -
துலங்கியது;
இலட்சணம் என்னும் -
இலக்கியத்திற்கு - ஓர்
இலக்கணம் போல் -
இலங்கியது!

அதற்குக் காரணம் -
அந்தப் பிரதேசம்...
தானாக உண்டாகவில்லை; ஒரு -
தவசி உண்டாக்கியது!

ஏற்கெனவேயே -
இயற்கையோடு -
இயைந்திருந்த வனப்பை - அந்த
ரிஷியின் ஆன்மபலம் -
ரெண்டாக்கியது!

இருக்கு முதலான -
ஈரிரண்டு வேதங்களை - அவர்
உருப்போட்டவர்;

உருப்போட்டு
உருப்போட்டு - அவை
ஓங்கி வளர - உள் நாக்கில்
எருப்போட்டவர்!

அத்தகு -
சாலிகோத்திர மகரிஷி -
சுயமாக சிருஷ்டித்தது -
அந்தப் பகுதி;
ஆதலால்தான் -
அருளும் அழகும் அமைதியும் -
அவ்விடம் அவ்வளவு மிகுதி!

வருஷம் முழுவதும் -
வசந்தோற்சவம் போல் -
வளமாக இருந்தது - அந்த
வளாகம்; அந்த -
வளாகத்தின் - நடு
வயிற்றில் நாபிபோல் -
தித்திக்கும் தீர்த்தமொடு - ஒரு
தடாகம்!

அந்தத்
தடாகத்தைச் சுற்றிலும் -
தழையத் தழைய -
தழைச் சேலையை
கட்டிக்கொண்டு -
தலை நிறைய பூவோடு -
தீர்க்க சுமங்கலிகளாக -
தருக்கள்; அந்தத் -
தருக்களின் மேல் -
தங்கிக் கொண்டு -
உருக்க முடன் -
ஒவ்வொரு நாளும் -
குழல்போல் கூவும் - சாரங்கக்
குழுக்கள்!

வெயில்;
மழை;
காற்று;
குளிர்...

அனைத்தும் அங்கு மிதம்;
ஆனந்தம் அபரிமிதம்!

அந்த இடத்தில் -
ஆறேழு மாதங்களுக்கு மேல்...
பஞ்ச பாண்டவர் -
பெற்றவளுடன் தங்கினர்;
சாலிகோத்திர மகரிஷியின் -
சீடர்களாகி -
வேதங்களைக் கற்று - அவற்றின்
விழுமிய பொருளில் முங்கினர்!

அதன்பின் - ஓர்
அதிகாலையில் -
அங்கிருந்து புறப்பட்டனர்;

'காலம் நேரம் -
கனியும் போது - நாம்
கூடுவோம் மீண்டும்; அதுவரை -
காத்திருக்க வேண்டும்!' என்று -

இடிம்பியிடமும் - தன்
இனிய மகனிடமும் -
பீமன் கூற - அவர்கள்
பிரிவெண்ணி விழிநீர் விட்டனர்!

மகரிஷியின் -
மனமார்ந்த வாழ்த்தோடு -
பஞ்சவர் நடந்தனர்;
பலகாதம் கடந்தனர்!

வீமன் - தாய்க்கு
வாகன மானான்;
சில -
சந்தர்ப்பங்களில்...
இளையோரையும்
மூத்தோனையும் -
இடுப்பில் எடுத்துப் போனான்!

ஒரு
வெய்யில் தாழ்ந்த -
வேளையில்...
வழியில் - பகவான்
வியாசரை - அவர்கள்
சந்தித்தனர்; கைகூப்பி -
வந்தித்தனர்!

திக்கற்றும் -
வக்கற்றும் போன -
தனது...
பிள்ளைகள் பற்றி - குந்தி
புலம்பினாள்; அதுகுறித்து -
வேத வியாசர் - ஆறுதலாய்
விளம்பினார்!

'உத்தமியே! நீ -
உலகியல் அறியாது -
விசனிக்கிறாய்; மனம் -
வீணாய் சலிக்கிறாய்!

நீராடை உடுத்திய - இந்த
நிலத்தின் கண்...
முழுக்க முழுக்க - நூறு
விழுக்காடு -
பாவம் -
புரிந்தவனும் இல்லை;
புண்ணியம் -
புரிந்தவனும் இல்லை!

அவரவர் புரியும் -
அறமும் மறமும்...
விகிதாசாரத்தில் -
வித்தியாசப்படலாமே தவிர -
எந்த மனிதனும் -
இரண்டையும் கலந்துதான் -
உதித்த நாள்தொட்டு -
உதிரும் நாள்வரை செய்கிறான்;
விதைத்ததற் கேற்ப -
விளைவதைக் கொய்கிறான்!

உறுபிறவியில் -
ஒருவன் புரிந்த...
நல்லதும் -
அல்லதும் -
உள்ளது -
உள்ளபடியே -
கர்த்தாவின் -
கைக்கு வருகிறது;
களிப்பும் -
கண்ணீரும் தருகிறது!

புரிந்த வினைகளின் -
பலா பலன்களை -
அனுபவிக் காமல் -
ஆரும்...
தப்புவதில்லை; இந்த -
தருமத்தை - பாமரன்
ஒப்புவதில்லை!

நன்கு -
கற்றறிந்த -
கல்விமான்...
சுடுநிலையிலும் -
சுகநிலையிலும் -
நடுநிலையினில் -
நிற்கிறான்; அந்த -
நிட்காமிய -
ஞானத்தை...

மழையிலும் வெயிலிலும் - ஒரே
மாதிரியாய்க் கிடக்கும் -
கற்பாறையிடம் -
கற்கிறான்!

ஆதலால்...
அருங்குணவதியே!
நீ -
விசனத்தை -
விட்டொழி; நட!
வினைப்பயன் -

விட்ட வழி!

நம்பு! நாளை -
நலமே விளையும்;
காலம் - உன்
கவலைகளைக் களையும்!'

வியாசர் - இங்ஙனம்
உபதேசித்து...
அனைவரையும் -
அந்தணர் வேடம் -
அணியச் செய்து...
'ஏகசக்கரம்!'
எனும் நகரத்திற்கு -
இட்டுச் சென்றார்;
ஆரும் -
அறியாது -
அங்கேயே சிலகாலம்...
வதியுமாறு - அவர்களை
விட்டுச் சென்றார்!

ஏகசக்கரம் -
எனும் ஊர் - முன்னம்
யோகசக்கரம் -
'ஓஹோ!' என சுழன்ற ஊர்;
ஏகப்புகழை -
ஏந்திக் கொண்டு - மூக்கில்
யாகப் புகையை -
யாண்டும் சுமந்த ஊர்!

எழுதாக் கிளவியை -
முழுதாய்க் கற்றார் - நெறி
வழுவாது வாழ்ந்த ஊர்;
கன்றுகள்; கறவைகள் -
கூட்டமாய் மேய்ந்திடும் -
குன்றுகள் சூழ்ந்த ஊர்!

சௌஜன்னியம் எனும் -
சரட்டினில் -
சகல ஜனங்களையும் - ஒரு
சரமாய்க் கோத்த ஊர்;
அத்வைதம் என்னும் -
அரிய அரவிந்தம் - அங்குள
வித்வான்களின் - உள்ள
வாவியில் பூத்த ஊர்!

ஏகசக்கரத்தின் -
இத்துணை பெருமைகளையும் -
கால சக்கரம் - சமீபத்தில்
கிழித்துப் போட்டது;
நகுதல் என்பதை -
நகரத்து மாந்தரின் -
உதடுகளிலிருந்து -
வழித்துப் போட்டது!

ஏதேனும் - ஓர்
இல்லத்திலிருந்து - தினம்
எவரேனும் ஒருவர் - அழுவது
எதிர்பார்ப்பாய் ஆனது;
போட்டது போட்டபடி -
பாதி சனம் - தனது
வீட்டைத் திரஸ்கரித்து -
விட்டேற்றியாய்ப் போனது!

வாழும் மீதிசனம் -
வேறு போக்கிடமின்றி -
முடங்கிக் கிடந்தது; அஞ்சி -
அடங்கிக் கிடந்தது!

வீதிகள் - பல
வேளைகளில் -
வெறிச்சோடிக் கிடந்தன;
உண்ணல் -
உறங்கல் -
உலவல் - எல்லாம் ஓர்
உயிர்ப்பின்றி நடந்தன!

இப்படி - ஊர்
எங்கிலும் தென்படும் - ஓர்
இயந்திரத்தனத்தைக் கண்டு...

குந்தி வியந்தாள்; எனினும் -
குடியிருக்கும் வீட்டாரிடம் -
கேட்க பயந்தாள்!

தன்கதையே -
தனிக்கதையாய் இருக்கையில் -
ஊர்க்கதை எதற்கு - என்று
ஒதுங்கினாள்;
ஓட்டுக்குள் - தன்னை
உள்வாங்கும் கூர்மம் போல் -
வீட்டுக்குள் - மௌனமாய்
ஒடுங்கினாள்!

குந்தியும் - அவளது
குமாரர்களும்...
ஒரு -
வேதியர் வீட்டில் -
ஒட்டுக்குடியாய் -
வசித்தனர்; அன்றாடம் -
பிட்சாடனத்தில் -
பெற்றதைக் கொண்டு -
புசித்தனர்!

அத்துணை -
அவலங்களுக்கும் இடையே -
அவ்வூர் மக்கள்...
உபவீதமும் -
உத்தரீயமும் அணிந்து -
உபாதானத்திற்கு வரும்...
பஞ்ச பாண்டவர்க்கு -
பஞ்ச மில்லாமல் -
பிட்சை இட்டனர்;
ஆயினும் -
அதே நேரத்தில்...
தருமன் முகத்திலும் - அவன்
தம்பியர் முகத்திலும் -
தெறிக்கின்ற -
தேஜஸைக் கண்டு...
ஒவ்வொருவர் -
ஒவ்வொரு கருத்தை -
ஊர்க்குள் -
உலவ விட்டனர்!

'உஞ்சவிருத்திக்கு -
வருகின்ற - இந்தப்
பஞ்சவரைப் பார்த்தால்...
தேவகுமாரர் போல் -
தோற்றுகின்றனர்; பிட்சையை -
அபேட்சித்து ஏன் - தம்பசியை
ஆற்றுகின்றனர்?

அகத்தின் அழகும் -
முகத்தின் அழகும் - இவர்
அரசாளத் தக்கவர் - என்று
அறைகின்றன;
பெரிய இடத்துப் -
பிள்ளைகள் என்பதை - இவரது
பழக்க வழக்கங்கள் -
பறைகின்றன!

ஒருவேளை -
வாழ்ந்து கெட்டவரோ? -
இல்லை
வைதிக வாழ்வை -
விரும்பியே தொட்டவரோ?'

இவ்வாறெல்லாம் -
இருந்தது -
ஊர்சனம் - செய்த
விமர்சனம்!

ஊர் -
விமர்சனத்தை - குந்தி
காதில் வாங்கவில்லை; வேறு -
கவலையால் அவள்
தூங்கவில்லை!

வழக்கமாய் - பிட்சையாய்
வருகின்ற போஜனத்தை -
இரு -
பாதியாய் - அவள்

பிரிப்பாள்;
ஒருபாதியை -
வீமனுக்குத் தந்துவிட்டு...
மறுபாதியை - மற்ற
மகன்களுக்கும் தனக்கும் -
பங்கிட்டுக் கொண்டு -
புசிப்பாள்!

அப்படி -
அவள் வழங்கிய -
ஆகாரம்...
பீமனுக்கு -
போதவில்லை; அவன் மேனி -
ஒல்லியானதே தவிர -
முன்போல்
ஊதவில்லை!

ஓர் -
உத்தரணி நெய்யை -
பெருந்தீயில்
ஊற்றினால் எப்படி? அவன் -
உதரத்திற்குக் கிடைத்த -
உணவு அப்படி!
பொழுதுக்குப் பொழுது - பீமன்
'பொக்கு பொக்'கென இளைக்க -
பெற்ற வயிறுக்கு - அதுவே
பெருங்கவலையா யிருக்க...
அவர்கள் குடியிருந்த -
அந்தணர் வீட்டில்...
பேரிரைச்சலாய் - ஒருநாள்
புலம்பல் சத்தம் கேட்டது;
'திக்'கென்று குந்தியை - அது
தூக்கிவாரிப் போட்டது!

---

# நல்ல கணவன்; நல்ல மனைவி!

கிட்டத்தட்ட -
கிரௌஞ்சப் பட்சிகள் மாதிரி...

அந்தணனும் -
அவன் மனைவியும் -
அவ்வளவு -
அன்னியோன்னியம்;
ஒற்றை ரோமம் -
ஊடாடாதபடி -
ஒட்ட ஒட்டிக் கொண்ட -
ஒரு சௌஜன்னியம்!

அவள் -
கும்மிருட்டிலும் -
கொழுநன் கூடவே -
செல்லுகின்ற -
சாயை;

அவன் -
கொண்டவளிடம் -
கண்டான் - காலத்தால்
தொலைந்து போன - தன்
தாயை!

மூவிரண்டு வயதில் - ஒரு
மகன்;
முந்நான்கு வயதில் - ஒரு
மகள்;
இரண்டும் -
இதழ்ச் சிரிப்பில் -
துப்பும் செம்பொன் -
துகள்!

குழந்தைகள் - கூடத்தில்
குறுக்கும் நெடுக்கும் -

கால் முளைத்த –
குத்து விளக்குகள் போல்...

ஒளியை –
உமிழ்ந்தவாறு –
ஓடித் திரிகையில் –
ஓர் ஓரமாய்...

குந்தி –
குந்திக் கொண்டு – அந்த
ரகளைகளை –
ரசிப்பது உண்டு!

ஆயினும்...
அந்தப் பிள்ளைகளின் –
பெற்றோரை –
பார்க்கும் போதெல்லாம்...

அந்த –
உத்தம தம்பதியின் –
உதட்டாசனங்களில் –
ஒரு பொய்ப் புன்னகை –
உட்கார்ந்து கொண்டிருக்கும்;

அதன் –
காரணம் புரியாது –
குந்தியின் மனது –
ஊசலாடிய வண்ணம் –
ஊமையாய் நின்றிருக்கும்!

பேரிரைச்சலோடு – இப்போது
புலம்பல் சத்தம் கேட்டதும்...

ஒருக்களித்திருந்த –
உக்கிராண அறையின் –
கதவோரம் போய் – குந்தி
காது கொடுத்து நின்றாள்;
கணவனும் மனைவியும் –
கண்கலங்கிப் பேசுவதை – தன்
கவனத்தில் – வரிபிசகாது
குறிப்பெடுத்துக் கொண்டாள்!

பிராமணோத்தமன் –
பெண்டாட்டியை கோபித்தான்;
தன் –
பேச்சைக் கேட்கவில்லை
யென்று –
பெரிதும் பிரலாபித்தான்!

'என் –
சந்தோஷத்திலும் –
சிந்தாகுலத்திலும் –
சமபங்கு கொள்ளும் –
சகதர்மிணியே!

என் –
முகத்தில் முளைத்த –
மூன்றாம் கண்மணியே!

நெடுங்காடு –
நெடுக...

தீப்பிடித்து –
திகுதிகுவென எரிகையில்
பூப்பிடித்த –
பெரும் விருட்சங்களில்...

கூடுகட்டி –
குடியிருந்து –
குஞ்சுபொரித்து –
குடும்பம் நடத்திய...

பகுத்தறிவில்லாத –
புள்ளினங்கள் கூட – வல்லான்
வகுத்ததே வாய்க்காலென –
வேறு இடம் போகின்றன;

அங்ஙனம் –
அன்றி...
வாழ்ந்த –
விருட்சங்களின் மேல் –
ஆழ்ந்த –
அன்பும் ஆசையும் வைத்து...

உடும்பு போல் -
ஒட்டிக் கொள்ளும்
புள்ளெலாம் -
சுடும் தீயில் சிக்கி - சாம்பற்
சூரணமாய் ஆகின்றன!

ஒன்றின் மீது -
ஒருவன் மனம்...

பற்று வைக்கிறது; அந்தப்
பற்று -
பற்றுவைத்தவன் நெஞ்சிலேயே -
புற்று வைக்கிறது; அந்தப்
புற்று -
புற்றுவைத்தவன் உயிருக்கே -
முற்று வைக்கிறது; இந்த -
முற்றுக்கு - ஒரு
முற்றுவைக்கும் ஞானத்தை -
முற்றாக - எந்த மனம்
கற்று வைக்கிறது?

அன்பே ! உன் போல் -
ஆசாபாசம் -
எனக்கும் உண்டு;
அதே நேரத்தில் -
அந்த ஆசாபாசத்திற்கு - ஒரு
கணக்கும் உண்டு!

பாசம் என்பது - நம்
பாதத்தை வழுக்கும் -
பாசம்;
பந்தம் என்பது - நமை
பஸ்பமாய் பொசுக்கும் -
பந்தம்!

அழாக்குறையாக - நான்
ஆயிரம் முறை சொன்னேன்...

'அடியே! நம்மை -
ஆபத்து சூழ்ந்திருக்கிறது;
ஊரைவிட்டு - வா!
ஓடலாம்!' என்று; உன்
முன்னோர் -
வேரை விட்டு -
வாழ்ந்த ஊர் இது;
வரமாட்டேன் என -
வம்பு செய்தாய் அன்று!
என்னானது இன்று? உறவுகள் -
எல்லாம் ஒழிந்தன - அசுரன்
இரையாகத் தின்று!

ஊர் -
ஒப்பந்தப்படி...
அசுரனின் -
அசுரப் பசிக்கு...

வீட்டுக்கு ஒருவர் -
விருந்தாகச் செல்வர்;
என்முறை இன்று! நான்
சென்றால் -
என்னாவர் என் செல்வர்?

என்பால் -
அனை அனைய -
அன்பு செலுத்தும் - என்
மனையே!

நான் -
உனை அனுப்பவும் -
ஒருப்பட மாட்டேன்; அப்படி -
உன்னை அனுப்பினால் -
உருப்பட மாட்டேன்!

என் -
உயிர் நீ; நீ போனால் - என்
உடலை -
உடனே உண்ணும் -
சுடலை!

நம் -
பிரியமுள்ள -
புதல்வியோ...

இன்னும் -
பூப்படையாத -
பூ; பூத்துப் -
பூமுடிய வேண்டிய -
பூ!

இது -
ஏழைப்பூ என்றாலும் -
எவரும் உண்ணுகின்ற -
வாழைப் பூ அல்ல;
வாசப் பூ சூடி - மண
வாசல் கண்டு - ஒரு
நேசப்பூ தோள்தழுவி -
நெடுநாள் -
குங்குமம் சுமக்க வேண்டிய -
குங்குமப் பூ!

இந்தப்
பூவை -
பறிகொடுத்துவிட்டு - பின்
பூவில் நமக்கென்ன வேலை?
புலராது நம்முடைய காலை!

இதோ! நம் -
இனிய மகன்; நம் -
எண்ண மயில் மீது -
எழுந்தருளும் குகன்;
சின்னஞ் சிறுவன்;
சீலத்தில் இன்னொரு துருவன்!

நான் -
'புத்'தெனும் நரகம் -
போய்ச் சேரா வண்ணம் -
காக்கும்
புத்திரன் இவன்; இவனலால் -
பின்னாளில் - எனக்குப்
பிண்டம் வைப்பதும் -
பிதிர்க் கடன் செய்வதும் எவன்?

இவனை இழந்தா - நான்
இருப்பேன்? இவனிருந்தால் -
இறந்த பின்னும் - நான்
இருப்பேன்!
ஆதலால் - என்
அன்பிற்குரியவளே!

நாம் -
ஒருவரை விட்டு - மற்று
ஒருவர் இருப்பது சிரமம்;
ஒன்றாகப் போவோம்; அசுரன் -
உணவாக ஆவோம்; அது
கிரமம்!'

கண்ணீரும் கம்பலையுமாய் -
கணவன் கூறியதைக் கேட்டு...

விரக்தியாக -
முறுவலித்தாள்; அவன் -
வார்த்தையை -
மறுதலித்தாள்...

அவனது -
அகமுடையாள்; குளிர் -
முளரியொத்த -
முகமுடையாள்!

'என்பால் -
பிரிய மனம் -
உள்ளவனே! எனைப் -
பிரிய மனம் -
அற்றவனே!

நீ -
உபநிடதங்களை -
உணர்ந்தவன்; புத்தியால் -
புராணங்களைப் -
புணர்ந்தவன்!
நீ -
சாவு பற்றி -
சஞ்சலிப்பதா? உன்மனம் -
சஞ்சலத்தில் -

சஞ்சரிப்பதா?

பிறப்பு என்பது - ஒரு
புறப்பாடு;
இறப்பு என்பது - அதன்
இலக்கு! அந்த -
இலக்கை -
எவ்வுயிரும் எட்டும்; இது -
விதி; விதிக்கில்லை -
விலக்கு!

மண்ணுலகில் -
மரணத்தைத் தவிர் -
மற்றெல்லாம் -
மரணிக்கக் கூடியவை;

கோடி கோடி -
கோடி கோடி உயிர்கள் -
கூடிக் குலவி - வானம்
கூப்பிட்டவுடன் ஓடியவை!

எனக்கு - என்
இறப்பைப் பற்றி -
பயமில்லை; உனக்காக நான் -
இறப்பதைக் காட்டிலும் - என்
பிறப்புக்கு வேறு பயனில்லை!

நானிறந்து -
நீயிருந்தால்...
வாரிசுகளைக் காப்பது -
உனக்கு சாத்தியம்;

நீயிறந்து -
நானிருந்தால்...
என்னைக் காப்பதே -
எனக்கு அசாத்தியம்!

நம் -
குமுகாயத்தில் -
குங்குமமும் -
கூந்தல் பூவும் இழந்தவள்...

மண்ணில் வீசப்பட்ட -
மாமிசம்; அதில் -
வாய்வைக்காமல் விடுமா -
வாயசம்?

கொழுகொம்பற்ற -
கொடி - கீழே கிடந்தால்
அதன்மேல் எத்தனை பேர் -
கால்
அடி!

அன்பனே!
அது மட்டுமா?

பூப்படைகையில் -
பெற்றோர் நிழலில் -
பூமுடிக்கையில் -
புருஷன் நிழலில்;
மூப்படைகையில் -
மகனின் நிழலில்!

இப்படி -
இறுதிவரை...

இன்னொருவர் நிழலில் -
இருப்பவள்தானே பெண்! இக் -
கேடு கண்டு -
கேவலம் கண்டு -
கீழ்மை கண்டு - இதுகாறும்
கூச்சப்பட்டதா இந்த மண்?

எனவே -
எந்தக் கட்டத்திலும்...

பிறர்நிழல் சார்ந்திருக்கும் -
பெண் ஜன்மத்தால் -
தன்னையும் -
தன் விழுதுகளையும் -
காத்து நிற்பது -
கடினம்; பெண்மையின் -
மேனிவலிமை - மிக மிக

மலினம்!

ஆதலால் – என்
அன்புச் செல்வங்களை...

நாயகனே!
நீ காப்பாற்று; அசுரனுக்கு –
உணவாக நான் போகிறேன் –
உயர்
ஒப்பந்தம் ஏற்று!'

நாயகி சொல்கேட்டு –
நாயகன் நெக்குருகினான்;
நெய்குறைந்த திரியாய் –
நெஞ்சு கருகினான்!

அதுகண்டு –
ஆற்றாது...

'தந்தையே!
துக்கம் விடுங்கள்; என் –
சொல்லுக்கு – தயை செய்து
செவி கொடுங்கள்!

வம்ச விருட்சம் –
வளர்வது...

மகனால்தான்;
மகளால் அல்ல! நம்குலம் –
தம்பியால் –
தழைக்கட்டும்; எனக்கு –
அனுமதி தாருங்கள் –
அசுரன் இரையாய்ச் செல்ல!'

என்று –
சிறுமி சொன்னதும் –
சிறுவன் சொன்னான் –
ஒரு –
துரும்பைக் காட்டி – அதைத்
தன்
தளிர்க் கரங்களால் ஆட்டி!

'அப்பா! என்னை –
அனுப்புங்கள்! நான் –
துணிந்து செல்லுவேன்;
அசுரனை –
துரும்பால் கொல்லுவேன்!'

மகனின் –
மழலைச் சொல் கேட்டு –
மாதா பிதா மகிழ்ந்தனர்;
மனம் நெகிழ்ந்தனர்!

இதுதான் –
ஏற்ற தருணமென்று...

குந்தி – தனது
கூச்சம் விட்டாள்; அவர்கள் –
குடும்ப விஷயத்தில் –
குறுக்கிட்டாள்!

# பகாசுரன் வதம்

பிராமணனிடமும் – அவன்
பாரியையிடமும் –
வினவினாள் குந்திதேவி; வாய் –
வார்த்தைகளில் குளிர் மேவி!

'நல்லவர்களாகிய –
நீங்கள்...
கவலைப்படவும் –
கண்ணீர் விடவும் –
காரணம் என்னென்று –
கூறினால்...
உங்களுக்கு நான் –
உதவலாம்; நீங்களும் –
உங்கள் மேல் –

உட்கார்ந்திருக்கும் -
துயரத்தை - ஒரு
தூசி போல் உதறலாம்!'

வினாவிற்கு -
விடையிறுத்தான் -
வேதியன்; வேதமோதும் -
சாதியன்!

'தாயே! - தங்கள்
தயைக்கு நன்றி;
ஆயினும் - எங்கள்
அவலம் தீர்க்க -
ஆராலும் ஆகாது -
ஆண்டவன் அன்றி!

அப்படியிருந்தும் - தங்கள்
அப்பழுக்கற்ற அன்பு கருதி...

உற்ற துயரத்தை -
உரைக்கிறேன்; அங்ஙனம் -
உரைப்பதன் மூலம் - என்
உள்ளே உறைந்திருக்கும் -
கவலைப்பாறையை - கடுகளவு
கரைக்கிறேன்!

இந்த -
ஊரிலிருந்து - யமுனை
உற்பத்தியாகும் இடம்...
இரு -
குரோச தூரம்; சதா -
கொண்டல் தூறும்;
சதுப்பு நிலம்; எங்கும் -
சகதியும் சேறும்!
முன்னம் இருந்தது - அங்கு
மனித சஞ்சாரம்; அது -
முற்றுப் பெற்று - ஆனது
முந்நூறு நானூறு வாரம்!

அந்த இடத்தில் -
அநாதி காலமாக...

வாய் பிளந்த ஒரு பிலம்; அது -
வல்லரக்கன் ஒருவனுக்கு -
வாய்த்த வாசஸ்தலம்!

அந்த -
அரக்கனின் பெயர் -
'பகன்!' - கோர
முகன்!

அவன் - மனித
ஊன் விரும்பி - இந்த
ஊர்க்குள் புகுந்து...

ஆடவர்;
பெண்டிர்;
இளையோர்;
முதியோர்...
என -
பேதா பேதமின்றி - பிடித்துப்
புசித்து வந்தான்; புசித்தது -
போதாமல் - அடிக்கடி
பசித்து வந்தான்!

பாதி ஊர் -
பகாசுரன் வாய்க்குள்;
மீதி ஊர் -
மரண பயமெனும் நோய்க்குள்!

ஊர் கூடி - ஓர்
ஒப்பந்தம் போட்டது; அதற்கு -
ஒப்புக் கொள்ளுமாறு -
பகனிடம் உருக்கமுடன்
கேட்டது!

வீட்டுக்கு ஒருவர் - தினமும்
காட்டுக்கு வருவர்...
இரு -
எருதுகள் பூட்டிய -

வண்டியோடும்; வண்டி நிறைய -
உண்டியோடும்!

மனிதனையும் -
மாடுகளையும் -
படையலாய் அனுப்பும் - சாப்
பாடுகளையும்...

அசுரன் உண்டு -
அமைதி கொள்ளலாம்;
வார்த்தை மீறினால் -
ஊரையே கொல்லலாம்!

எங்கள் தாயே!
இதுதான் ஏற்பாடு;
இந்த ஏற்பாட்டின் படி -
இன்று என் வீடு!

ஏழை விரும்புகிறேன் -
என்னை இழக்க; என் -
தாரம் விரும்புகிறாள் -
தன்னை இழக்க; என் -
தங்கங்கள் விரும்புகின்றன -
தங்களை இழக்க; நாங்கள் -
எண்ணுகிறோம் மொத்தத்தில் -
எங்களை இழக்க!
இனி -
தப்புவது எப்படி? எங்கள் -
தலையெழுத்து அப்படி!'

குலுங்கி யழுத -
குடும்பத் தலைவனை -
குந்தி தேற்றினாள்; இனிய -
சொல்லெனும் - வெண்
சாமரை வீசி - அவனைக்
கொல்லும் கொதிப்பை
ஆற்றினாள்!

'அந்தணனே! நீ -
அழ வேண்டாம்; நீங்கள் -
எவருமே - அசுரனின்
இரைப்பைக்குள் -
விழ வேண்டாம்!
என் -
ஐந்து பிள்ளைகளில் -
மைந்து மிக்கவன் -
ஒருவன் உண்டு; உன்
பொருட்டு -
அவன் சென்று - பசி
ஆறி வருவான் - அசுரன்
ஆவியை உண்டு!'

அன்னை குந்தி - இங்ஙனம்
அருள் கூர்ந்து சொன்னதை -
அங்கீகரிக்க வில்லை -
அந்த அந்தணன்;
'என் பொருட்டு -
இன்னொரு தாய் -
தன் பிள்ளையை -
தாரை வார்ப்பதா?
அதிதியாய் வந்தவனை - நானே
அந்தகன் கையில் சேர்ப்பதா?
அது அனுசிதம்;
அறச் சேதம்!' என்று -
எரிதழலாய் - அவன்
இதயம் வெந்தனன்!

அவன் -
குறிப்பை அறிந்து -
குந்தி விளக்கினாள்; அவனது -
அர்த்தமுள்ள அச்சத்தை -
அறவே விலக்கினாள்!

'உத்தமனே!
ஒன்றுரைப்பேன்; கேள்!
ஒரு தாய்க்கு...
நூறு பிள்ளை இருப்பினும் -
நூறில் ஒன்றைக் கூட -
நூறும்படி விடமாட்டாள்; அது -

நேரும்படி புத்தி கெடமாட்டாள்!

நான் -
அன்பு; அறிவு;
ஆற்றல்; ஆண்மை;
ஆகிய -
நாலைப் பெற்றதாய் -
அஞ்சைப் பெற்ற தாய்!

உன் பொருட்டு என் மகனை -
உதவுகிறேன் என்றால்...
என் -
புத்திரன் வலிமை -
புரிந்தவள் நான்; பத்து -
மத்த வாரணம் -
ஒத்த வாரணம் - என்
தனயன் என்று -
தெரிந்தவள் நான்!

அவன் சென்று - அசுரனை
அதம் செய்வான்; உனக்கும் -
இவ் வூரார்க்கும் -
இதம் செய்வான்!'

வேதியனும் -
வேதியன் மனைவியும் -
மாதரசி குந்தியின் -
மணிமொழி கேட்டதும்...

'அன்னையே!
ஆழியினும் பெரியது - உங்கள்
அன்பு மனம்; அஃதில்லையேல் -
அம்மம்மா! இன்றே -
ஆகியிருக்கும் - எங்கள்
அஸ்தமனம்!'
என்று - சென்னி மேல்
இருகரம் கூப்பி - குந்தியை
சாஷ்டாங்கமாய் -
சேவித்தனர்; தரையிறங்கிய -
பரம்பொருளாய் -
பாவித்தனர்!

இதர மகன்களின் -
இணக்கம் பெற்று...

வல்லரக்கனை -
வீழ்த்திவர - குந்தி
வீமனைப் பணித்தாள்;
பகனை வகிர்ந்து - உயிர்ப்
பூவைப் பறிக்கவல்லோன் - என
மகனை கணித்தாள்!

'இன்னும் -
எத்துணை காலம் - இந்த
பகாசுரன் -
படுத்தும் பாடு?' என...

ஊரார் -
உள்ளத்திலிருந்த -
வினாவிற்கு...

விடையொன்று காண - வீமன்
விடையிரண்டு பூட்டிய - வில்
வண்டியில் புறப்பட்டான் -
ஊர்
விடை கொடுக்க; வேய்நிகர்
தோள்
விடைத்திருக்க!

பேச்சுப்படி -
பகாசுரனுக்கு -
ஊர்மக்கள் வைத்த -
ஒட்டுமொத்தப் படையலாக...

பாற்குடங்கள்;
நெய்க்குடங்கள்; ஆடைத்
தயிர்க் குடங்கள்; கொம்புத்
தேன் குடங்கள்; வறுத்த -
குக்குடங்கள் நிறைந்த -

மட்குடங்கள்...

மேடம்;
இடபம்;
மகரம்;
கடகம்...

இவற்றின் -
இறைச்சிகள்;
ஈச்சம்;
தெங்கு;
பனை...
இவற்றில் -
இறக்கிய கள்;
என -
ஏராளமான -
உண்டி வகைகள் -
வண்டி நிறைய இருக்க;

மணம் -
மூக்கைத் துளைக்க;
உண்ணாவில் -
உமிழ்நீர் சுரக்க...

எருமை நிற -
எருதுகளை - வீமன்
விரைவாக ஓட்டிக் கொண்டு -
வனம் வந்தான்; ஓர் -
ஓதியின் நிழலில் - மாடுகளுக்கு
ஓய்வு தந்தான்!

தின்றால் - தன்
தொண்டையில் சிக்குமென்று -
தீ -
தின்னாமல் துப்பிவிட்ட....

தலை -
ஓடுகளும் - என்புக்
கூடுகளும் -
உருத்திர பூமிபோல் - அங்கு
உதிர்ந்திருக்கக் கண்டான்;
இந்தப் -
பிரதேசம்தான் -
பகாசுரன் -
புழங்கும் இடமென்று -
புரிந்து கொண்டான்!

அசுரன் - அங்கு
ஆஜராவதற்குள்...

வண்டியில் இருக்கும் - உணவு
வகையறாக்களை -
உண்டு முடித்துவிட - வீமன்
உத்தேசித்து...

ஒவ்வொரு கவளமாய் - வாய்
உள்ளே நுழைத்தான்;
பகாசுரனை - இடையிடையே
பேர் சொல்லி அழைத்தான்!

புகை நெருப்பாய் - வெளிப்
போந்தான் -
குகை நெருப்பாய் -
குடியிருக்கும் பகாசுரன்;
நண்டு கொழுத்தால் - வளையை
நீங்குமெனும் பழமொழிப்படி -
உண்டு கொழுத்து - ஊர் நடுங்க
உலவுகின்ற மகோதரன்!

தன்னுணவை - ஒரு
தடியன் தின்பது கண்டு...

'ஆரடா நீ? - ஊர்
அனுப்பியவன் என்றால் - என்
சோறடா நீ!
என் -
சோறே - எனக்குரிய
சோற்றைத் தின்பதா? உன்னை -
முட்டாள் என்பதா? - திமிர்
முற்றிய ஆள் என்பதா?' என்று...

காடதிர - பகாசுரன்
கத்தினான்; பீமன் முதுகில் -
குத்தீட்டியொத்த கரத்தால் -
குத்தினான்!

அதைப் -
பொருட்படுத்த வில்லை; குந்தி
பெற்றெடுத்த பிள்ளை!
முத்தலை சூலம் குத்தினும் -
சிறு
பொத்தலைப் போடுமோ?
'பொக்'கென முனைமுறியும் -

அத்தலை மூன்றும்; பீமசேனன் -
அத்தகு மேனியன்! அசுரனின் -
குத்தலை - காட்டுக்
கத்தலை கவனியாது - புலால்

வற்றலை; வறுவலை - பசிய
வெற்றிலை போலே மென்றான்;
வல்லரக்கன் சொல்லொணா -
வெறுப்பேறி நின்றான்!

பீமனின் -
பிடர்பிடித் திழுத்து -
பூமியில் புரட்டினான்;
அவனைப்
பிட்டுப் பிட்டுப் பிட்டு -
பிட்டு போல் புசித்திடப்
போவதாய் மிரட்டினான்!

ஓடவிட்டு - எலியின்
உயிர்வாங்கும் பூசை போல் -
சிறிது
ஆடவிட்டு - அசுரன்



ஆவி வாங்க எண்ணினான்...

பீமன்!
பலாயணன் எனும் -
நாமன்!
ஆதலால்...
அசுரன் கொடுத்த
அடிகளை - சில
நொடிகள் தாங்கினான்; பின் -
இனியும் -
இடங்கொடுத்தல் -
தகாதென -
திருப்பி வாங்கினான்!

பகாசுரனை -
பாயாய்ச் சுருட்டினான்; அந்தப்
பாழ் நிலத்தில் -
பந்தாய் உருட்டினான்;
பின் - கைகளால்
பற்றியெடுத்து - அவனைப்
பழச்சாறாய்ப் பிழிந்தான்;
பகாசுரன் அழிந்தான்!

அவன் -
பூதவுடலைத் தூக்கி - வண்டியில்
போட்டுக் கொண்டு...
ஊரில் சேர்த்தான்; பீமன் -
ஊருணியாய் வேர்த்தான்!

நெடுங்காலத்திற்குப் பின் -
நகரம் சிரித்தது; குந்தி -
புதல்வனுக்கு - நடை
பாவாடை விரித்தது!



# துருபதன் கவலை

ஒளியெனும் -
உளி கொண்டு -
ஒரு -
சிற்பத்தை -
செதுக்கினான்...

தீயெனும் -
தபதி; அவள்தான் -
துருபதன் மகள் -
திரௌபதி!

உலகத்து -
உயிர்க ளெல்லாம்...
தாயில் தொடங்கும்;
தீயில் அடங்கும்!

ஆனால்...
அவளது -
ஆக்கையை அழிக்காமல் -
ஆக்கியது அனலாம்; ஆதலால் -
நெருப்பை - அவளிருந்த
கருப்பை எனலாம்!

செந்தீ சுமந்த - அந்த
பெண் தீ...

இருவர் -
இயற்றிய -
காமத்தில் பிறந்தவளல்ல;
ஒருவன் -
ஓம்பிய -
ஓமத்தில் பிறந்தவள்!

ஆம்!
அரசன் -
பாஞ்சாலன் மகள் -
பாஞ்சாலி - நெய்யாலுழுத
வேள்வி வயலில் -
விளைந்த சாலி!

ஒரு -
கல்யாண மாலைக்காக - அவள்
காத்திருந்தாள்; அழகில் -
கஞ்சம் இல்லாமல் - காஞ்சன
கஞ்சம்போல் பூத்திருந்தாள்!

அவள் -
சிவப்பு நெருப்பு -
சிருட்டித்த -
கறுப்பு நெருப்பு; அந்தக்
கறுப்பு நெருப்புக்குள் -
கனன்றபடி இருக்கும் -
கற்பு நெருப்பு!

அவள் -
திருமேனி - கன்னங்
கருமேனி!

ஆயினும் -
அந்தக் கிருட்டிணம்...
ஒளியை உமிழ - ஓடி
ஒளியும் இருட்டினம்!

அருமை மகளின் - மேனி
கருமை கண்டு -
காவலன் பெயரிட்டான் -
'கிருஷ்ணை!' என்று!

'திரௌபதி;
பாஞ்சாலி;

கிருஷ்ணை!'
என -
முப்பெயர் கொண்ட -
மோகனம் அவள்;
உயிர்த்து உலவும் - அன்ன
வாகனம் அவள்!

வாரி நீலத்தை -
வாரி வழித்து - தனது
அப்பு விழிகளில் -
அப்பி நின்றவள்;

கொண்டல் கருமையை -
தண்டல் செய்து - தனது
கொண்டை முழுவதும் -
கொட்டிக் கொண்டவள்!

ஓர் -
ஊறல்போல் -
உதடுகளில் - ஊறும்
தேறல்; அவள் -
திருவாய்ச் சிரிப்பில் -
தெரியும் - அந்தத்
தேறலின் தூறல்!

மிடறு -
வலம்புரி;
நாபி -
நீர்ச்சுழி;
மாதனம் -
தெங்கு தந்த -
சீதனம்;
தொடை -
துவசத் தம்பத்தின் -
கொடை!

'உண்டா?
இல்லையா?' - எனும்
வினாவிற்கு - எவரும்
விடைகூற முடியாத -
இடை;
'ஒருகால் -
இருகால் கொண்டு -
இளங்கால் -
இங்ஙனம் உலவுதோ?' என்று -
நகரத்தார் -
நினைக்கும்படி -
நளினம் மலிந்த -
நடை!

அளகம் முதல் -
அடிக்கணை வரை - கவிஞர்க்கு
புளகம் விளைக்கும் -
பொற்புடைய வனிதை; சந்தனக்
களபம் போலே -
கருங்குழல் மணக்க -
துளபம் போலே -
துலங்கும் புனிதை!

துரோணரைக் கொல்ல - ஒரு
தனயன்;
தனஞ்சயனைப் புல்ல - ஒரு
தனயை!
விரும்பியது போல் -
வேள்வி செய்து...

பாஞ்சாலன் - இருவரையும்
பெற்றான்;
தனயனாய்ப் பிறந்த -
திருஷ்டத்துய்மன் -
துரோணரிடமே -
தனுர்வித்தை கற்றான்!

மறலியே - தனக்கு
மாணவனாக வந்திருப்பது -
துரோணருக்குத் தெரியும்; அது -
தொல்வினை என்பதும் புரியும்!

கொல்ல வந்தவனுக்கே -
குரு வானார்; வெட்டும் -

கோடரிக்குக் காம்புதவும் –
தரு வானார்!

'தன் மகன் –
தனுவை வளைப்பான்; ஒருநாள் –
துரோணரின் –
தொண்டையைத்
துளைப்பான்!' என்று –

அரசன் துருபதன் –
ஆணித்தரமாய் நம்பினான்;
மகள் விஷயத்தில்தான் –
மனம் சற்று வெம்பினான்!

'பார்த்தன் கழுத்தில் – என்
புத்திரி பாஞ்சாலி எங்ஙனம்
போடுவாள் பூவாரம்? –
அவன்தான்
அரக்கு மாளிகையில் –
அக்கினித் தேவனுக்கு –
ஆனானே ஆகாரம்!

விஜயனை மணக்க –
வேள்வியில் வந்தவள் –
வேறொருவன் தாரமாய்ப்
போவதா?
வேள்வியே கேள்வியாய்
ஆவதா?'
என்றெல்லாம் –
இரவு பகல் –
துருபதன் –
துக்கப் பட்டான்; பிறகு –
துக்கத்திற்கு – ஒரு
தீர்வுகாணும் பொறுப்பை –
பக்கதுணையா யிருந்த –
அவைப்
பெரியோரிடம் விட்டான்!

'மன்னா! எதற்கு –
மனக்கிலேசம்? மறையோர்
சொல் –
தவறாது என்றும் –
லவலேசம்!

யாது கருதி நீ –
யக்ஞம் புரிந்தாய்? ஏதேனும் –
சூது கருதியா? அல்லவே! –
குந்தி
மகனை மணக்க – ஒரு
மாது கருதிதானே –
அவியா நெருப்பில் – நீ
அவியைச் சொரிந்தாய்!

வேள்வி – நீ
வேண்டியதை உனக்கு
வழங்கியது: 'உன்மகளால் –
வையம் உய்யும்;
வீழும் பொய்யும்!' என்று –
வானம் முழங்கியது!

அரசே! உன் –
அன்புமகள் திரௌபதி – ஓர்
யாயின்றி பிறந்த –
யட்சிணி! அவளே –
தருமன் தம்பிக்கு – சக
தர்மிணி!

விவாகம் – நீ
விரும்பியது போல் நடக்கும்;
விதி வலியது; எந்த –
விக்கினத்தையும் கடக்கும்!

தை மாதத்தில் –
சுக்கில பட்சத்தில் –
ரோகிணி நட்சத்திரத்தில்...
உன் –
செல்வி துரோபதையின் –
சுயம்வரத்தை நடத்து!

வில்விஜயன் வந்து சேருவான்;
விசனத்தை நாடு கடத்து!'

தெள்ளியர் -
தெரிவித்த கருத்தை - செவியால்
அள்ளியருந்திய -
அரசன் துருபதன்...
மனத்தை மொய்த்த -
மயக்கம் நீங்கினான்;
மறுபடியும் முகத்தில் -
மலர்ச்சியைத் தாங்கினான்!

கால விரயமின்றி -
கையோடு கையாய்...
திரௌபதி சுயம்வரத்திற்கு -
தேதி குறித்தான்; பிற -
தேசத்தார்க் கெல்லாம் - அந்த
சேதி விரித்தான்!

மன்னன் மகளின் -
மணச்செய்தி சொல்லி -
நாற் சந்தியில் -
நகரா ஒலிக்க...

வழக்கமாய் -
வேக வேகமாய்...

நகர்கின்ற -
நகர்கூட -
நகரா முழக்கங் கேட்டு -
நகராது நின்றது;
உவகையும் வியப்பும் - மாறி
மாறி
ஊரையே தின்றது!

பூஞ்சாளம் பிடித்த -
பாத்திரத்தை -
கலாய் பூசி -
கவினுறச் செய்தல் போல்...

பாஞ்சாலம் -
பூராவுமே -
பள்ளம் மேடு இன்றி -
புதுப்பிக்கப் பட்டது;
மண்சட்டை அணிந்திருந்த -
வீதிகளுக்கு - மாதர் கூட்டம்
மாக்கோலச் சட்டையை -
மாட்டி விட்டது!

வீட்டுச் சுவர் ஒவ்வொன்றும் -
வண்ணச் சுண்ணங்களை -
எடுத்துப் பூசிக்கொண்டு -
இந்திரவில்லாய் நின்றது;
காற்றே - ஒரு
கைத்துடைப்பமாய் மாறி -
வீட்டுக்
குறடுகளில் உள்ள -
குப்பைகளை கூட்டிச்சென்றது!

அட்டகாசமாக -
அங்குலம் அங்குலமாக -
அழகுபடுத்தப் பட்டது -
அரண்மனை;
திரும்பிய -
திசையெலாம் - தேர்ந்த
கலைஞர் தம் -
கைவினை!

பட்டு விரிப்புகள்;
பாவை விளக்குகள்;
படுதாச் சித்திரங்கள்;
பஞ்சலோகச் சிலைகள்;
செம்பொன் தகடுவேய்ந்த -
சிங்காதனங்கள்; அவற்றில் -
கொம்பன் கொம்பாலான -
கைப்பிடிகள்;

இன்னும் -
எவரது -

புருவங்களையும் - நெற்றிப்
பொட்டுக்கு ஏற்றும் -
பல்பொருள்கள்;
தலைமுறை தலைமுறையாய்
வரும் -
தொல்பொருள்கள்...

இப்படி -
எங்கு நோக்கினும் -
செப்பரும் சோபிதம்;
செவ்விய சௌமியம்!

இந்த -
வனப்புகளை யெல்லாம் -
விஞ்சுவதாக...
புத்தம் -
புதியதாக...

ஒரு -
சுயம்வர மண்டபம் -
சொர்ணாபிஷேகம்
செய்தாற்போல் -
தகதக வென்று -
தயாரானது; காண்போர்க்கு -
கிறக்கத்தை உண்டுபண்ணும் -
கிளிகொஞ்சும் அழகில் - அது
துறக்கத் திற்கே -
தாயா ரானது!

தாதிமூலம் - சுயம்வர
சேதி யறிந்து...
'குப்'பென -
குளிர்முகம் வியர்த்து -
'தொப்'பென -
வெட்கத்தில் விழுந்தாள்...
ஒரு -
தல்லி யில்லாமல் - ஓமத்
தீயில் விளைந்த -
நல்லி;

பாஞ்சாலி என்று -
பெயர் படைத்து -
பூஞ்சிரிப்பில் - தேனைப்
பிலிற்றும் அல்லி!

தளதள வென்றிருக்கும் -
திருமேனி - தாபத்தால்
தொளதொள வென்று -
தளர்ந்தது;
நெடு நெடு என்று - ஒரு
நீண்ட கனவு - நெஞ்சில்
விடுவிடு என்று -
வளர்ந்தது!

வரப்போகும் மணவாளனை -
ஒரு
வரைபடம் போல்...
வெள்ளைவெளே ரென்றிருந்த -
தன்
உள்ளமெனும் -
திரைச் சீலையில் -
தீட்டித்தீட்டிப் பார்த்தாள்;
திருப்தி ஏற்படாமல் -
திரும்பத் திரும்பத் திரும்ப -

அழித்து அழித்து எழுதி -
அப்பவும் - மனம்
ஒப்பாமல் - பாவம்!
வெப்பமாய் விழிநீர் வார்த்தாள்!

ஏகசக்கர புரத்தில் -
இருந்த -
அர்ச்சுனனுக்கு -
அப்போது...

புரையேறியது;
மூச்சுக்குழலில் - அவனுண்ட
இரையேறியது!

# ஒரு விருந்தாளி வந்தான்!

பீமனை - ஒரு
பீடத்தில் -
பிரதிமையாக -
பிரதிஷ்டை செய்து...

திருமஞ்சனம்;
திருவாராதனம்;
நீராஞ்சனம்;
நைவேத்தியம்...

என்றெல்லாம் -
ஏகசக்கர புரத்தார் -
பூஜை புனஸ்காரம் -
பண்ணாத குறைதான்;

மற்றப்படி - அவ்வூர்
மக்களின் பார்வையில் - அவன்
வைகுந்தம் விட்டு -
வையகம் வந்து -

வைகும் இறைதான்!

ஊர்ப்பிச்சை -
உண்டவன் - ஊருக்கே
உயிர்ப்பிச்சை -
உதவினான் அல்லவா!

ஆதலால்தான் - அந்த
ஆபத்சகாயன் மேல்...

ஆடவர்; பெண்டிர்;
அனைவர்க்கும் -
அவ்வளவு பக்தி;
அவ்வளவு பிரீதி!

ஊரே -
உதடு குவித்து - அவனது
உப்பிய தாடையில் -
உப்பு முத்தம் இட்டது;



வைதவியம் எய்தாது – தம்மை
வாழ்வித்த வள்ளலுக்கு –
வாசப் பூவும் – வண்ண
வளையலும் அணிந்த...

கைநூறு சேர்ந்து – அவனது
காலடி மண்ணெடுத்து –
கண்ணூறு கழித்து – ஆனந்தக்
கண்ணீரை விட்டது!

ஓர் –
அப்பளம் போல் –
அன்றாடம் ஒருவரை –
அசுரன் நொறுக்கித்தின்ன...
நீர்க் –
கொப்பளம் போல் –
குவலய வாழ்வென்று –
குடிமக்கள் வேதாந்தம் பேச...

முறைவைத்து – ஊர்வாசிகளை
முழுங்கியவனை – ஓங்கியோர்
அறைவைத்து – பீமன்
அந்தகனிடம் சேர்த்தபின்...

ஏகசக்கர புரத்திற்கு –
ஏகப்பட்ட சந்தோஷம்;
போய்த் தொலைந்தது – அதைப்
பீடித்திருந்த சாவுதோஷம்!

நல்ல –
நகரம் ஆனது – அன்று
நரகம் ஆனது; அந்த –
நரகம் ஆனது – இன்று
நகரம் ஆனது!

சலசலப்பான –
சிற்றோடை போல் – எங்கும்
கலகலப்பான காட்சியானது;
முன்னம் –
மூட்டை முடிச்சோடு –
ஊர்விட்டு –
ஓடிப்போன உற்சாகம் –
திரும்பி வந்ததற்கு –
தெருப்புழுதியே சாட்சியானது!

உள்ளூரிலிருந்து –
வெளியூருக்கும் –
வெளியூரிலிருந்து –
உள்ளூருக்கும்...



போக்குவரத்து - முன்பு
போலவே தொடங்கியது;
அசுரபயம் -
அடியோடு அடங்கியது!

ஒருநாள் -
வெளியூரிலிருந்து - ஒரு
விருந்தாளி வந்தான்...
குந்தியும் - அவளது
குமாரரும் -
குடியிருந்த வீட்டிற்கு;
அங்கு -
ஆர்வந்தாலும் பஞ்சமில்லை -
அதிதிசாப் பாட்டிற்கு!

மடிசஞ்சி;
மான்தோல்;
தாழங்குடை;
தண்ணீர்க் குடுவை...

இவற்றோடு வந்த - அந்த
யாத்திரிகன் -
தேசம் தேசமாக சுற்றும் - ஒரு
தேசாந்தரி; அவன் -
தெரிந்துவைத் திருந்தான் - பல
தேசத்து சங்கதி!

தீர்த்தங்கள்;
திவ்ய க்ஷேத்திரங்கள்; தெய்வ -
மூர்த்தங்கள்; அந்த -
மூர்த்தங்கள் பற்றி -
கூர்த்த அறிவுடைய - சமயக்
குரவர்கள் பாடிவைத்த -
மகோன்னதமான -
மங்களா சாசனங்கள்...

என -
எந்த விஷயங்களும் -

ஆனா முதல் -
அக்கன்னா வரை -

அனைத்தும் - அவனுக்கு
அத்துப்படி; அவைபற்றி -
ஆர் கேட்டாலும் -
அள்ளிவிடுவான்;
அவனுக்குத் தேவை - ஆழாக்கு
அமுதுபடி!

வயிறு நிரம்பியவுடன் -
ஊர்க்கதைகளை விரிப்பான்;
விகற்ப மில்லாமல் -
வெள்ளை மனத்தோடு
சிரிப்பான்!

ஒருநாள் இரவு - அவன்
ஒட்டுத் திண்ணையில் -
உட்கார்ந்து கொண்டு...

குந்திக்கும் - அவளது
குமாரர்க்கும்...

பிராசீனமான -
பட்டணங்கள் பற்றியும்;
மகாரதர்களான -
மன்னர்களைப் பற்றியும்...

பிரவசனம் செய்யும் -
பௌராணிகர் போல -
உபமான உபமேயங்களோடு -
விளக்கிக்கொண்டு வந்தான்;
உப்புச்சப்பு இன்றி - வாழ்வை
ஓட்டிக்கொண் டிருக்கும் -
பஞ்ச பாண்டவர்க்கு - ஒரு
பொழுது போக்கைத் தந்தான்!

அவன் -
ஆற்றிய -
கதா காலட்சேபத்தில் -
கடைசியாக இடம் பெற்றது...

துருபதன் கதை! ஒரு -
தொடர்போல் சொன்னான்

அதை!

துரோணரை – உயிர்த்
தோழனாய் ஏற்றதையும்...
தோழமை முறிந்து – துருபதன்
துரோணரிடம் தோற்றதையும்...

அரையரசு ஏற்று – அவன்
அரியணையில் வீற்றதையும்...
அதன்பின் –
அவமானத்தின் காரணமாய் –

துரோணரின் –
தலையைக் கொய்யவும்;
விஜயனை –
விவாகம் செய்யவும்...

ஒரு –
மகனை வேண்டி மகளை
வேண்டி –
மாபெரும் வேள்வி
நோற்றதையும்...

திருஷ்டத்துய்மனும் –
திரௌபதியும் –
ஓமத் தீயில் –
உண்டானதையும்...

அரக்கு மாளிகையில் –
அர்ச்சுனன் மரித்ததால் –
துருபதன் உள்ளம் –
துண்டானதையும்...

பின் –
பாண்டவர் தாயொடு –
பிழைத்த சேதியை –
காற்று வாக்கில் – அவன்
கேள்விப் பட்டதையும்...

அர்ச்சுனன் வரவை –
ஆவலோடு எதிர்நோக்கி –
திரௌபதி சுயம்வரத்திற்கு –
திட்டம் இட்டதையும்...

தருமனுக்கும் – அவனது
தாய்க்கும் தம்பியர்க்கும் –
ஒரு –
வரலாற்றுப் புதினம்போல் –
வரிவிடாது சொன்னான் –
விருந்தாளியாய் – அங்கு
வந்தவன்;

'பேசுவது –
பாண்டவரோடுதான்!' என்பதை –
அறிய வாய்ப்பில்லாத – அந்த
அந்தணன்!

அன்னை குந்தியும் –
அவளது பிள்ளைகளும்...

அவன் –
கூறிய விவரங்களை –
கேட்டுக் கொண்டிருந்தனர்;
காதில் வாங்கி –
போட்டுக் கொண்டிருந்தனர்...

வெறுமனே –
'உம்' கொட்டியவாறும்;
சிற்சில இடங்களில் –
'சூள்' கொட்டியவாறும்!

தொடர்ந்து –
தேசாந்தரி பேசினான் –
குந்தியைப் பார்த்து; சிறு –
குறுநகை பூத்து!

'அம்மா! உனது –
அஞ்சு பிள்ளைகளும்...

அஞ்சு –
அம்புடையோனும் –
அஞ்சும் –

அழகு பெற்றவர்;

சுருதிகளையும் -
சான்றோர் அருளிய -
கிருதிகளையும் -
கோதறக் கற்றவர்!

நற்குணம் வாய்த்த -
நம்பிகள்;
தேகபலம் படைத்த -
தும்பிகள்;
காய்ச்சக் காய்ச்சக் -
கவினுறும் -
காஞ்சனக் -
கம்பிகள்;

அவல -
ஆற்றில் விழுந்தாரை -
அக்கரை சேர்க்கும் -
அம்பிகள்!

இந்த ஐவரில் -
எவரேனும் ஒருவரை -
அந்த திரௌபதி -
அடைய விரும்பலாம்;
அரசர்க் குரிய -
அதிர்ஷ்டம் -
அந்தணர் பக்கமும் -
அருளிருந்தால் திரும்பலாம்!

பாஞ்சால தேசத்தின் -
புரவலன் துருபதன் -
பார்ப்பனரை -
பெரிதும் நேசிப்பவன்;

வேதமோதும் -
வேதியர் - ஊருக்கு
வருகை புரிந்தால் -
வாழ்த்துமடல் வாசிப்பவன்;

அறவோர் -
அடிமலர்களை -
அரவிந்த மலர்களால் -
அருச்சித்துப் பூசிப்பவன்;

முப்புரி நூல் -
மார்பினில் புரளும் -
விப்பிரர் அருளை -
வேண்டி யாசிப்பவன்!

மன்னன் எவ்வழி?
மக்களும் அவ்வழி!

மறையோரை -
மதிப்பவர்;
தக்கபடி உபசரித்து -
தங்க இடம் தந்து -
துதிப்பவர்!

ஆகவே...
அன்னையே!
நீ -
பிரியப்பட்டால் - உன்
பிள்ளைக ளோடு -
பாஞ்சாலம் செல்லலாம்;

சுயம்வரத்தில் - உன்
சுதன்களில் எவரேனும் -
திரௌபதியின் -
திருவுள்ளத்தை வெல்லலாம்!

இன்னும் -
இரண்டரை மாதங்களில்...

தைத் திங்கள்;
சுக்கில பட்சம்;
ராஜ யோகம்;
ரோகிணி நட்சத்திரம்...

இந்த -
நான்கும் கூடும் -
நன்னாள் வரும்;

பாஞ்சாலி சுயம்வரம் -
பாரறிய நடக்கும் -
பொன்னாள் வரும்!'

தேசாந்தரி -
தன்னுடைய யோசனையை -
குந்தி
தேவியிடம் -
தெரிவிக்க லானான்; பிறகு -
தூக்கம் கண்ணைச் சுற்ற - மான்
தோலின்மேல் படுக்கப்
போனான்!

வெள்ளி முளைத்து -
விடிந்தது பொழுது; இரவு -
மண்ணிடம் விடை பெற்றது -
மூக்கால் அழுது!

வழக்கம் போல் -
வீதிவீதி யாக...

தடக்கையில் -
தாமிரச் செம்பேந்தி...

உபாதானம் -
வாங்கிக் கொண்டு...

தருமனும் - அவன்
தம்பியரும் -
திரும்பினர் வீடு; வியர்த்த -
தேகங்க ளோடு!

அன்னமிட்டபின் -
அவர்களோடு - ஆறஅமர
அளவளாவ ஆரம்பித்தாள் -
அன்னை குந்தி;

அவளிட்ட -
அன்னத்தைக் காட்டிலும் -
அதிக ருசியான -
அன்புச் சொற்களை சிந்தி!

'என் -
பிரியமான -
பிள்ளைகளே! - நான்
கற்பித்ததையே -
கடுகளவும் பிசகாது கூறும் -
கிள்ளைகளே!

நாம் -
துரியோதனனுக்குத் -
தெரியாமல் -
வாழ -
வேண்டுமாயின்...

நதிபோல் -
நகரம் நகரமாக -
நகர வேண்டும்; ஓரிடத்தில் -
குட்டை குளம் போல் -
குந்தியிருந்தால் - அந்த
துட்டனிடம் சிக்கி -
துக்கிப்போம் மீண்டும்!

எனவே -
இன்றே...

பயணம் தொடங்கி -
பாஞ்சாலம் போவோம்;
போனால் - அவ்வூரார்க்குப்
புதியவர்கள் ஆவோம்!

நமக்கு - அங்கு
நலங்கள் நேரலாம்;
தீரா திருக்கும் -
துயரங்கள் தீரலாம்!'

பெற்றவள் கருத்தை -
பிள்ளைகள் ஒப்பினர்;

பாஞ்சாலம் -
புறப்படுமுன்...
நிற்க -
நிழல் தந்த -

நல்ல வேதியனுக்கு -
நன்றியைச் செப்பினர்!

விடைபெற்று -
வெளிக்கிளம்பும் வேளையில்...

வியாசபகவான் - எதிரில்
வந்து நின்றார்; சில -
விவரங்களை -
விளக்க...

அன்னை குந்தியை - தனியே
அழைத்துச் சென்றார்!

---

# வியாசரின் விரிவுரை

மீன்வழி வந்த -
மீனவப் பெண்ணின் -
ஊன்வழி வந்த -
உத்தமர்;

வான்வழி வந்த -
நான்மறை களையும் -
வாங்கித் தொகுத்த -
வித்தகர்;

பராசர மகரிஷியின் -
புத்திரர்; வியாசரென்று -
புகழ்சால் பெயர் படைத்த -
புங்கவர்!

குந்திதேவியிடம் - சில
கருத்துக்களை கூறினார்;
கவனத்தில் - அவற்றைக்
கொள்ளுமாறு கோரினார்!

'மாதேவி குந்தியே! என் -
மருமகளே! பொறையில் -
பூதேவி போலிருக்கும் -
பெருமகளே!

கேள்! உனக்கொரு -
கதையைச் சொல்கிறேன்; பின்பொரு -
விவாகம் நடக்கும்; அதற்கான -
விதையைச் சொல்கிறேன்!

ஒரு -
தீர்த்தக்கரை; அந்த -
தீர்த்தக்கரையில் - ஒரு
தபோவனம்; அந்த -
தபோவனத்தில் - ஒரு
திருக்குடில்; அந்த -
திருக்குடிலில் - ஒரு
தபோதனர்; அந்த -
தபோதனருக்கு - ஒரு
திருமகள்!

அவள் - மிக மிக
அழகிய பெண்; செவித்
தோடுகளைப் போய்த் -
தொடுகின்ற கண்;

சொல்லும் சொல் -
சகோடயாழின் பண்; அவள் -
சௌந்தரியத்தை -
சிலாகித்தன விண்; மண்!

மகரிஷியின் -
மகள் -

பலமாதங்க ளாயின -
பருவம் எய்தி; ஊர் ஊராய் -

தண்டோரா போட்டு -
தென்றல் தெரிவித்ததால் -
அனைவரும் அறிவர் -
அந்தச் செய்தி!

வாசமிகு - அந்த
வஞ்சிப்பூ - அட்டதிக்கும்
வீசியது நறுமணம்; ஆயினும் -
வாய்க்கவில்லை திருமணம்!

நல்ல -
குணவதியான - அந்த
குமரிப்பெண் - முன்
காலத்தில் செய்த -
கர்ம வினையால் -
கணவன் கிடைக்காமல் -
கஷ்டப் பட்டாள்;

நிலா சுட - குளிர்
நீரும் சுட - கங்குலில்
உலா வரும் - ஈர
வாதையும் சுட....

உருவிலியின் -
ஓரைந்து -
வாளி பாய்ந்து - விழிநீர்
வாளி வாளியாய் விட்டாள்!

அவளது -
கர்மம் களைய - தந்தையின்
தர்மம் உதவவில்லை; வினை -
மர்மம் புரியாது - வெந்தது
சர்மம் உலர்ந்த முல்லை!

பிறகு - அந்தப்
பெண்ணானவள்...

தனக்கு -
மாலையிடவும் - தன்
மஞ்சம் வரவும் -

ஒரு -
நேசனை வேண்டி -
நெடுங்காலம் - முக்கண்
ஈசனை வேண்டி -
இயற்றினாள் தவம்; அவள் -

இரவு பகல் -
இடையறாது -
இயற்ற இயற்ற -
இளகியது சிவம்!

ஒருகால் -
உயரத் தூக்கி -
வியாக்கிரபுரத்தில் -
விளங்கு சபையில்...

சதிரில் நின்றான் - அந்தச்
சேயிழையின் -
எதிரில் நின்றான்; அவளிடம் -
'என்ன வேண்டும்?' என்றான்!

பரமனைப் பார்த்த -
பரபரப்பில் - தன்னுள்
பரவிய - ஒருவித
படபடப்பில்...

அந்தப்
பேதை - பூங்
கோதை...

'எனக்குக் கணவன் வேண்டும்!
எனக்குக் கணவன் வேண்டும்!
எனக்குக் கணவன் வேண்டும்!
எனக்குக் கணவன் வேண்டும்!
எனக்குக் கணவன் வேண்டும்!'
என்று...

அஞ்சுமுறை கேட்டாள் -
அருளும்
அஞ்சுமுகத் தானிடம்;

'வஞ்சியே! உன் –
விருப்பம் போல் – உனக்கு
அஞ்சு பேர்கள் – கணவராய்
அமைந்திடு வார்கள்!'
என –
இயம்பினான்...
அஞ்சுமுகத்தானும் – நடுங்கி
அஞ்சுமுகத்தாளிடம்!

அதைக் கேட்டு – அவள்
அங்கம் கூசினாள்; உடல் –
உதறலெடுத்த வாறு –
உமாபதியிடம் பேசினாள்!

'பிரபோ! – நான்
பயத்தால் உளறிய பாவை;
பூமாலையிட – ஒரே ஒரு
புருஷன்தான் எனக்குத் தேவை!'

இறைவன் சிரித்தான்; பின் –
இனிய சொல் விரித்தான்!

'கணவன் வேண்டும்!
கணவன் வேண்டும்!
என –
என்னிடம்...

குணவதியே! நீ –
கோரினாய் ஐந்துமுறை;
கோரியதைக் கோரியபடி –
கொடுப்பதுதானே இறை!

எனை –
ஆராதித்த பெண்ணே!
அடுத்த பிறப்பில்...

நான் –
நவின்றபடி...

அடைவாய் கணவராய் –
ஐவரை;

ஆதலால் காத்திரு –
அதுவரை!'
என்று –
ஈசன் கூறினான்; பின் –
எருதுமேல் ஏறினான்!

குந்தியே! அந்த –
குமரிப்பெண் தான்...

அப்பிறப்பு முடிந்து –
இப்பிறப்பில் –
வேள்வி வழியே –
வந்திருக்கிறாள்...

துருபதன் மகள் –
திரௌபதி யாக; உன் –
தனயர் ஐவருக்கும் –
தாரமென் றாக!

அவள் –
அஞ்சு பேரின் –
அகமுடையாள் –
ஆனாலும்...

காலம் – அவளை
கௌரவிக்கும்;

எந்த –
பஞ்சகன்னியர் பெயர்களை –
பாராயணம் செய்தால் –
பஞ்சமா பாதகங்கள் –
பஞ்சாய்ப் பறக்குமோ...
அந்த –
அஞ்சு பேரில் –
ஒருத்தியாய் திரௌபதியையும் –
உலகம் வைக்கும்!

'பஞ்சகன்யா ஸ்மரேன் நித்யம் –
மஹாபாதக நாசனம்;
அஹல்யா த்ரௌபதீ சைவ –
தாரா; ஸீதா; மண்டோதரீ!'

என –
எதிர்காலத்தில்....

வடமொழியில் –
வரகவிகள் வாழ்த்துவர்;
சுலோகம் புனைந்து – தம்
சிரங்களைத் தாழ்த்துவர்!

அசல் அல்ல; தன் –
ஆளனாய் வந்திருப்பவன் –
நகல்! – என்றறியாத
அகல்யை;

விலங்கின மாயினும் –
விதவையானபின் – வெள்ளை
துலங்கிட நின்ற –
தாரை;

மனம் புகுந்த –
மணாளனோடு – விரும்பி
வனம் புகுந்த –
வைதேகி;

விண்ணகம் சென்றான் – தன்
மன்னவன் என்றதும் – தானும்
மண்ணகம் நீங்கிய –
மண்டோதரி!

இவர்கள் வரிசையில் – நாளை
இடம்பெறப் போகிறாள்...

துருபதன் –
திருமகள்; உன்மனை –
வர இருக்கும் –
மருமகள்!

இதுமட்டுமல்ல; முன்னம் –
இவளெடுத்த பிறப்பொன்றில்...

நளாயினி – என்று
நாமம் கொண்டாள்; கொண்ட –
நாயகனைக் கூடையில் சுமந்து –
நடந்து சென்றாள்!

அவள் –
அன்புகொண்டு –
தழுவிய ஆளன் – ஒரு
தொழுநோ யாளன்! எனினும்...

தொழுநோ யுடையானை –
தான்
தொழும்பு செய் தெய்வமாய் –
தொழுநோன் புடையாள் –
அந்த
தோகை நல்லாள்;

கைத்தலம் பற்றிய –
காதல் மணாளனின் – அழுகிய
கைவிரல் உதிர்ந்து – உண்ணும்
கலத்தில் கிடந்தும்...

ஓர் –
அருவருப் பின்றி –
அவனுண்ட எச்சிலை –
பெருவிருப் போடு –
புசித்த இல்லாள்!

விடிந்தால் கணவன் –
விடுவான் உயிரென –
விளைந்தது ஒரு சாபம்; உடனே
–
வெற்பில் வெங்கதிர் –
உதிப்பதைத் தடுத்தது –
கற்பில் சிறந்தவள் கோபம்!

அத்தகு –
உத்தமி; இப்பிறப்பில் –
பாஞ்சாலன் –
புத்திரி!

பிறவி தோறும் – இவள்
புடம் போடப்பட்ட தங்கம்;
பேசி மாளாது – இந்தப்

பெண்ணரசியின் துங்கம்!

குந்தியே! நற் –
குணங்களின் சந்தியே!

எந்தக்
காரியத்திற்கும் – ஒரு
காரணம் இருக்கிறது; ஆனால் –
காரணம் தெரியாமலே –
காரியம் நடக்கிறது!

அதுதான் –
சிருஷ்டி ரகசியம்;
சொல்லொணா அதிசயம்!

நீயும்
நின் மக்களும்....

அத்தினபுரத்திலிருந்து –
அரக்கு மாளிகை வந்ததும்;
அரக்கு மாளிகையிலிருந்து –
ஆரண்யம் வந்ததும்;
ஆரண்யத்திலிருந்து –
அந்தணன் வீடு வந்ததும்;
அந்தணன் வீட்டிற்கு –
அதிதியொருவன் வந்ததும்...

'பிள்ளைகளோடு – நீ
பாஞ்சாலம் போகவேண்டும்;
உன் –
பிள்ளைகளின் மனைவியாய் –
பாஞ்சாலி ஆகவேண்டும்!'
என்று –
ஏற்கெனவே....

காலம் முடிவு செய்த –
காரியத்திற்கான –
காரணங்கள்; அந்தக்
காரணங்களுக்கான –
காரணங்கள் – கடந்த ஜன்ம
கர்மாக்கள்!

இன்ன நாளில் –
இன்ன நாழியில் –
இன்ன கணத்தில் –
இன்ன காரியம் –
இன்ன இடத்தில் –
இன்ன விதத்தில் –
இன்னார் இன்னார் –
இயற்ற வேண்டுமென...

காலம் –
குறித்து வைக்கிறது – அவரவர்
கர்மத்தின்படி; அவை –
தலைமுடி யளவும் –
தப்பாது நடக்கின்றன – கர்ம
தர்மத்தின்படி!

இனியவளே! எனக்கு –
இறைவன் அருளிய –
உள்ளுணர்வால் –
உந்தப் பெற்று...

நேற்று –
நடந்ததையும்;
நாளை –
நடப்பதையும்...

ஓரளவு –
உனக்குத் தெரிவித்தேன்;
உன்பால் – உள்ள
அன்பால் அறிவித்தேன்!

பாஞ்சால நாட்டிற்குப் –
போய் – அங்கு
தங்குங்கள் – சில
தினங்கள்; உங்களுக்கு –
நிச்சயமாய் –
நலங்களே விளையும்;
ஏனெனில் –
நீங்க ளெல்லாம் –
நல்ல மனங்கள்!'

வேதவியாசர் - நீண்ட
விரிவுரையை நிகழ்த்திவிட்டு...

தருமனையும் - அவன்
தம்பியரையும் -
அருகழைத்து - உச்சியில்

அங்கை வைத்து...

'நூறும் புகுக! நலம் -
நாளும் மிகுக!' என -

ஆசி புகன்றார்;
அதன்பின் அகன்றார்!

---

# பாஞ்சாலத்தில் பாண்டவர்

பார்ப்பார் எவர்க்கும் -
'பார்ப்பார்!' என்று -
புரியும்படி...

ஏகசக்கரபுரத்தில் -
இருந்த மாதிரியே...

முப்புரி நூல்;
மூலைக்கச்சம்; என -
விப்பிரர்க்குரிய -
ஒப்பனையோடு...

பஞ்சவர் -
பாஞ்சாலப் பட்டணம் -
புகுந்தனர்;
ஊரின் -
உபசரிப்பில் -
உவகை மிகுந்தனர்!

வீதிக்கு வீதி -
விழவுக் கோலம்;
மூலைக்கு மூலை -
முழவுச் சத்தம்!

பெருந்தேவி குந்தி - தன்
பிள்ளைகளோடு -
'பார்க்கவன்!' எனும் -
பெயருடைய...

ஒரு -
குலாலன் வீட்டில் -
குடியேறினாள்; எவரொடும் -
குலாவும் குணமுடைய - அந்தக்
குயவன் நிழலில்...

நிச்சிந்தையாய் - சில
நாள்கள் இளைப்பாறினாள்!

'ஐயரா?' என -
ஐயம் வராதபடி -
ஐவரும் - அன்றாடம்
ஐயம் வாங்கி வந்தனர்;
உபாதானத்தை -
வழக்கம் போல் -
பெற்றவள் சொற்படி -
பகிர்ந்து உண்டனர்!

இன்னும் -
இரண்டு நாள்களே -
இருந்தன...

மன்னரெல்லாம் -
மோகித்துக் கிடக்க - மண
மாலையொடு திரௌபதி -
சுயம்வர
மண்டபத்தில் நடக்க!

பண்டி பண்டியாய் -

பண்டிகைக்கு வருவது போல் -
வேற்றூர் சனம் - பாஞ்சாலம்
வந்து இறங்கியது;
பார்த்துப் பார்த்து -
பிரமித்து -
உள்ளூர் சனம் - வியப்பில்
விழி கிறங்கியது!

சுற்றுவட்டத்து -
சிற்றரசு; அந்த -
சிற்றரசு தரும் - திறை
பெற்றரசு நடத்தும் -
மற்றரசு; அந்த -
மற்றரசு தரும் -
மானியத்தில் வாழும் -
வெற்றரசு...

என -
மூவகை அரசு - பாஞ்சாலத்தில்
முகாம் இட்டது; பவழமணித்
தேரை நிகர்த்த -
திரௌபதியின் அழகு -
ஆரை விட்டது!

துருபதன் - தன்
திருமகள் சுயம்வரத்தில்...

ஒரு -
தேர்வு நடக்கும் - எனத்
தெரிவித்திருந்தான்; அதில் -
ஆர் வெல்கிறாரோ -
அவர்க்கே மணமாலை - என
அறிவித்திருந்தான்!

'சிருஞ்சயன்!' எனும் -
சிரேஷ்டனுக்கு - முன்னம்
தேவர்கள் - பிரியமாய்த்
தந்தது...

கீர்த்திமிகு -
'கிந்துரம்!' எனும் -
பெயருடைய - பென்னம்
பெரிய வில்; அது -
திரித்த - எஃகுத்
தந்திகள் - நாணாக
அமையப் பெற்ற - ஓர்
அரிய வில்!

அதை -
அகங்கையால் பற்றி -
எடுப்பதற்கே வேண்டும் -
ஏழானைத் தெம்பு; எனவே -
அதில் - நாணேற்றி
அம்பைப் பொருத்த -
முயல்வதென்பது -
முயல் கொம்பு!

அந்த -
அந்தம் மிகுந்த வில்லை...

துருபதன் -
தருவித்து - ஒரு
திருநாள் பார்த்து - செம்மலர்
தூவிவைத்தான் - சுயம்வர
மண்டபத்தின் -
மையத்தில்;

'நம்மை - ஆரால்
நாணேற்றக் கூடும்?' என்று -
அந்த வில்லும் கிடந்தது -
ஐயத்தில்!

'வெல்லலாம்! வென்று -
விரலால் வருடலாம் -
திரௌபதி
மெல்லங்கம்!' என்று -
விழைந்த வேந்தர்க்கு - பின்பு
வில்லால்தான் வந்தது - பெரு
வில்லங்கம்!

வீதிகளில் -
உஞ்சவிருத்தி எடுத்தவாறு -

உலாவரும் போதெல்லாம்...

பாண்டவர் -
பாஞ்சாலியின் -
சுயம்வரம் பற்றிய -
சேதிகளை சேகரித்தனர்;
சேகரித்த சேதிகளை - தாயின்
செவிகளில் சேர்ப்பித்தனர்!

மண்டபத்தின் -
மையத்தில் வைத்திருக்கும்...
ஒரு -
வலிமையான - •
வில்லை எடுத்து - அதன்
இரும்புநாண் பூட்டி - அதில்
எரியம்பைத் தொடுத்து -

உயரே -
வளைய வளைய -
வரும் திகிரியின் -
துளையின் வழியே -
தென்படும் இலக்கை...

அற்று விழும்படி - ஒருவன்
அடிக்க வேண்டும்; அவனே -
பாஞ்சாலி திருக்கரத்தை -
பிடிக்க வேண்டும்!

பிள்ளைகள் -
பிரஸ்தாபித்த - இந்தப்
புதுமையான -
போட்டியைக் கேட்டு...

மாதா குந்தி -
மெல்ல சிந்தித்தாள்; பின் -
தனயர்கள் வெற்றிபெற -
தெய்வத்தை வந்தித்தாள்!

பாண்டவர் போல் -
பாஞ்சாலம் வந்திருந்தான்...
துரியோதனன் - தன்
தம்பியரோடு; கூடவே -
கர்ணன் சகுனி எனும் - இரு
கால் சோடு!

வில்லை வளைத்து - இலக்கை
வீழ்த்தி விட்டு - புருவமெனும்
வில்லை வளைத்தவளை -
உடனே
விவாகம் செய்யலாம் என்று...

சுயோதனனுக்கு -
சூடேற்றினான் - அவன்
தாய்மாமன்; சவடால் -
வாய்மாமன்!

அதை -
வழி மொழிந்தான் - துரியனின்
விளம்பர முரசு; அவன் -
அருளால் அரியணை ஏறிய -
அங்க தேசத்து அரசு!

துரியன் மனத்தில் -
திரௌபதி வனப்பு - தாபம்
தந்து போனது; அங்ஙனம் -
வனப்பு நெருப்பு -
வந்து போனதால் - அவன்
மனம்
வெந்து போனது!

சேவல் கூவினால் -
சுயம்வரத் திருவிழா;
எங்கும் ஜேஜேஎனக் கூட்டம்;
எள் தூவினால் எள்விழா!

முதல்நாள் -
முன்னிரவு வேளையில்...
ஒரு -
நேர்த்தியான -
நந்தவனத்தில்...

தன் -

விருந்தாய் வந்திருக்கும் -
வேந்தர்க்கு - துருபதன்
விருந்து வைத்தான்;
விருந்துக்கு முன் -
வன்பசி உண்டாக்கும் -
மருந்து வைத்தான்!

மருந்தும் விருந்தும் -
மாந்தினர் வேந்தர்;
வேடிக்கை பார்த்தனர் -
உள்ளூர் மாந்தர்!

கூத்தும் பாட்டும் - கைகள்
கோத்தன; குதுகலப் பூக்கள் -
புரவலர் முகங்களில் -
பூத்தன!

சேதி தேசத்து -
சக்கரவர்த்தி; மற்றொரு -
காலன் என்றிருக்கும் - சிசு
பாலன்;

மத்திர தேசத்து -
மாமன்னன்; மாபெரும் -
வில்லியன் என விளங்கும் -
சல்லியன்!

மகத தேசத்து -
மாண்புமிகு வேந்து; அறமறியா -
அந்தன் எனப்படும் - ஜரா
சந்தன்!

இங்ஙனம் -
எண்ணற்ற மன்னர் -
எழுந்தருளிய விருந்தில் -
கண்ணற்ற மன்னன் -
காதல் புதல்வன்...

துரியனும் இருந்தான்; தோழன் -
துணையொடு இருந்தான்;
கர்ணன் -
துணையில்லாமல்
துரியோதனன் -
தேவஅமிர்தமும் அருந்தான்!

கிழக்கு வெளுத்து - கைதட்டி
கதிரைக் கூப்பிட்டது; செங்
கதிரும் வந்து - மீதமுள்ள
கங்குலை சாப்பிட்டது!

வந்தது சுயம்வரம் -
விளங்கிடும் சுபதினம்!

அதிகாலையில் -
அரண்மனைத் தாதியர்...

தங்கக் குடங்களில் - துளசித்
தீர்த்தம் எடுத்து - இடையில்
தங்கக் குடங்களை - தாங்கும்
திங்களைக் குளிப்பாட்டினர்;

அதன்பின் ஈரம்
அறவே போக -
அகில் புகையில் -
திரௌபதியின்
முகில்நிகர் குழலை வாட்டினர்!

துப்புரவாய் - தலையைத்
துவட்டியபின்...
வேலைப்பாடுமிக்க - காசிநகர்
வண்ணப்பட் டாடையை -
விழியில்
வேலை வைத்திருக்கும் - இள
வஞ்சிக்கு உடுத்தினர்;
அதன்பின் - அநேக
ஆபரணங்களை அணிவித்து -
அவளை - அதிகமாய்
அழகு படுத்தினர்!

முத்துகள் மிளிரும் - மாணிக்க
நத்துகள்; இரு செவிப்
புழைகள் ஏற்கும் - மரகதக்

குழைகள்; அரசகுலப்
பெய்வளைகள் சூடும் – வயிரக்
கைவளைகள்; கொங்கைக்
குடங்கள் மேலுகளும் – கனக
வடங்கள்;

மற்றும் –
மேகலை; நூபுரம்...
என –
ஏந்திழைக்கு –
அணிவிக்கப்பட்ட –
அணிகள் ஆயிரம்! •

கூன்பிறை நெற்றியில் –
கஸ்தூரி திலகம்;
சங்குமணிக் கழுத்தில் –
சந்தனக் களபம்!

வஞ்சியின் –
வண்ண மேனியை...

வேர்க்க விடாமல் –
வெண்சாமரம் வீசினர்;
வாசனை திரவியங்களை –
வாரி வாரிப் பூசினர்!

அந்தப்புரத்தில் –
அனைத்துப் பெண்டிரும்...

பெண்ணரசி பாஞ்சாலியின் –
பேரழகை – விழிகளால்
சிறுகச் சிறுகப் பருகி –
செரிமானமின்றி இருக்கையில்...

திரௌபதியின் கன்னத்தில் –
திருஷ்டிப் பொட்டை
வைத்துவிட்டு –
ஒருத்தி மட்டும் – முக
வாட்டத்தோடு நின்றாள்;
இத்தகு மகளுக்கு –
எத்தகு மணாளன் –



வாய்ப்பானோ என்று –
வியாகுலம் கொண்டாள்!

அவள் –
திருநாமம் 'பிருஷிதி!' –
அவள்தான்



திரௌபதியின் தாய்; அடிக்கடி –
முகுந்தன் பெயர் சொல்லி –
முணுமுணுத்தது அவள் வாய்!

அரச –
மாளிகை நீங்கி – சுயம்வர
மண்டபம் நோக்கி...

பொன்னார் முகபடாம் சூடிய –
ஒரு
பெண்யானை மேலமர்ந்து –
புதுமணப்பெண் பாஞ்சாலி

புறப்பட்டாள்; சின்ன -
வாய்ச்சிரிப்பால் - சேடியரிடம்
விடை பெற்றாள்!

தங்கையின் முன்சென்றான் -
திருஷ்டத் துய்மன் - ஒரு
துரகம் மேலேறி; மின்னும் -
திருவாள் கையேந்தி!

மாதரசி பாஞ்சாலியை -
சுயம்வர
மண்டப வாசலில் நின்று...

வரவேற்றான் -
வாசுதேவன்; நான்கு -
வான் மறைகளும் -
பேசுதேவன்!

# திரௌபதி சுயம்வரம்

**சோ**பனம் மிகுந்த
சுயம்வர சபையில்...

அமர்ந்திருந்தான் -
அண்ணன் பலராமனோடு -
கண்ணன்; கனகாம்புஜக்
கண்ணன்!

அந்த -
மாதவர் இருவரின்
முதுகுப்புறம் - அனேக
யாதவர்!

வேதியர் வரிசையில் -
உட்கார்ந் திருந்தனர்...
பாண்டவர்;
பார்ப்பன வேடம் -
பூண்டவர்!

கண்ணபிரான் மட்டும் -
கண்டுகொண்டான்...
தன் -
அத்தையின் கன்றுகளை;
அருங்குணக் குன்றுகளை!

கெண்டையாய்;
கேழலாய்;
கூர்மமாய்;
கோளரியாய்;

குள்ளனாய்;
வில்லனாய்; தற்சமயம் -
வெண்ணெய் திருடிய -
கள்ளனாய்;

இப்படி -
எத்துணையோ உண்டு -
அவனே
ஏற்ற வேடம்! அவனுக்கா -
புரியாது - பஞ்சவர்
போட்ட வேடம்?

அஃதல்லால் -
ஆதி நாள் தொட்டு...
ஒவ்வொருவர்க்கும் - ஒவ்வோர்
ஒப்பனையிட்டு - அவனன்றோ
உலகுக்கு அனுப்புகிறான் -
உயிர்களை!
பசுவயல் அறியாதா - தன்
பால்மடியில் விளைந்த -
பல்வகை யான-
பயிர்களை?

'அதோ! ஐவர்!' என்று -
அடையாளம் காட்டினான்...

பிராதாவிடம் -
பரந்தாமன்;
பரவசப் பட்டான் -
பலராமன்!

துரியோதனனும் - அவன்
தம்பியரும் -
கர்ணனும் - காந்தாரி
கூடப்பிறந்த சகுனியும்..

அவரவர்க்குரிய -
ஆசனங்களில் -
அரசுகளின் வரிசையில் -
அமர்ந்திருந்தனர்;

சிற்றரசுகளும் -
பேரரசுகளும் - பாஞ்சாலியின்
சௌந்தரியத்தை நெஞ்சில்
சுமந்திருந்தனர்!

கம்பநாட் டாழ்வாரின் -
காவியத்தில் - இடம்பெற
எங்ஙனம் ஏங்குமோ - இன்தமிழ்
எழுத்துகள்...

அங்ஙனம் ஏங்கின -
அழகி பாஞ்சாலியின் -
கல்யாண மாலைக்கு -
காவலரின்
கழுத்துகள்!

ஆயினும் -
அவர்களை அச்சுறுத்தியது..

மணி -
மண்டபத்தின் -
நடுவில் - கிடந்த
நெடுவில்!

'அதை -
நேர்நிறுத்தி - இரும்பு
நாணேற்றி யல்லவோ -
இலக்கை -
அடிப்பதும் - திரௌபதியின்
வலக்கை -
பிடிப்பதும்...
சாத்திய மாகும்!
சாத்திய மானால்தானே -
பாஞ்சாலியின் அழகு - நமக்கு
பாத்திய மாகும்!'

இப்படி -
எண்ணி யெண்ணி -
பெருமூச்சு விட்டனர் -
பலர்; அச்சமயம் -
திருச்சபைக்குள் நுழைந்தது -
திரௌபதி என்னும் -
மனோரஞ்சித -
மலர்!

திருஷ்டத்துய்மன் -
திரௌபதியை
அழைத்துக்கொண்டு...
பெருஞ்சபையில் -
பிரவேசித்தான்;
புரவலர் மனஓட்டத்தை -
பார்வையாலே வாசித்தான்!

அங்கிருந்த -
ஆசை நெஞ்சங்கள்...

பாஞ்சால மன்னனை -
போற்றிக்கொண் டிருந்தன - ஒரு
மழை வில்லை -
மகளாகப் பெற்றதற்காக;
அதே -
ஆசை நெஞ்சங்கள்...

துருபதனை -

தூற்றிக்கொண் டிருந்தன - அம்
மழைவில்லைப் பெற - விலையாயொரு
மகாவில்லை வைத்ததற்காக!

மாலையும் கையுமாக - அந்த
மழைவில் - மணி
மண்டபத்தில் இடப்பெற்ற -
மணைமேல் நிற்க...

தமையன் -
திருஷ்டத்துய்மன் -
வந்தவர்க்கு -
வணக்கம் தந்தான்; பின்-
வில்லைப் பற்றி - சுருக்கமாக
விளக்கம் தந்தான்!

'வேந்தர் பெருமக்களே ! - இந்த
வில்லில் நாண் பூட்டி...

சுழலும் -
சக்கரத்தின் -
துவாரங்கள் வழியே -
தென்படும் இலக்கை...

ஆர் -
அஞ்சு அம்புகளை ஏவி - தன்
வில்லாற்றலால் - தரையில்
வீழ்த்துகிறானோ...

அந்த குணாளன் - என்
அனுஜையின் மணாளன்!'

நாட்டரசர்க்கு - இங்ஙனம்
நிபந்தனையைத் தெரிவித்தபின்...

திருஷ்டத்துய்மன் - தன்
தங்கையிடம் -

அவையிலிருக்கும் -
அரசர்களின் -
அருமை பெருமைகளை -
ஆதியோடந்தமாகக் கூறினான்;

பிறகு -
'போட்டியைத் தொடங்குக!'
என்று
புரவலர்களிடம் - வெகு
பரிவோடு கோரினான்!

வரிசை வரிசையாய் -
வந்தவ ரெலாம் தோற்று -
புரிசைமேல் பூனையாய் -
'போவதா? இருப்பதா?' என்று...

வெறிக்க வெறிக்க -
விழித்தனர்; ஆட்காட்டி -
விரலால் வியர்வையை -
வழித்தனர்!

இன்னும் சிலர் -
எழுந்துவந்த தோரணையில்-
ஏகசூரராய் இலகினர்; எஃகு -
நாண்கொண்ட வில்லை - பின்
நிமிர்த்தவும் முடியாமல் -
நாண்கொண்டு விலகினர்!

வில்லை வளைக்க -
வக்கில்லாதாரை - சிறு
புல்லைப் பார்ப்பதுபோல் -
பார்த்துவிட்டு...

சேதிதேசத்து அரசன் -
சிசுபாலன் - ஒரு
சிறுத்தைபோல் -
சீறிக்கொண்டு சென்றான்; சிலையை -
வளைத்து நாணேற்ற - இன்னும்
உளுந்தளவே மிச்சமிருக்க -
நாண் நழுவி நெஞ்சில் அடித்து -
நிலைகுலைந்து நின்றான்!

சிலர் திகைத்தனர்;
சிலர் நகைத்தனர்!

ஒரு -

கூச்சு – அவன்
குடுமி முதல் குதிகால் வரை –
நீச்சு இட – மேனி
வீச்சு கெட...

அவமானம் தாளாது –
சிசுபாலன்
அரைக்கணம் அலைபாய்ந்தான் –
தலைகுனி வோடு; பின் –
திரும்பினான் நாடு!

அவனுக்குப்பின் –
அட்டகாசமாக – '
இடக்கை நடுவிரலால் –
இடதுமீசையை நீவிக்கொண்டு...

ஜராசந்தன் வந்தான்; அவன் –
ஜகம்புகழும் ஆண்!
பற்றினான் வில்லை; பற்றிப் –
பூட்டமுயன்றான் நாண்!

பூட்டுவதற்கு – கடுகளவே
பாக்கி யிருக்கையில் –
வளைந்தவில் நிமிர்ந்து – அவன்
விலாவில் தாக்கி வீழ்த்தியது;

ஆனானப்பட்ட ஜராசந்தனே–
அடிபட்டு வீழ்ந்தது –
ஆச்சரியத்தில் –
அனைவரையும் ஆழ்த்தியது!

ஜன்னி கண்டாற்போல் –
ஜில்லிட்டுப் போனது –
ஜராசந்தன் மேனி;
வென்றியன்றி – வாழ்வில்
வேறெதும் காணாதவன் –
நின்றான்
குன்றிக் குறுகிக் கூனி!

பிறகு –
புகழ்சால் –

வில்லியன் என – வையம்
விரித்துப் பேசும் –
சல்லியன் வந்தான்; அவனும் –
சாதிக்க முடியாமல் வெந்தான்!

ஆக மொத்தம் –
அந்த வில்...

வீரர் பலரை –
விழுத்தியது;

அவமானச் சகதியில் –
அழுத்தியது!

தொடர்ந்து – இத்தகு
தோல்வி நாடகம் நீடித்தது;
துருபதன் மனத்தை – ஒருவித
துக்கிதம் பீடித்தது!

அப்போது –
ஆர்த்தெழுந்தான்...

தருக்கும் செருக்கும் –
தலைகொள்ளாமல் –
இருக்கும் துரியன் ; அரச
வருக்கம் அனைத்தையும் – அடி
வருடியாய் நினைத்து – புருவம்
சுருக்கும் சிறியன்!

கனகக்
காப்பிட்டு நிற்கும் பாஞ்சாலியை –
கண்களால் கொஞ்சம் –
சாப்பிட்டுவிட்டு – துரியன்
சபை நடுவே சென்றான்;

தரையில் கிடக்கும் –
தனுவை எடுத்து – தோள்
வரையில் சாத்தி – மார்பு
விடைத்திட நின்றான்!

பின் –
சுற்றுமுற்றும் பார்த்து – ஒரு

சிறுநகையை எறிந்துவிட்டு -
சற்றும் -
சிரம மின்றி..

இரும்பு நாணை -
இழுத்துப் பூட்டலானான்; இனி -
எள்ளளவே இருக்கையில் - வில்
எதிர்த் தடிக்க...

மலைகுப்புற -
மண்ணில் விழுந்தாற்போல் -
தலைகுப்புற -
தரையில் விழுந்து -

பொறிகலங்கி - மானம்
போனதென்று புழுங்கிப்
போனான்!

துரியோதனனுக்கு நேர்ந்த -
தோல்வி பொறுக்காது - ஏழ்
பரியோனுக்குப் பிறந்த -
புதல்வன் கர்ணன்...

எரியவிழித்து -
எழுந்தான் இருக்கைவிட்டு;
எடுத்தான் வில்லை - மிக
எளிதாய் இடக்கை தொட்டு!

எஃகுநாணை-
இழுத்தான் பூட்ட; மயிரிழை -
அளவில் தோற்றான்;
அத்தோல்வி -
அவனுக்கே வியப்பூட்ட!

'கர்ணனே தோற்றான்!' என்று -
கலங்கியது வேந்தர்குலம்;

துருபதன் திருமுகத்தில் -
தோன்றியது வியாகுலம்!

ஆரும் எதிர்பாராது -
அத் தருணத்தில்...

அந்தணர் வரிசையில் -
அந்தணர் வேடத்தில் -
அமர்ந்திருந்த -
அர்ச்சுனன்...

'விருட்'டென எழுந்து -
வில்லருகே சென்றான்;
திரௌபதியின் தமையன் -
திருஷ்டத்துய்மனிடம்...

'இந்த -
வில்லை நாணேற்ற -
வேதியர்க்கு -
வாய்ப்பு உண்டா?' என -
வினவி நின்றான்!

திருஷ்டத்துய்மன் - சற்று
திகைத்து முறைத்தான்; பின் -
திடமனத்தோடு -
தீர்மானமாக உரைத்தான்!

'மேல் வருணம்;
கீழ் வருணம்; என -
நால் வருணம் -
நான்பார்ப்ப தில்லை;
எவராயினும் - நாணேற்ற
எடுக்கலாம் வில்லை;
வென்றால் மாலையிடுவாள் -
என்
உடன்பிறந்த முல்லை;
வான் மாறினும் வளிமாறினும்
நான் மாற்றமாட்டேன்
சொல்லை!'

வில்லில் வல்ல -
விஜயன்..

கருத்தில் கண்ணபிரானை -
இருத்தினான்; இரும்பு -
நாணை இழுத்து - வில்லில்
நொடியில் ஏற்றி -

பாணம் ஐந்தைப்
பொருத்தினான்!

ஒன்றன்பின் –
ஒன்றாக ஏவி –
சுழலும் சக்கரத்தின் –
சந்துகள் வழியே தென்பட்ட...

இலக்கை –
இலகுவாக அடிக்க – அது
மண்ணில் விழுந்தது: கரகோஷம் –
மண்டபம் அதிர எழுந்தது!

மட்டற்ற மகிழ்ச்சியில்...
மன நெகிழ்ச்சியில்...

திரௌபதி –
திருமேனி
வேர்த்தாள்; பூமாலையை –
தனஞ்சயன் –
திருத்தோளில் சேர்த்தாள்!

'சத்திரியர்களுக் கான –
சுயம்வரச் சடங்கில் – ஒரு
பார்ப்பனன் எப்படி –
பங்கு பற்றலாம்?' என...

சபையில் –
சலசலவென –
சத்தம் எழுந்தது; உடனே –
யுத்தம் எழுந்தது!

---

# அன்னையின் ஆணை!

'ஒரு
பார்ப்பனன் வென்றுவிட்டான்
பந்தயத்தில் என்று – அவனைத்
தீர்ப்பதில் அர்த்தமில்லை;
தீர்த்தால் நேரும் – பிரமஹத்தி
தோஷம் என்னும்
தீராத பெருந்தொல்லை!

நாம் –
கண்டிக்கத் தக்கவன்;
தண்டிக்கத் தக்கவன்; தலை –
துண்டிக்கத் தக்கவன்; அந்த –
துருபதன்! அவன்தான் –
சபைநடுவே நிறுத்தி – நம்
சௌரியத்தை சோதித்து –
மாண்பை
சிதைத்துப் போட்ட –
சிறுமகன்!'

என்று –
ஏகோபித்த முடிவெடுத்து...
காவலர் யாவரும் –
காய்ந்தனர்;
பாஞ்சாலன் மீது –
பாய்ந்தனர்!

விஜயன் தடுத்தான்;
வில்லை எடுத்தான்; அதில்
வாளியைத் தொடுத்தான்;
அதற்கு–
வேலையைக் கொடுத்தான்!

அது –
அனேகம் பேரை...
தைத்தது; தசையைப்
பிய்த்தது; துளையிட்டு –
வெங்குருதி வெள்ளம்பீய்ச்ச –

வைத்தது; ஈ எறும்பு -
மொய்த்தது!

எதிரிகள் -
உதிரிகள் ஆயினர்;
அர்ச்சுனன் -
அம்புகளின் -
அடிதாங்க மாட்டாது...
இடுப்பு அணிந்த -
உடுப்பு அவிழ்ந்து -
இழிய இழிய ஓடிப்போயினர்!

'புல்லெடுத்து -
புரோகிதம் புரிவோர் -
வில்லெடுத்து -
வெஞ்சமர் புரிந்தால்...
கொல்லலாம் அவரை -
கொடுவாள் கொண்டு;
குலாசாரம் -
குலைத்தவர் என்று!'
எனக்கூறி -
எகிறிப் பாய்ந்தான்...
துரியோதனன் -
தருமனின் மீது;

'எதிரி -
ஏழை அந்தணன்தானே!'
என -
அற்பமாயெண்ணி -
அலட்சியமாய் -
அமர் செய்த -
அந்தகன் மகனை...
உதிஷ்டிரன் -
உலுக்கி உலுக்கி -
உதிர்த்தான் மண்ணில் - எழுந்து
உட்கார வொண்ணாது!

'இவன் -
வேதியனா? வேறு -
சாதியனா?' என -

துரியோதனன் - ஒரு
துளிப்பொழுது -
திகைத்து நின்றான்; பின் -
தேரேறிச் சென்றான்!

தூரியன் சென்றதும் - அவன்
தோழன் கர்ணன்
வெறியன் ஆகி -
விஜயனைத் தாக்கினான்;
தாக்கியவனை -
திருப்பித் தாக்கி -
அர்ச்சுனன் - அவன்
ஆத்திரத்தை ஊக்கினான்!

இருவருக்கும் -
இடையே...
ஆக்கிரகமான - ஓர்
அம்புச்சண்டை - மிக
நீளமாக நடந்தது;
நேரம் கடந்தது!

நேருக்கு -
நேராக...
சரங்கள் -
சந்தித்து...
மூக்கொடு மூக்கு -
முட்டி - முனைகள்
முறிந்து போயின;
மூளிகள் ஆயின!

'அர்ச்சுனன் -
அல்லாது - வேறெவனும்
என்முன் -
எடுக்கமாட்டான் வில்லை;
விஜயனோ - இப்போது
உயிருடன் இல்லை!
பின் - யாரிந்த
பிராமணன்? என்னையே -
பின்னடையச் செய்யும் -
பிரவீணன்?' என்று...

கர்ணன் யோசிக்கையில் –
அவன்
கை வில் –
பார்த்தன் –
பாணத்தால் ஒடிந்தது;
போரும் – அந்தப்
பொழுதோடு முடிந்தது!
கர்ணன் தோற்றான்;
தோல்வியை –
கௌரவமாக ஏற்றான்!

பிறிதோர் இடத்தில் –
பீமன் – தன்னுடன்
சண்டைக்கு வந்த –
சல்லியனை – தாறுமாறாக
சாடினான்; சல்லியன் –
வெய்துயிர்த்து விழிபிதுங்கி –
வாடினான்!

தருமன் –
சாடை காட்டியதால் – அவனை
சாகடிக்காது விட்டான்...
ஏமன்போல் –
எதிரியின் உயிர் உறிஞ்சும் –
பீமன்; ஏனெனில் –
சல்லியன் – நகுல
சகாதேவர்களின் – தாய்
மாமன்!

களேபரம் – ஓய்ந்த
கையோடு...
பாஞ்சாலியுடன் –
பாண்டவர் ஐவரும் –
பெற்ற தாயை –
பார்க்கச் சென்றனர்;

'அம்மா! ஓர் –
அரிய பிச்சையை –
ஏற்று வந்திருக்கிறோம் –
இன்று!' என்று...

வேடிக்கையாகச் சொல்லி –
வாசலிலேயே நின்றனர்!

பிரதிதினமும் –
பிட்சைக்குச் சென்று –
பிள்ளைகள் திரும்பும் –
பழக்கத்தில்...

'பெற்ற பிச்சையை – ஐவரும்
பகிர்ந்து உண்ணுங்கள்!' என்று –
குந்தி –
குரல் தந்தாள்;
பிறகுதான்...
பிச்சையாக வந்தது –
பாஞ்சாலி எனும் –
பச்சைக்கிளி என்றறிந்து...

வெலவெலத்து – மனம்
வேதனையில் வெந்தாள்!

தனயர்கள் –
தாயைத் தேற்றினர்;

'அம்மா!
அஞ்சவேண்டாம்! உன் –
சொல்தான் – வேத
சாரம்; இனி –
திரௌபதி – ஐவர்க்கும்
தாரம்!'
என்று –
இயம்பி...
அன்னையின் –
அவலத்தை மாற்றினர்!

அதே நேரத்தில் –
அரண்மனையில் துருபதன்...
தனக்குத்
தானே –
பொருள் புரியாமல் –
புலம்பிக்கொண்டிருந்தான்;
தன்னைத்

தானே –
ஆறாய்ப் பெருகிய
வேர்வையால் –
அலம்பிக்கொண்டிருந்தான்!

'பார்த்தன் வருவான்;
பந்தயம் வெல்வான்;
பொன்னில் –
வார்த்த என் மகளை – தன்
வீடுகொண்டு செல்வான்!

என –
எதிர்பார்த்துக் கிடந்தேனே;
எவனோ அந்தணன் –
எடுத்துப் போகவா – ஓம
குண்டத்தில் விளைந்தது –
'கிருஷ்ணை'யெனும் குடந்தேனே?

எந்த –
வர்ணத்தைச் சார்ந்தவனும் –
வெற்றி பெற்றால் – எங்கள்
சொர்ணத்தை மணக்கலாம் –
என
சொன்னானே...

என் –
தனயன் –
திருஷ்டத்துய்மன்...
அவன் – ஓர்
அதிகப்பிரசங்கி;
அவசரக்குடுக்கை! அவன் –
அப்படிச் சொல்லப்போய்தான் –
அந்தணனைச் சேர்ந்தது –
அர்ச்சுனன் படுக்கை!

மானம் –
மரியாதை – எல்லாம்
வானம் சென்றது – மகன்
வார்த்தையை விட்டதால்;
அவன் –
வார்த்தையை விடும்படி –
வந்தது சூழ்நிலை –
முயன்ற மன்னரெலாம் –
மூக்கறுபட்டதால்!

தொடக்கத்தில் – பலர்
தொடை தட்டினர்; தனுவை –
எளிதாக மனத்துள் –
எடை கட்டினர்; பிறகு –
கையறு நிலையில் –
கடை கட்டினர்; சொந்த
நாட்டிற்கே – திரும்ப
நடை கட்டினர்!

இந்த வேளையில் – ஓர்
எளிய பிராமணன்...

களம் இறங்குவான் – எனக்
கண்டானா என் மகன்?
புலிக்கறி உண்போர் – தோற்றுப்
புறம் நிற்க – புகுந்தானே
புளிக்கறி உண்ணுகின்ற –
பார்ப்பனன் என்பவன்!

ஒருவேளை – அந்த
வேதிய வாலிபன்...
பரசுராமனின் –
பாரம்பரியமோ?
துரோணாசாரியின் –
தௌகித்திரனோ?
கிருபாசாரியின் –
கிட்டத்து பந்துவோ?

மேற்படி –
மூவர்தான்...
விப்பிரர்களில் –
வில்லாற்றல் மிக்கவர்;
வேந்தர்களே –
வழிபடத் தக்கவர்!

ம்!

அவன் –
எவனாயிருந்தா லென்ன?
என் மகளின்...

மாலை – அவன்
மார்பில்; என் செய்ய?
வெற்றிபெறவில்லையே – எவரும்
வேந்தர் சார்பில்!'

இத்தகு எண்ணங்களின் –
இறுக்கத்தால்...

இரவு பூராவும் –
இரவு போலவே –
துருபதனும் –
தூங்காதிருந்தான்; தன்மகள் –
திரௌபதியின் பிரிவை –
தாங்காதிருந்தான்;
வந்து வந்து –
வீசிய காற்றைக்கூட –
உடம்பில் –
வாங்காதிருந்தான்;
நிகழ்ந்த –
நிகழ்வுகளின் நெடி –
நீங்காதிருந்தான்!
விடிந்த பிறகும் –
விழித்த படியே –
அமளியில் –
அமர்ந்து இருக்கையில்...

மருமகன் என்று – தன்
மனம் விரும்பிய – பாண்டுவின்
திருமகன் வாய்க்காமல் –
திடீரென்று – யாரோ
ஒருமகன் வந்து – மகளின்
உடையவன் ஆனதில் – அந்தப்
பெருமகன் மனது – உதிரப்
பெருக்கில் குளிக்கையில்...
தனயன் –
திருஷ்டத்துய்மன் வந்தான்;
தாதை மனங்குளிர – சில
தகவல்களைத் தந்தான்!

'எந்தையே!
எவராலும்...
ஏற்றமுடியாத எஃகுநாணை –
ஏற்றியவன்;
ஆராலும் ஆகாத
அருஞ்செயலை –
ஆற்றியவன்;
இலகுவாய் –
இலக்கை அடித்தவன்; என் –
இளையவளின் –
வலக்கை பிடித்தவன்;

பாண்டவரில் ஒருவனான –
பார்த்தன்தான்! பிதாவே!
பல நாள் நீங்கள் – எதிர்
பார்த்தவன்தான்!

நானே –
நேற்றிரவு –
வேவுபார்க்க – அவர்கள்
உடன் சென்றேன்; யாரோ –
பார்ப்பனரல்ல; ஐவரும் –
பாண்டவர்கள் என்பதை –
பையப்பையப் புரிந்து கொண்டு –
பிரமித்து நின்றேன்!

ஊருக்கு வெளியே –
ஒதுக்குப் புறமாக...

ஒரு –
குலாலன் வீட்டில் – அன்னை
குந்தியோடு வசிக்கின்றனர்;
திருவீதியில் பிட்சை பெற்று –
தினப்படி புசிக்கின்றனர்!'

இந்த –
இனிய தகவலைக் கேட்டதும்...

ஒரு -
சிறுவன் போல் -
துருபதன் -
துள்ளினான்;
கனவா? நனவா? எனக் -
கண்டறிய - தன்
கைவிரலால் - தன்னையே
கிள்ளினான்!

பின் அரண்மனைப்
புரோகிதரை அனுப்பி...
குந்தியையும் - அவளது
குமாரர்களையும் - தேரில்
கூட்டிவரச் செய்தான்;
சாங்கோபாங்கமாக -
சம்பந்தி விருந்தளித்து...

உதிஷ்டிரன் வாயிலிருந்தே -
உண்மையைக் கொய்தான்!

இனியும் -
மறைப்பதற்கு - ஒரு
முகாந்தரம் இல்லையென்று...

தானும் - தன்
தாயும் தம்பியரும் -
இன்னார் -
இன்னாரென்று...

தருமபுத்திரன்
துருபதனிடம் கூறினான்;

பின் -
பாஞ்சாலியை...

அன்னையின் -
ஆணைப்படி -
அஞ்சுபேரும் மணக்க -
அனுமதி கோரினான்!

தருமன் பேச்சை -
துருபதன் வெறுத்தான்; அவன் -
வேண்டுகோளை -
உறுதியாக மறுத்தான்!

---

# திருக்கல்யாணம்

'தருமபுத்திரனே!
தலைசிறந்த நரனே!

தனயனுக்கு -
தெய்வமாய் தாயிருக்கலாம்;
நீயுரைத்த நிபந்தனை - உனது
தாயுரைத்த தாயிருக்கலாம்!

எனக்கது -
ஏற்புடைய தாயில்லை;
ஏனெனில் - எந்த
ஏட்டிலும் பாட்டிலும்...

தன் -
ஓரைந்து மகன்களிடம் -
ஒருத்தியையே மணக்குமாறு -
உரைத்த தாயில்லை;
உலக வழக்கிலும் -
ஒருதாய் - அங்ஙனம்
உரைத்த தாயில்லை!

பெற்றவள் -
பேச்சைக் கேட்டு -
பிள்ளைகள் -
பகிர்ந் துண்ணலாம்...

தின்னக் கிடைத்த - ஒரு
தின்பண்டத்தை! அவ்வாறு -

உண்பதுண்டோ – ஒரு
பெண் பண்டத்தை?

தாரமும் – பல
காரமும் ஒன்றா? இதில் –
தாய்சொல் –
தட்டமாட்டேன் எனல் நன்றா?

உதிஷ்டிரனே? புகழ் –
உதிராதவனே!

நீ –
திங்கள் வம்சம்;
தருமத்தின் அம்சம்;
தருமமே தருமத்தை –
செயுமோ துவம்சம்?

ஒருவனுக்கு –
ஒன்றுக்கு மேற்பட்ட –
தாரங்கள் இருப்பதை –
தருமநூல் ஒப்புகின்றன;

ஒருத்திக்கு –
ஒன்றுக்கு மேற்பட்ட –
புருஷர்கள் இருப்பதை – அவை
பொருந்தாதென செப்புகின்றன!

நீர் கொள்ளலாம் –
ஐந்து புணைகளை;
நிலம் கொள்ளலாம் –
ஐந்து திணைகளை;
வில் கொள்ளலாம் –
ஐந்து கணைகளை;
இல் கொள்ளுமோ –
ஐந்து துணைகளை?
கொண்டதாய் –
கண்டதில்லை;

பசுமாடு –
புலால் உண்டதில்லை!'

தன் –
புதல்வியின் குழலில் – ஐவர்
பூமுடிப்பதை ஆட்சேபித்தான் –
பாஞ்சால முதல்வன்; ஏதும் –
பதற்றமின்றி – அவனுக்குப்
பைய விளக்கினான் –
பாண்டுவின் புதல்வன்!

'அரசே!
அறம்எனப் படுவது...

மிக –
நுண்மை யானது; ஆனால் –
உண்மை யானது!

சகல –
சாஸ்திரங்களிலும் –
பிராக்கியர்களாய் –
பிறங்கும்...

தபோதனர்க்குக் கூட – சில
தருணங்களில் –
தென்படாது போகும் –
தர்மசூட்சுமம்; எதைத் –
தள்ளுவது – எதைத்
தாங்குவது – எனத்
தவிக்க நேரும்; அதன் பேர்தான் –
தர்மசங்கடம்!

நான் –
அறவழி அகன்று –
பிறவழி செல்லாதவன்;
கனவுகளில் கூட –
கட்டுரை சொல்லாதவன்;
வாய்மையைத் தவிர –
ஒருநாளும்
வேறெதும் கல்லாதவன்; தரும –
விருட்சத்தின் வேரை – எத்தகு
வாழ்வுவரினும் கல்லாதவன்!
எனினும் –

எனக்கு என் -
தாய்ச் சொல் -
தருமத்தின் -
வாய்ச் சொல்!

அதை -
மீறமாட்டேன்; அப்படி -
மீறும் அளவு - புத்தி
மாறமாட்டேன்!

அரசே!
அன்னை என்பவள் -
ஆடை கட்டிய -
அறம்;

தாள்கொண்டு -
தரை நடக்கும் -
தவம்;

மறைகளுக் கெல்லாம் -
மேலான -
மறை;

என்பு தோல் போர்த்து -
எதிர் நிற்கும் -
இறை!

அன்னைதான் -
அசல்;

ஆலயத்துள் -
அமர்ந்திருப்பது -
அவளது நகல்!

ஆதலால் -
அத்தகு தாய் சொன்னால்...

அந்த -
சொல்லே - தர்ம
சாஸ்திர மாகிறது; அதைப்
பின்பற்றியே - எங்கள்
புத்தியும் போகிறது!

'தாய் சொன்னது -
தவறா? சரியா?' என -
தனயன் செய்வதுண்டு -
தருக்கம்; அங்ஙனம் -
தருக்கிப்பவன் - தானெனத்
தருக்கும் வருக்கம்!

ஓர் -
அகம் பாவம் செய்ய -
அடிப்படை -
அகம்பாவம்;
அது எங்களுக் கில்லை; நாங்கள்
அன்னைக்கு அடங்கிய பிள்ளை!

எது -
எங்கள் கைக்கு வந்ததோ -
அது - எங்கள்
அஞ்சு பேர்க்கும் பொது;
அன்னை சொன்னது இது!

அவள் வாக்கு -
வேத வாக்கு; ஏனெனில் -
அவள் நாக்கு -
வேத நாக்கு!'

உதிஷ்டிரன் - இங்ஙனம்
உரைத்தது - திருஷ்டத்துய்மன்
உள்ளத்தில் - ஊசிமிளகாயாய்
உறைத்தது!

'தருமனே!
தம்பியின் மனைவியை - ஒருவன்
தழுவுவதற்கு - அவனது தாயே
தருவாளா ஒப்பிதம்?

அங்ஙனம் தந்திருந்தால் -
அந்தத் தாய்...

ஏன் சொன்னாள்?
எது குறித்துச் சொன்னாள்?
எந்தச் சூழலில் சொன்னாள்?

என்றெல்லாம்...
ஆராயாது - அப்படியே
அனுசரித்தல் தப்பிதம்!

விவேகியே!
விலங்கையும் மனிதனையும் -
வித்தியாசப் படுத்துவது -
உறவு முறை பற்றிய -
உணர்வு;

அந்த
உணர்வு இல்லாத -
ஒரே காரணத்தால்தான்...

பறவை; கறவை - தன்
உறவை ஓராது - பரஸ்பரம்
பேணுகின்றன -
புணர்வு!

மனித -
மனங்களின் -

வக்கிரத்தை -
உத்தேசித்துதான்...

உறவின் அடிப்படையில் -
வகுக்கப் பட்டிருக்கிறது -



விரகத்திற் கான –
வடிகால்; அப்படி –

வகுக்கப்பட வில்லையெனில் –
விலங்கும் மனிதனும் கூட –
உறவுகொள்ள நேர்ந்திருக்கும் –
ஒருகால்!

எது –
எப்படியிருப்பினும்...

எனது –
தங்கை –

திரௌபதியை – ஐவர்
திருமணம் செய்துகொள்ள –
தலையாட்டாது என்மனம்; நான் –
தரவொண்ணாது சம்மதம்!'
திருஷ்டத்துய்மன் திடமாக
மறுத்ததும் –
திரும்பப் பேசினான் –
தருமன்...

பிராசீன ஏடு – காட்டும்
பிரமாணங்க ளோடு!

'திருஷ்டத் துய்மனே!



திரெளபதியின் தமையனே!

சில –
திருஷ்டாந்தங்கள் உண்டு –
தொன்மை ஏடுகளில் இன்று;
பல –
புருஷர்க்கு ஒரு பெண்மணி –
பாரியையா யிருந்தாள் என்று!

'வார்ஷி!' எனும் –
வஞ்சி யொருத்தி –

பூ முடித்து –
புக்ககம் போனாள்;

'பிரசேதசு!' எனும் – ஒரே
பெயர் கொண்ட –
பத்து சோதரர்க்கு – அவள்
பத்தினி யானாள்!

சப்த ரிஷிகளின் –
சகதர்மிணியாகி – ஒருத்தி
சேர்ந்தாள் தவக் குடிலை; அந்த –
சேயிழையாள் பெயர் 'ஜடிலை!'

இத்தகு –
இல்லறங்களுக் கெல்லாம் –
இருந்திருக்க வேண்டும்...

அடிப்படையில் – ஓர்
அறம்; இல்லையேல் –
பெரியோர் தள்ளியிருப்பர் –
புறம்!

பெரியோர்க்கெலாம் மேலான
பெருமை பெற்றவள் – எங்கள்
தாய்;
தருமத்திற்குப் புறம்பானதை –
தெரிவித்திருக்காது – அவளது
திருவாய்!'

துருபதனிடமும் –
திருஷ்டத்துய்மனிடமும் –

பிரமாணங்களோடு – தரும
புத்திரன் இங்ஙனம் –
பேசிக்கொண் டிருக்கையில்...

தற்செயலாய் – அங்கு
தோன்றினார் – வேத
வியாசர்! ஞான –
விநாயகனின் நேசர்!
அன்றாடம் –
அக்கினி வளர்த்து...

அமரர்க்கு –
அவிசு அளிக்கும் –
அறவோனை – ஒரு
தவிசு மீது அமர்த்தி...

பாஞ்சாலனும் பஞ்சவரும் –
பாதபூஜை புரிந்து – அந்தப்
புனித தீர்த்தம் உண்டனர்;
புரோட்சித்துக் கொண்டனர்!

துருபதன் –
தன் பிரச்சினைக்கு – ஒரு
தீர்வை...

வியாசரிடம் பெற எண்ணினான்;
விஞ்ஞாபனம் பண்ணினான்!

'மகரிஷியே! என் –
மகளை...
மகாயக்ஞத்தில் –
மொட்டவிழ்ந்த மனோரஞ்சித
மலரை...
விஜயன் என்னும்
ஒரே பதியை –
தழுவப் பிறந்த –
திரெளபதியை...

*பாண்டவர் ஐவருமே –*
*பத்தினியாய்க் கொள்ள –*
*வேண்டுகின்றனர்; அந்த –*
*வேண்டுகோள் மூலம் – மரபுகள்*
*விதித்திருக்கும் வரம்பை –*
*தாண்டுகின்றனர்!*

*நடக்கிறது –*
*விவாதம்;*
*நடக்கவில்லை –*
*விவாகம்;*
*தாங்கள்தான் –*
*தயை கூர்ந்து –*
*உதவ வேண்டும் – ஓர்*
*உபாயம்!'*

*வேந்தன் துருபதனின் –*
*விஞ்ஞாபனத்தை ஏற்று –*
*வியாச முனிவர்...*

*அவனை – தனியே*
*அழைத்துப் போனார்; சில –*
*விவரங்களை – அவனுக்கு*
*விளக்க லானார்!*

*'துருபதா! உன் –*
*தனயை – ஐவரின்*
*தாரமாய் ஆவது –*
*தவிர்க்க முடியாதது; முனம் –*
*அஞ்செழுத் தண்ணல் –*
*அவள்முன் தோன்றி –*
*அருளிய வரத்தால் –*
*அது முடிவானது!*

*வேந்தே!*
*உன்னுடைய –*

*புத்திரி –*
*பூர்வ ஜன்மத்தில் –*

*நளாயினி எனும் –*

*நங்கையர்க் கரசியாய் –*
*உதித்தவள்; தினம் –*
*உதிக்கும் கதிரையே –*
*'உதிக்காதே!' என –*
*விதித்தவள்!'*

*இவ்வாறு -*
*இயம்பி...*
*துருபதனுக்கு ஞான*
*திருஷ்டியை –*

*வியாசர் –*
*வழங்கினார்;*
*அவன் –*
*அனைத்தையும் அறிந்து –*
*விவாகத்திற்கு –*
*ஒப்புதல் வழங்கினான்!*

*'தெளமியர்' என்னும் –*
*திருநாமம் கொண்ட –*
*மகா முனிவர் –*
*முன்னின்று நடத்தினார்...*

*திரௌபதியின் –*
*திருக்கல் யாணத்தை; அவள் –*
*திருக்கண் தீயாய்ச் சிவந்து –*
*தெரிவித்தது நாணத்தை!*

*ஒவ்வொரு நாள் –*
*ஒவ்வொருவராக...*

*வரிசையில் ஐந்து –*
*வீரரும் வந்து...*

*இட்டனர் தோளில் –*
*இருவாட்சி சரத்தை; பின் –*
*பற்றினர் தேவியின் –*
*பனிப்பூங் கரத்தை!*

# பாகப்பிரிவினை

'பஞ்ச –
பாண்டவர் – இனி
மாண்டவர் அல்ல; அவர்கள் –
அரக்குமாளிகை –
அடிமண்ணை –
கீண்டவர்; அக்கினியில்
மாட்டாமல் – சுரங்க
மார்க்கமாய் –
மீண்டவர்; பிறகு –
ஆரும் அறியாது –
அந்தண வேடம் –
பூண்டவர்; தற்போது –
துருபதன் –
மருமகன்களாகி –
நலமும் வளமும் –
நீண்டவர்; அங்ஙனம் –
ஐவரை ஒருத்தி –
மணக்கக் காரணம் – ஆவேசத்
தாண்டவர்; வெண்ணிலா –
விள்ளலை; விடநாகத்தை –
விரிசடையில் ஏற்றிருக்கும் –
ஆண்டவர்!'

பரவலாய் –
பரவசமாய் –
பரபரப்பாய்...

பாஞ்சாலம் முழுதும் – இவ்வாறு
பேசப்பட்ட முக்கிய சேதியை...

பட்சியோ;
பனிக்காற்றோ;
இட்சிணியோ;
ஈரமேகமோ;

ஏதோ ஒன்று –
எடுத்து வந்து...
அத்தினபுரத்தின் – தெரு
மத்தியில் போட்டது; தரும –
புத்திரரும் பிறரும் – உயிர்
பிழைத்திருப்பதை அறிந்து...

ஊரடித்த –
உற்சாகக் கொட்டம் –
விசும்பு தாண்டி –
வியனுலகில் கேட்டது !

ஆனால்...
அந்தணர் வேடத்தில் வந்து –
பாஞ்சாலியை மணந்தது –
பாண்டவர் என்றறிந்ததும்...

துரியோதனன் –
துக்க சாகரத்தில் –
'தொப்'பென விழுந்தான்; தம்பி –
துச்சாதனன்; தோழன்;
தாய்மாமன் – இவரெலாம்
தூக்கிவிட்டபின் எழுந்தான்!

'பஞ்ச –
பாண்டவர்களின் –
வாழ் வெனும் –
வாக்கியத்திற்கு...
முற்றுப்புள்ளி வைக்காது –
முட்டாள் புரோசனன் –
கால்புள்ளி வைத்துவிட்ட –
காரணத்தால்...
தப்பிவிட்டன –
பெரும்புள்ளிகள்; முகத்தில்
அப்பிவிட்டன –
கரும்புள்ளிகள்!'
என்று – துரியோதனன்
எரிந்தான்; இருக்கையில் –

இருப்புக் கொள்ளாது - எழுந்து
இங்குமங்கும் திரிந்தான்!

அச்சன் அனைய -
அண்ணனிடம் - கடைந்தெடுத்த
துச்சன் அனைய -
துச்சாதனன் பேசினான்;
அண்ணனின் -
ஆத்திரத் தீ -
அதிகம் எரிய -
ஆலவட்டம் வீசினான்!

'அண்ணனே! நாம் -
அரசியல் நடத்த -
அருகதை யற்ற -
அசடர்கள்;
புரோசனனும் -
பிறரும்...

நம்மை -
நம்பவைத்து -
கழுத் தறுத்துவிட்ட -
கசடர்கள்!

ஒரு
வீட்டைக் கொளுத்த -
வக்கற்ற மக்கை - நாம்
அறிவு கொளுத்தும் -
அமைச்சனாக வைத்திருந்தது...

தப்புக் கெல்லாம் -
தப்பான - மிகப்பெரிய
தப்பு; அப்படியொரு -
தப்புச் செய்தபின் - ஐவரை
தப்பவிட்டது தப்பு - என்பது
தப்பு; தாளத்தை -
தப்புத் தப்பாய் -
தப்புகின்றவன் கையில் -
தப்பைக் கொடுத்தது - நாம்
செய்[illegible]
தப்[illegible]ப்பு! தலையாய தப்பு!

இப்படி -
தப்புமேல் தப்பு -
ஏற்படக் காரணம் -
இரண்டு தப்பு;
எது செய்தாலும் -
எடுபடும் என்று - நம்
மனத்தில் இருந்த -
மதப்பு; மிதப்பு!'

என்று -
இரண்டு கைகளால்...
துச்சாதனன் - தன்
தலையில் அடித்துக்கொண்டான்;
அயர்ந்து போய் - பேச்சை
அத்தோடு முடித்துக்கொண்டான்!

அம்மான் சகுனி -
ஆரம்பித்தான் பேச -
அடுத்தபடி; முகம் -
கடுத்தபடி!

'சுயோதனா! நீயென் -
சோதரி மகனா?
அது -
உண்மையாயின் - மன
உளைச்சலுக் கெல்லாம் - நீ
உள்ளாகலாமா? தேள் -
தெள்ளாக லாமா?

அரக்குமாளிகையில் -
அகலமாய் எழுந்த...
தீயோடு - உனது
தாயாதிகள் - தமது
தாயோடு...

மாய்ந்துபோக வில்லையேயென -
நீ
மாய்ந்து மாய்ந்து போகிறாயே!
சாகவேண்டியவர்கள் -
சாகாததைச் சாக்கிட்டு - நீ
சதா சர்வகாலம் சாகிறாயே!

சுத்தமான - ஒரு
சத்திரியனுக்கு...
தோற்பது இகழ்ச்சியல்ல;
தோற்பை தோற்பாக -
ஏற்பது இகழ்ச்சி!

எய்ததோர் அம்பு - இலக்கை
எட்டவில்லை யாயின் -
இன்னோர் அம்பை - உன்கை
எடுத்துப் பூட்டாதோ?
தொடுத்தகுறி -
தப்பினால் - அதை
அடுத்தகுறி -
அடித்து வீழ்த்த மாட்டாதோ?

மீண்டும் - அந்தப்
பாண்டவர் உயிரை -
போக்குவதற் கான -
போக்கைச் சிந்தி; அந்த -
வேலையில் இறங்காது -
வேறென்ன புண்ணியம் -
மூலையில் உட்கார்ந்து -
மூக்கைச் சிந்தி?

துரியோதனா!
துணிச்சலுக்கு -
உன்னிடம் -
உள்ளதா லோபம்?
பின் - ஏன்
பிரலாபம்? அது -
பிறருக்குத்தான் லாபம்!

தேன்ர எடுத்து -
போரை நடத்துவோம்;
பாண்டவர் தம்மை -
பூமியில் கிடத்துவோம்!'

சகுனியின் யோசனை -
சரியான தென்று - கர்ணன்
சான்றிதழ் கொடுத்தான்;
கூடவே -
இம்முறை பாண்டவரை -
எதிர்கொள்ளல் - அவ்வளவு
எளிதல்ல வென்று - ஓர்
எச்சரிக்கையும் விடுத்தான்!

'துரியோதனா! என் -
தோழா!
சகுனி மாமன் -
சொல்வது போல்...
நாகம் ஆகலாமா -
நாங்கூழா?

தருமனும் - அவன்
தம்பியரும்-
தப்பிவிட்டனரே-என
திகைத்து நிற்காதே;
தொடர்ந்து அவர்களை -
பகைத்து நில்; வெல்!
முதுகு சொறியவா - நம்
முண்டாவில் தொங்குகிறது - இரு
மூன்றடி வில்?
ஆனால் ஒன்று; அந்த -
அஞ்சு பேரும் இன்று -
அன்று போல் அன்று!

பாஞ்சாலன் மகளை -
பாணிக்கிரகணம் செய்தபின்...

பெருகியிருக்கிறது -
பாண்டவர் பலம்;
நாம் - அதனை
நினைவில் கொள்வது நலம்!

ஏற்கெனவேயே - நம்
இருவருக்கும்...

துருபதனிடம் -
தோற்ற அனுபவம் உண்டு;
தற்சமயம் - ஒரு
தனயனும் இருக்கிறான் -
தாதைக்குத் துணையாக -
திருஷ்டத்துய்மன் என்று!

ஐவிரல் போலிருக்கும் -
ஐவரின் மேல் - அடுத்தவர்
கைவிரல் படுமாயின்...
அப்பனும் மகனும் -
அதனை அரிவர்;
இதர அரசுகளும் -
இதனை அறிவர்!
எனவே - இனி
எவரும்...

பாண்டவரைத் தீண்ட -
பயப்படுவர்;
அதே நேரத்தில் - இதை நாம்
அனுமதித்தால்...

பாண்டவர் இன்னும் -
பலப்படுவர்!'

இங்ஙனம் -
இருவேறு கருத்துகளை...

கர்ணனின் -
கூறியதும்...

மனத்திற்குள் துரியோதனன் -
முணுமுணுத்துக் கொண்டான்;
மன
உளைச்சலிலிருந்து விடுபட -
ஒருவாய் தேறல் உண்டான்!

பாண்டுவின் பிள்ளைகள் -
பிழைத்திருப்பதையும்;
துரோபதையை மணந்து -
தழைத்திருப்பதையும்...

விதுரன் வந்து -
விவரமாய்ச் சொன்னதும்...

திருதராஷ்டிரன் - அவனைத்
தழுவினான்; விழிக்குளத்தின்
[illegible]த்தால் - அவனைக்
கழுவினான்!

'தம்பி பிள்ளைகளை -
தீதின்றதே என்றுஎன் -
கும்பி கொதித்திருந்த காலை -

விதுரா! நீ வந்து - வாய்
வார்த்தையால் வார்த்தாயடா -
வயிற்றினில் பாலை!

பாலை வார்த்ததால் -
பாவியென் வாழ்வெனும் -
பாலை சோலையானது;
தென்னல் -
பயணிக்கும் சாலையானது!'

பார்வை இரண்டும் -
படு இருட்டாய் - இருக்கும்
புரவலன் பேசினான் - இங்ஙனம்
புனைசுருட்டாய்!

மீண்டும் -
மீண்டும் -

விதுரனை -
வாஞ்சையோடு தழுவிக் கொண்டான்

விழியில்லாதவன்;
விழிவழிபேச - வெளிச்சமெனும்
மொழியில்லாதவன்;
விழியில் லாதவன் -
வெளிச்சம் படினும் - கூச
வழியில் லாதவன்!

அச்சமயம் -
அங்கு வந்தான் - புகழ்
உச்சமயம் -
உற்றிருக்கும்...

குல முதல்வன்;
குளிர்நீரின் புதல்வன்!
திருதராஷ்டிரனின் -
திருத் தோள்களை - தனது
தடக்கையால் மெல்லத் தடவி...

பேசினான் – அந்தப்
பிதாமகன்; அறிவு வெளிச்சம் –
வீசினான் – நல்ல
பிதா மகன்!

'திருதராஷ்டிரனே! நீ –
தருமத்தைக் கடைப்பிடி; அது –
ஒன்றுதான் – உன்
உடன்வரும் கடைவழி!

உன் –
பிள்ளைகளும் – பஞ்ச
பாண்டவர்களும் – இனி
சேர்ந்து வாழ்தல் –
சிரமம்; பாகம் பிரித்து –
கொடுப்பது தான் –
கிரமம்!

துருபதன் தேசத்திலிருக்கும் –
தருமனையும் – அவன்
தம்பியரையும் – அவர்கள்
தாரத்தையும் தாயையும்...
விதுரனை அனுப்பி – இங்கு
வரவழை; அவர்களுக்கு –
பாதிராஜ்ஜியம் கொடு; உன் –
பூமியில் கொட்டும் புகழ்மழை!'

பிதாமகன் –
பீஷ்மனின் கருத்தை...

அட்டியின்றி –
அப்படியே –
ஒட்டிநின்றான் துரோணன்;
ஒப்புமை இல்லா அறவாணன்!

மூத்தோர் மொழியை –
முழு மனத்தோடு
ஏற்றான் – பார்வை
நீத்தோன்; நெடிய –
பால்நிலா வம்சத்தில் –
பிறந்ததால் – புகழ்
பூத்தோன்!

பாஞ்சாலத்திலிருந்து –
பாண்டவரை –
அழைத்து வந்தான்; பாதி –
அரசு தந்தான்!

'காண்டவப் பிரஸ்தம்!' எனும் –
காட்டுப் பகுதி –
பாண்டவர் பூமியாய்ப் போனது;
இதுதான் – பின்பு
இந்திரன் எழுப்பிய –
'இந்திரப் பிரஸ்தம்!' ஆனது!

**(முதல் பாகம் – முற்றிற்று)**







பேசும் சினிமாவும் தானும் ஒரே ஆண்டில் பிறந்ததைப் பெருமையாகக் குறிப்பிடுகிற ரங்கராஜனுக்கு, மாலியைப் போல் சிறந்த சித்திரக்காரராக ஆசை. 'வாலி' என்று பெயர் சூடிக்கொண்டார். எழுந்து நடக்கத் துவங்கிய காலத்திலிருந்து எழுதவும் வரையவும் துவங்கிய இந்த திருவரங்கத்துக்காரர், திரையரங்கத்துக்குள் புகுந்த பிறகு வாழ்க்கை வசப்பட்டது. வசதிப்பட்டது. 'கப்பல்களுக்கு நடுவே நான் கட்டுமரத்தோடு கடலில் இறங்கினேன்' என்று பட்டுக்கோட்டை, கண்ணதாசன் காலத்தில் பாட்டெழுத வந்ததைச் சொல்கிறார்.

தமிழக அரசின் சிறந்த கவிஞருக்கான விருதை நான்கு முறை பெற்றவர். கலைமாமணி விருதை இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்பே தந்து கௌரவித்திருக்கிறது அரசு.

இதுவரை எழுதியது ஏழாயிரம் பாடல்கள் இருக்கும். ஐம்பத்தெட்டில் ஆரம்பித்தது முதல் பாடல். நாற்பது வருஷங்களானாலும் வாலியின் பேனாவுக்கு வயசாகவில்லை. பாட்டெழுதுவதோடு இருபது படங்களுக்கு கதை-உரையாடலும், எட்டுப் புத்தகங்களும் எழுதியாயிற்று. வயசாக வயசாக இளசாகிக் கொண்டிருக்கிற வாலி நடிக்கத் தொடங்கியிருக்கிறார் திரைப்படங்களில்!

அடுத்தடுத்த தலைமுறைகளும் அறிந்துகொள்ள.. ரசித்து மகிழப் படைத்துக் கொண்டிருக்கிற வாலிக்கு முக்கியப் பணிகள் தமிழ் வளர்ப்பது, தாடி வளர்ப்பது. மெட்டுக்கு இட்டுக்கட்டிப் பாட்டுப் போடுவதில் இருக்கிற குஷி வெற்றிலை குதப்புவதிலும் உண்டு.

வாலி, அவர் விரும்பிய மாதிரி சித்திரக்காரராகவில்லை. அந்த வருத்தம் அவருக்கு மட்டுமே இருக்கும்.